# முன்னுரை

விளாதிஸ்லாவ் தித்தோவ் எழுத்தையே தொழிலாகக் கொண்டவர் அல்ல. அவருக்கு முப்பத்து இரண்டு வயது. அவர் சுரங்கத் தொழிலாளர், சுரங்க வேலை நிபுணர், இளங் கம்யூனிஸ்டு. துன்பகரமான ஒரு விபத்து அவரைச் சுரங்கத் தொழிலுக்கு ஏலாதவர் ஆக்கிவிட்டது. வாழ்க்கைப் பரிமேலிருந்தும் அது அவரை என்றென்றைக்கும் வீழ்த்தி விட்டது போல் தோன்றியது. அவர் இரு கரங்களையும் இழந்தார். ஆயினும் அவர் உண்மையான சோவியத் மனிதர் ஆகையால் தம் துர்ப்பாக்கியத்துக்கு அவர் தலைவணங்கவில்லை. செயலூக்கம் உள்ள வாழ்க்கையில் தமக்கு உரிய இடத்தை அவர் தேடினர், அடைந்தும் விட்டார். இப்போது தித்தோவ் மீண்டும் வாழ்க்கைப் பரிமேல் சவாரி செய்கிருர். ''வீரம் விளைந்தது'' என்னும் உலகப் புகழ்பெற்ற நவீனத்தை இயற்றிய நிக்கலாய் ஒஸ்த்ரோவ்ஸ்க்கியே போன்ற விடா முயற்சியுடன் வலிமையும் சித்தசக்தியும்ஆற்றலும் பொங்கஅவர் தம்மைப் புதிய தொழிலுக்குத் தயாராக்குவதில் முனைந்திருக்கிருர். நீங்கள் படிக்கப் போகிற நவீனத்தை அவர் பற்களால் பென்சிலைக் கவ்விய வாறு எழுதினர். நம்புவது கடியமாய் இருக்கிறதா? ஒப்புக்கொள்கிறேன். ஆனல் உண்மை இது தான். மனித உள்ளத்தின் உற்சாகப் பெருக்கில் பிறந்த இந்த நவீனம், இந்தக் காரணத்தால்தான் எல்லாவற்றிலும் பெரிய உண்மையின்—வாழ்க்கையினது உண்மையின் — வன்மையால் நம்மை ஆட்கொள்ளுகிறது. இது தித்தோவின் முதல்

நவீனம். அவர் இன்னும் பல நூல்கள் இயற்று வார் என்று நான் நம்புகிறேன்.

இந்த நூல் எதைப் பற்றியது? இந்தத் தலை முறையைச் சேர்ந்த சோவியத் இளைஞனைப்பற்றி யதா? ஆம், சந்தேகம் இல்லாமல். ஆனால் அவன் அருகில் இருக்கிறாள் அருமையான சோவியத் இள நங்கை. உள்ளங் கவரும் அவளுடைய பாத் திரத்தை விளாதிஸ்லாவ் தித்தோவ் உண்மைப் பெண் ஒருத்தியின் மாதிரியில் படைத்திருக்கிறார்.

தமது முதல் நூலைப் படைத்தபின் இந்த நவீ னத்தின் ஆசிரியர் பென்சிலை வைத்துவிடவில்லை. பென்சில் தமக்குப் புதிய உற்பத்திக் கருவியாகத் திகழும் என்று அவர் நம்புகிறார். மிகவும் கடின மான, சால்பு வாய்ந்த புதிய தொழிலில் சீரிய சுரங்கத் தொழிலாள இளைஞர் விளாதிஸ்லாவ் தித்தோவ் வெற்றி பெறுமாறு வாழ்த்துவோம்.

பொரீஸ் பொலெவோய்

*என் மனைவி ரீத்தாவுக்கு*

# முதல் பாகம்

## 1

வெறுமையான வீட்டில் தனியாய் உட்கார்ந்திருப்பது தான்யாவுக்குஎப்போதுமே சித்திரவதையாய் இருக்கும். அதிலும் இப்போது விசேஷமாக. அவளுக்கு விடுமுறை தொடங்கி இன்று இரண்டாம் நாள். ஸெர்கேயுக்கு எப்போது விடுமுறை கிடைக்கும் என்பதோ இன்னமும் தெளிவுபடவில்லை. இந்த மாதம் விடுமுறை கிடைக்குமா என்பதே சந்தேகத்தில் இருந்தது. அவள் ஒரு மாத விடுமுறையையும் கழித்துவிட்டு வேலைக்குத் திரும்பிய பிறகே ஸெர்கேயுக்கு விடுமுறை கொடுக்கப் படலாம்—எதுவும் நடக்கக் கூடியதுதானே.

தான்யா ஸெர்கேயின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தாள். ஜன்னல் குறட்டில் முழங்கையை ஊன்றியவாறு குட்டையான நெற்றிமயிர்க் கற்றையை விரல்களால் நெருடிக்கொண்டிருந்தாள். நெற்றி மயிரைச் சிறு முறுக்குப் பின்னல்கள் ஆக்கி ஆள்காட்டி விரலில் சுற்றிக்கொள்வாள். முன் மயிர்க் கற்றை முழுவதும் வளையங்களாக விரலில் சுற்றப்பட்டதும் மெதுவாக வளையங்களைப் பிரித்து நேராக்கி விட்டு மறுபடி முதலிலிருந்து தொடங்குவாள். இது அவளுடைய வழக்கம். இதைப் போக்கிக்கொள்ள எவ்வளவோ முயன்றாள், ஆனால் பலிக்கவில்லை. மனத்தில் நிம்மதியற்ற எண்ணங்கள் தோன்றியதுமே கை தானாகவே

முடியை நெருடத் தொடங்கிவிடும். ''என்ன, சின்னக் குழந்தை உலகப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முயல்கிறதோ?'' என்று ஸெர்கேய் ஆரம்பத்தில் கேலி செய்வான். அப்புறம் இதற்குப் பழகிவிட்டான். சில வேளைகளில் தானே கூட முன் மயிரை வளையங்களாக விரலில் சுற்றிக் கொள்வான். தான்யாவின் வழக்கம் அவனுக்கும் தொற்றிவிட்டது!

''விடுமுறையைச் சேர்ந்து கழிக்கலாம் என்று எத்தனை ஆண்டுகளாகக் கனவு காண்கிறோம்! இந்தத் தடவையும் விடுமுறை கொடுக்க மாட்டார்களா என்ன?'' என்று எண்ணமிட்டாள் தான்யா.

ஜன்னல் வழியே பார்த்தவாறு காத்திருந்தாள் அவள்... இதோ ஸெர்கேய் உள்ளே வந்து, ''விடுமுறை கிடைக்கவில்லை... கேட்டாயா, வேலை கடுமை'' என்பான்.

''எனக்குத் தெரியுமே. நீ கையால் ஆகாதவன்'' என்பாள் தான்யா. அவனோ, ''தான்யா, எனக்குப் பசிக்கிறது'' என்பான். ''தானே எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடேன்! நான் விடுமுறையில் இருக்கிறேன் என்பதுதான் உனக்குத் தெரியுமே. ஓய்வு கொள்ள எனக்கு உரிமை உண்டா, இல்லையா?'' என்று அவள் பதில் சொல்வாள்.

இவை எல்லாம் நேரில் நடப்பது போலக் கற்பனை செய்துகொண்ட தான்யாவின் விழிகளில் ஏமாற்றத்தினால் கண்ணீர் ததும்பியது.

## 2

அந்த ஆண்டு வசந்தகாலம் வழக்கத்துக்கு முன்பே வந்துவிட்டது. நீண்ட குளிர்கால இரவுகளில் புதிய சுரங்கத் தொழிலாளர் குடியிருப்பின்

சந்தடியற்ற வீதிகளூடே ஊளேயிட்டு அடித்த வண்ணமாய் இருந்த வெண்பனிச் சூருவளி திடீரென்று வலு இழந்து அடங்கிப் போயிற்று. நரைத்த கூதலுக்குக் கோபம் உண்டாக்கி விடுவோமோ என்று அஞ்சுவது போல மேகத்தின் பின்னிருந்து தயக்கத்துடன் முறுவலித்தது சூரியன். குளிர்காலமோ, மெய்யாகவே கோபத்தைக் காட்டியது. இரவில் அது வீட்டு முகடுகள்மேல் பனிக்கட்டிக் கம்பிகளாகச் சிலுப்பி நின்றது. நீர்க்குட்டங்களில் மெல்லிய பனிக்கட்டித் தகடுகளாக உறைந்து காலடியில் சீற்றத்துடன் நெறுநெறுத்தது. புகையும் சுரங்கமண் குவியலின் உச்சியைக் கொடு மூச்சால் பொசுக்கியது.

அப்புறம் சூரியன் துணிவு அடைந்தது. மேகங்கள் படு வேகமாகச் சிதறி ஓடின. நீல வானம் முகம் மலர்ந்து புன்னகை செய்தது. குளிர்ந்து உறக்கத்தில் ஆழ்ந்திருந்த தரையைக் கதகதப்பான கதிர்க் கரத்தால் தொட்டு எழுப்பியது சூரியன். பள்ளத்துக்கு மேலே எங்கோ துடித்தது வானம்பாடியின் இசையொலி. அது சிவ்வென்று உயரே சென்று அடுத்துவரும் மாற்றங்களை எதிர்பார்த்து ஏங்கியது.

பொத்தான்கள் போடாத மேல்கோட்டு அணிந்த ஒரு பெண் அடர்த்தியற்ற மயிர்க்கற்றை நெற்றிமேல் விழ நின்று, கண்களைச் சுரித்துக் கொண்டு ஆகாயத்தில் வானம்பாடியைக் காண முயன்ருள். அண்ணுந்து நோக்கியபடி நெடு நேரம் அசையாமல் நின்று புன்னகை செய்துகொண்டிருந்தாள் அவள்.

வசந்தம் சுரங்கக் காற்றுப்போக்கியையும் எட்டிவிட்டது. மண் மணம் நிறைந்த காற்று வெறி கொண்டவைபோலச் சுழன்ற விசிறி அலகுகளின்

அருகே ஒரு கணம் தயங்கி நின்றுவிட்டு, சுரங்கத்தின் இருண்டு ஈரித்த வாயிலுக்குள் திடீரென்று பாய்ந்து, குடை வழிக்குள் புகுந்து, நடை பாதைகள் வழியே சென்று வெட்டு முகப்பை அடைந்து, சுரங்கத் தொழிலாளர்கள் வெயிலையும் உயர்ந்த ஆழ்நீல வானையும் எண்ணி இனந்தெரியாத இனிய ஏக்கம் கொள்ளுமாறு செய்தது.

ஸெர்கேய் சுரங்கத் தொழிலாளர் தலைக்காப்பை ஒயிலாகப் பின்னே சாய்த்து அணிந்தவாறு குடை வழியில் நடந்தான். உற்சாகமூட்டும் ஒரு களிப்புக் குரல் கேட்க வேண்டியதுதான், அவன் விரைந்த நடனத்தைத் தனக்குத் தோன்றியபடி களைப்பின்றி ஆடத் தொடங்கிவிடுவான் போல் இருந்தது.

ஸெர்கேய் அவசரப்பட்டான். வேலை காரணமாக அல்ல. இல்லை. காரணம் காட்ட முடியாத களிப்பு அவனை ஆட்கொண்டிருந்தது. விரைவில் சுரங்கத்துக்கு வெளியே வந்து சூரியனை அருகிலிருந்து பார்க்க அவனுக்கு ஆசை உண்டாயிற்று. தவிரவும் அவனுடைய விடுமுறைக்கு ஒப்புதல் தெரிவிக்கும் கடிதம் கையொப்பம் இடப்பட்டுச் சுரங்க இயக்குநர் மேஜைமீது தயாராகக் காத்திருந்தது.

ஸெர்கேயின் பூட்சு நுனி ஒரு பாறைப் படிவுத் துண்டின்மேல் இடறியது. அவன் அதை உதைத்துத் தள்ளிவிட்டுப் புன்னகை செய்தான். அவன் மனத்திரையில் தோன்றினாள் தான்யா. அவனுக்கு விடுமுறை கிடைத்ததை அறிந்ததும் அவள் உவகை பொங்கக் கைகளைக் கொட்டி நர்த்தனம் ஆடுவாள். அப்புறம் பாய்ந்து அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு, ''உன் குரல்வளையை நெரிக்கட்டுமா, படுபாவி?'' என்பாள்.

பிறகு, களிப்பு கொஞ்சம் அடங்கியதும் அவள் உட்கார்ந்து, வரப் போகும் பயணத்தைப் பற்றி (ஏற்கனவே பல தடவைகள் செய்தது போல) இன்னொரு முறை மனக்கோட்டை கட்டத் தொடங்குவாள். ''ஒரு வேளை உன் பெற்றோருக்கு என்னைப் பிடிக்காமல் போனால்?'' என்று தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு கட்டாயம் கேட்பாள்.

''இந்தக் கேள்வி இவளை ஏன் உலப்புகிறது?'' என்று எண்ணமிட்டான் ஸெர்கேய். ''தான்யாவை யாவது பிடிக்காமல் போகவாவது? அதுவும் யாருக்கு? என் பெற்றோருக்கா? அப்படி நேரவே நேராது! ஆனந்த மிகுதியால் அப்பாவின் இடது கண் துடிக்கும், இரண்டு பொய்ப்பற்கள் வெற்றி விழாவுக்காக மினுக்கப்பட்ட பதக்கங்கள் போலப் பளிச்சிடும். ''என் மகன் எப்பேர்ப்பட்ட பட்சி யைப் பிடித்து வந்திருக்கிறான் பார்த்தீர்களா!'' என்று பெருமைப் படுவார்.

குடை வழியின் ஆழத்தில் மினுக்கிட்டது விளக்கு. நனைந்த தண்டவாளங்கள் மேல் சிவப்பு ஒளியைப் பாய்ச்சி, தாங்கு கம்பங்கள்மேல் பட்டது. காந்த முடுக்கு விசைகளின் இணைவுகள் ஒன்றன்பின்ஒன்றாகக் கிளிக்கிட்டன. நீர் தெளிக்கும் பம்பு சீறியது. அதன் மெல்லிய ரப்பர்க் குழாய் கள் உப்பி நீரைத் தெளித்தன. பகுதி வினியோக நிலையத்திலிருந்து இன்னும் சில அடிகள் நடந்த ஸெர்கேய் வியப்புடன் சட்டென நின்றுவிட்டான். சுமையேற்றும் திறப்பின் அருகே எவனோ பாடிக் கொண்டிருந்தான்:

''என் தன்பாஸே, என் தன்பாஸே,
என்றும் தழைப்பாய் இனிய தன்பாஸே...''

பாடியவன் சுரங்க வண்டி ஓட்டி. முன்னர்

எத்தனையோ தடவை கேட்டிருந்த இந்தப் பாட்டு ஸெர்கேயின் உள்ளத்தில் விளங்காத எதிரொலியைக் கிளப்பியது. வேறு எந்த இடத்திலும் ஸெர்கேய் இதைக் கவனித்தே இருக்கமாட்டான். ஆனால் இங்கே, முன்னூறு மீட்டர் ஆழத்தில், குறுகிய இருண்ட நடை பாதையில் இந்தப் பாட்டு எதிர்பாரா விதமாக நெஞ்சைக் கவ்வியது. தரைக்கு அடியில் சிறைப்பட்டு, பூஞ்சற்காளான், எரிவாயு, இவற்றின் சுள்ளென்ற நெடியுடன் கலந்திருந்த வசந்த மணம் மேல் தரையின் விரிந்த பரப்புக்களுக்காக, பூமியின் அமைதி நிறைந்த தொலைவுகளுக்காக, திடீரென்று ஏக்கம் கொண்டு விட்டது போல இருந்தது.

ஸெர்கேயின் நெஞ்சில் உற்சாகம் பொங்கியது. அவன் கண்களுக்கு முன்னே மேலெழும்பி விரிந்து பரந்தது மஞ்சள் புள்ளிகள் நெருக்கமாக நிறைந்த பச்சைக் கம்பளம். இந்தப் புள்ளிகள் மெதுவாக வளர்ந்து எண்ணிக்கையில் பெருகி மென்மையாகக் கிணுகிணுத்தன. காற்றின் கொஞ்சும் வீச்சில் சிலிர்த்த பளிச்சிடும் மஞ்சள் நிறத் தூவி அடர்ந்த தலைகள் இப்போது துலக்கமாகத் தென்பட்டன. அபாயம் நிறைந்த நிசப்தத்தை உற்றுக் கவனித்தவாறு எதையோ அச்சத்துடன் எதிர்பார்த்து அசையாமல் நின்றன அவை. பிறகு, பாரஷூட்டின் விரைந்து நெருங்கிய நிழலிலிருந்து நாற்புறமும் விலகி ஓடின.

''இந்தக் காட்சியை எங்கே பார்த்தேன்? எங்கே?'' என்று நினைவுபடுத்திக்கொள்ளமுயன்றான் ஸெர்கேய். ''அடே, ஆமாம், இராணுவத்தில்! நிச்சயமாக! இராணுவ சேவை முடிவதற்கு முன் கடைசி முறையாக விமானத்திலிருந்து குதித்த போது...''

தரையை நெருங்கியதும்தான் கனத்த இராணுவ பூட்சுகள் அணிந்த கால்களைப் பார்த்தோம் என்பது அவனுக்கு நினைவு வந்தது. கீழே புல் காற்றில் நடுங்கிற்று, சாமந்திப் பூக்கள் அசைந்தாடின. இன்னும் ஒரு நொடியில் இராணுவ பூட்சுகள் மென்மையான, தூவி அடர்ந்த பூத்தலைகள் சிலவற்றை இரக்கமின்றித் துவைத்து நசுக்கி விடும். பூக்கள் உயிர்ப் பிராணிகள் போன்றும், சாவிலிருந்து தப்பி ஓட அவை முயல்வது போன்றும், ஆனால் அவற்றால் முடியவில்லை போன்றும் அவனுக்குத் தோன்றியது...

''சுரங்கப் பாட்டு பாடுறார்...''—பாட்டின் இச் சொற்கள் குடை வழியினூடாக, கனவில்போல அவன் காதில் பட்டன.

...தரை அவனை மீள வகையின்றித் தன்பால் ஈர்த்தது. அவன் பாதங்களை அது கடுமையாகத் தாக்கித்தள்ளியது. ஸெர்கேய் பாங்கின்றித் துள்ளி, பாரஷூட் கயிறுகளைக் கையிலிருந்து விட்டு விட்டு, கண்களை மூடிக்கொண்டு பனித்துளிகள் படிந்து ஈரமாய் இருந்த புல் தரைமேல் உடம்பு முழுவதும் படும்படி பொத்தென்று விழுந்தான். பூக்காம்புகள் முறிந்தன. ஒரு தத்துக்கிளி உரக்க அழுவது போலத் திடுக்கிட்டுச் சிலம்பிற்று. பின்பு சட்டென மௌனமாகிவிட்டது...

கணீரென்று ஒலித்தது தொலைபேசிக் கருவி.

''...கயிற்றைத் தொய்ய விடு!..'' என்று தொலைபேசிக் குழாயில் கத்தினான் வண்டி ஓட்டி.

பக்கத்திலிருந்து தண்ணீர் சொட்டியது. ''நீர்த் துளி! சுரங்கத்துக்கு மேலே போலவே'' என்று புன்னகைத்தான் ஸெர்கேய்.

நடை பாதையில் தவழ்ந்து சென்றவாறே இராணுவ சேவைக் காலத்தில் எப்போதோ நடந்த

நிகழ்ச்சிகளை மறுபடி நினைவுகூர்ந்தான் ஸெர்கேய். கசங்கிய சாமந்திப் பூக்களை அவன் எடுத்துச் சென்றான். ஏழு பூக்கள் இருந்தன. அப்புறம் தன் இராணுவக் கட்டிலின் அருகே இருந்த சிறு அலமாரிமேல் முகப்புவைத்த கண்ணாடித் தம்ளரில் அவற்றை வைத்தான்.

''அப்போதுதான் தான்யாவின் கடிதமும் நிழல் படமும் எனக்குக் கிடைத்தன!'' என்று நினைவு படுத்திக் கொண்டான் ஸெர்கேய்.

தான்யா பக்கவாட்டில் படமெடுத்துக் கொண்டிருந்தாள். எங்கோ தொலைவில் சிந்தனையுடன் நோக்கியவாறு இருந்தாள். அவள் இதழ்க் கோடியில் இளநகை அரும்பிற்று. கடிதத்தில் அவள் பின்வருமாறு எழுதியிருந்தாள்: ''மூன்றாவது வசந்தம் வந்து போய்விட்டது, ஆனால் நீ இன்னும் வரக் காணோம். நான் அலுத்துப் போனேன், ஸெர்கேய்! எப்போதுதான் நாம் சேர்ந்து வாழப் போகிறோம்? எவ்வளவுதான் மண்டையை உடைத்துக் கொண்டாலும் உன் உருவத்தை முழுமையாக நினைவுக்குக் கொண்டுவர முடியவில்லை. இது கெடுதல், இல்லையா? 'எனக்காகக் காத்திருப்பாயா?' என்று கேட்டுவிட்டு நீயே நம்பிக்கை இல்லாமல் புன்னகை செய்தாயே, நினைவு இருக்கிறதா? இப்போதும் நீ சந்தேகிக்கத்தான் செய்கிறாயோ? நீ மட்டும் இப்படி இருந்தாயோ, வேண்டுமென்றே வேறு எவனுக்காவது வாழ்க்கைப்பட்டு விடுவேன், ஜாக்கிரதை!''

''நீ வேறு ஒருவனுக்கு வாழ்க்கைப்பட விட்டு விடுவேனா சற்றே!'' என்று நினைத்து முறுவலித்தான் ஸெர்கேய்.

''இழு!'' என்று மேலே இருந்து முழங்கியது ஒரு குரல்.

சுமையேற்றிக் கன்வேயர் பட்டை விரைத்து எச்சரிக்கையாக இரண்டு தரம் சுண்டி இழுத்த பின்பு பெருத்த கரிப் பாளங்களை இழுத்தவாறு கீழ் நோக்கி ஊர்ந்து சென்றது.

ஸெர்கேய் தவழ்ந்து சென்று அடைந்த வெட்டு முகப்பில் நிலக்கரி வெட்டி ஏற்றும் இயந்திரம் வேலை செய்து கொண்டிருந்தது.

''வேலை எப்படி நடக்கிறது?'' என்று இயந்திர இரைச்சலுக்கும் மேல் கத்தினன் ஸெர்கேய்.

''சுமாராக வெட்டுகிறோம்!'' என்று இன்முகத்துடன் முறுவலித்தான் தொழிலாளி. அவனுடைய கரி படிந்த முகத்தில் வெண்பல் வரிசை பளிச்சிட்டது.

''வேண்டிய அளவு காலி வண்டிகளை அனுப்பித் தொலைத்தார்களானல் இடை நிறுத்தமே இல்லாமல் கரி வெட்டி ஏற்றுவோம்!'' என்று பேச்சில் குறுக்கிட்டான் வேலைக் குழுத் தலைவன் யாத்ஸ்கோ.

''உங்கள் வெட்டு முகப்புக்கு நூறு வண்டிகள் ஒதுக்குவதாகப் போக்குவரத்து அலுவலகத் தலைவர் திட்டக் குழுக் கூட்டத்தில் வாக்களித்தார். போதுமா?'' என்று கேட்டான் ஸெர்கேய்.

''தாராளமாக!'' என்று களிப்புடன் சொன்னன் குழுத் தலைவன்.

ஸெர்கேய் தொழிலாளியின் பக்கம் கையால் சுட்டி, ''புதியவனே?'' என்று கேட்டான்.

''பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு நேரே நம்மிடம் வந்திருக்கிறன். சுரங்கப் பல்கலைக் கழகத்தில் பயிற்சி பெறுகிறன்!..''

முதிய குழுத் தலைவனின் சொற்களில் நல்லியல்பும் சாதுரியமும் தொனித்தன.

''ஆள் எப்படி? தாக்கு பிடிப்பாஞ?''

''மொத்தத்தில் நான் சொல்லக் கூடியது என்னவென்றால்'' என்று நீண்ட பீடிகையுடன் தொடங்கி, ''பையன் உருப்படுவான். சுரங்கத் தொழிலாளிக்கு உரிய பண்பு இவன் இரத்தத்தில் ஊறியிருக்கிறது'' என்றான் யாத்ஸ்கோ.

''அது என்ன பண்பு, மாமா?'' என்று கேலியாக வினவினான் ஸெர்கேய்.

''இதோ பார், ஸெர்கேய், இந்தக் கிண்டலைக் கட்டி வை! கழுத்துக்குப் பின் தண்ணீர் சொட்டினாலும் சரி, எந்த மாதமாவது சம்பளம் கொஞ்சமாய்க் கிடைத்தாலும் சரி, இவன் வேலையை விட்டு ஓட மாட்டான். இந்த இயற்கைச் சூழ்நிலை மேல்—இது அவனே கொடுத்த பெயர்தான்—இவனுக்கு ஒரே காட்டம். 'இதைக் கட்டுப்படுத்த வேண்டும்' என்கிறான். சிலர் இவனைக் கேலி செய்கிறார்கள். ஆனால் நான் நம்புகிறேன். நம்பாமல் எப்படி இருப்பது? இவனுடைய அப்பன் என் நண்பன். அவனும் இவனைப் போலவே பிடிவாதக்காரன். நாற்பத்தாறும் வருஷத்தில் வெட்டு இயந்திரத்தைக் காப்பாற்றப் போனான்... இயந்திரத்தைச் சேதம் இல்லாமல் காப்பாற்றிவிட்டான். ஆனால் தன்னையோ... சுரங்கக் குழி வாயிலின் பக்கத்தில் நிற்கிறதே, நினைவுத்தூண், பார்த்திருக்கிறாய் அல்லவா? அங்கேதான் அவன் இருக்கிறானும் நானூறு மீட்டர் மண்ணுக்கு அடியில், சுரங்கச் சுற்றாய்வாளர்கள் சொல்லுகிறார்கள்... படைவீரன் புகழ்பெற்றவன், ஆனால் அவனுடைய கல்லறையோ... அது எங்கே இருக்கிறது என்று நிச்சயமாக யாரால் சொல்ல முடியும்?''

புதியவன் கொந்தாலியால் ஓங்கிப் போட்டு, விளக்கு வெளிச்சத்தைத் திருப்பி, தாங்கு கம்பம்

நாட்டுவதற்காகக் குழி தோண்டுவதில் ஆவேசத்துடன் முனைந்தான்.

''நல்ல பையன்'' என்று வெட்டு முகப்பு ஓரமாகத் தவழ்ந்து சென்றவாறே எண்ணமிட்டான் ஸெர்கேய். ''ஆத்திரத்தோடு வேலை செய்கிறான். இவன் மாதிரி ஆட்கள் பூமியையே ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை குடைந்து விடுவார்கள். இம்மாதிரி ஆட்களைத்தான் வேலைக் குழுவில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.''

இப்படி எண்ணும்போதே இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்தின் சுரங்கக் கமிட்டிக் கூட்டம் அவனுக்கு நினைவு வந்தது. இளங் கம்யூனிஸ்ட் யுவர்களின் வேலைக் குழு அமைப்பது பற்றிக் கமிட்டி உறுப்பினர்கள் ஒரே மாதிரிக் கருத்து கொண்டிருந்தார்கள். அனுபவசாலிகளும் நன்றாக வேலை தெரிந்தவர்களுமான தொழிலாளர்களைக் கொண்டு இந்த வேலைக் குழு அமைக்கப்பட வேண்டும் என்பது அந்தக் கருத்து. ஆனால் கமிட்டியின் கடைசிக் கூட்டத்தில் எல்லாம் தலைகீழ் ஆகிவிட்டது.

''தலைமைப் பொறி இயலாளர் நமக்குச் சரியான சூடு கொடுத்தார்!'' என்று நினைத்துப் பார்த்துப் புன்னகை செய்தான் ஸெர்கேய்.

கூட்டம் முழுவதிலும் தலைமைப் பொறி இயலாளர் தம்முடைய நோட்டில் கொம்புகளும் குளம்புகளும் உள்ள குட்டிப் பேய்களின் படங்களை வரைந்தவாறு பேசாமல் உட்கார்ந்திருந்தார். இளங்கம்யூனிஸ்டுகளின் கருத்துக்கு அவர் இணங்கிவிட்டார் போலவே தோன்றியது. ஆனால் வேலைக் குழுவுக்குத் தொழிலாளர்களின் பெயர்கள் பிரேரிக்கப்படும் கட்டம் வந்ததும் அவர் திடுதிப்பென்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார்:

''சிறந்த இயந்திரங்களை யாரிடமிருந்து பறித்துக் கொள்ளப் போகிறோம்?''

''பறித்துக்கொள்வதா? அப்படி என்றால்?'' என்று எவனோ திருப்பிக் கேட்டான்.

''அப்படித்தான்!'' என்று புன்னகை செய்தார் தலைமைப் பொறிஇயலாளர்.

இளங் கம்யூனிஸ்டுகள் சங்கச் செயலாளன் ராஃபிக் மமேதொவ் ஏதோ சொல்ல வாய் எடுத்தவன், பின் மண்டையைச் சொறிந்துகொண்டு பேசாது இருந்துவிட்டான். கூட்டம் நடந்த அறையில் நிசப்தம் குடிகொண்டது. பொறி இயலாளர் எழுந்து நோட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு கொஞ்சம் கிண்டலாகவும் கொஞ்சம் ஆழ்ந்த முறையிலும் சொன்னார்:

''மற்ற வேலைக் குழுக்களிலிருந்து சிறந்த தொழிலாளர்களைப் பறித்துக்கொள்ள எப்போது நிச்சயித்துவிட்டோமோ, அப்போது கடைசிவரை அதற்கு இசைய நடந்துகொள்ள வேண்டும். மற்றக் குழுக்களிடமிருந்து சிறந்த வெட்டு இயந்திரங்கள், குடைவு பொறிகள், கன்வேயர்கள் முதலியவற்றையும் பிடுங்கிக்கொள்வோமே...'' அவர் ஒரு நிமிடம் பேச்சை நிறுத்திவிட்டு மேஜையைச் சூழ அமர்ந்திருந்தவர்கள் மீது மெதுவாகக் கண்ணோட்டினார். ''உங்கள் தோழர்களையே நீங்கள் சூறையாடப் பார்க்கிறீர்கள்! நீங்கள் பறித்துக் கொள்ள நினைக்கிறீர்களே, சிறந்த தொழிலாளர்கள், அவர்களைப் பயிற்றியது யார், ஊம்?''

தலைமைப் பொறிஇயலாளர் சொன்னது சரி என்று ஸெர்கேயுக்கு உறுதியாகப் பட்டது. கூட்டம் தொடங்குவதற்கு வெகு நேரம் முன்பே எதனாலோ இப்படிச் செய்யக் கூடாது, எல்லாம்

மட்டுமீறிச் சுளுவாக நடக்கிறது என்ற எண்ணம் அவன் மனதில் எழத்தான் செய்தது. ஆனால் தோழர்களின் எண்ணம் வேறாய் இருந்தது, தன் இசைவின்மைக்குத் தகுந்த சான்றுகள் அவனுக்குக் கிடைக்கவில்லை.

''மடத்தனம் செய்துவிட்டார்கள். தலைவர்களாம், வெட்கக் கேடு!.. ஏன் அப்படி? வெறும் பேச்சு வேகத்தில் இந்த உண்மையைக் கவனிக்காமல் விட்டுவிட்டார்களோ?'' என்று எண்ணமிட்டான் ஸெர்கேய்.

குறுகிய இடைவழியின் ஊடாகச் சிரமத்துடன் உடலை நெளித்து வெளிவந்து காற்றுப் போக்கிக் குடை வழியை அடைந்தான். குடைவழியின் வெட்டு முகப்பில் வழிகுடையும் தொழிலாளர் குழு வேலை செய்துகொண்டிருந்தது.

''ஈகர்!'' என்று குரல் கொடுத்தான் ஸெர்கேய்.

ஒளிக் கற்றை விட்டத்தின் அடிவரை உயர்ந்து, குடை வழியில் இங்குமங்கும் அலைந்து விட்டு ஸெர்கேய் மேல் நிலைத்தது.

''என்ன விஷயம்?'' என்று கேட்டான் நெட்டையான ஒரு இளைஞன்.

''வெட்டு முகப்பிலிருந்து வெளிவரும் வழி அமைத்தது யார்?''

''நாங்கள்தாம். ஏன்? குறுகலாய் இருக்கிறதோ?''

''சட்டென்று புரிந்து கொண்டு விட்டாயே, சமர்த்து!''

''இதோ சரிப்படுத்திவிடுவோம், அகலமாக்கி விடுவோம்.''

''உடனே அகலமாக்குங்கள். இன்றைக்குத் தான் சுரங்கத்தில் வேலை செய்யத் தொடங்கி

இருக்கிறீர்களா என்ன, சைத்தான்களா! நேற்றுத் தானே இளங் கம்யூனிஸ்டுகள் கூட்டத்தில் பாதுகாப்பு விதிகளைப் பற்றிச் சொன்னார்கள். ஒரு காதில் வாங்கி மறு காது வழியே விட்டுவிட் டீர்களே!''

முறை வேலை நேரம் முடியவிருந்தது. எல்லா இடங்களும் சரி பார்க்கப்பட்டுவிட்டன. இப் போது ஸெர்கேய் நிதானமாகக் குடைவழியில் நடந்தான். சற்று நேரத்துக்கு முன் அவனை ஆட் கொண்டிருந்த வசந்தகால உற்சாகப் பெருக்கின் இடத்தில் அவசரம் அற்ற, கனவு நிறைந்த சிந்தனை அவன் மனத்தில் எழுந்தது. சுரங்கத் தொழி லாளர் குடியிருப்பின் வீதிகளில் இளங்கம்யூனிஸ்டு கள் ஊன்றியிருந்த மரக்கன்றுகள் தளிர்க்கத் தொடங்குவதை அவன் மனக் கண்ணால் துலக்க மாகக் கண்டான். அவை வளர்ந்து இலைகள் அடர்ந்து தழைக்கும் காலத்துக்குள் அவனுக்கும் தான்யாவுக்கும் ஒரு மகன் கட்டாயமாகப் பிறந் திருப்பான். வேடிக்கையான மொழுமொழுக் குழந்தை! ஸெர்கேயும் தான்யாவும் அவனுடன் சந்தடியற்ற மரச்சாலையில் உலாவியவாறு, சில ஆண்டுகளுக்கு முன்னால் இந்த இடம் எப்படி வெட்ட வெளியாக இருந்தது என்று பேசிக்கொள் வார்கள். அதற்குள் அவர்களுடைய சுரங்கம் கம் யூனிஸ முறையில் வேலை செய்யும் சுரங்கம் ஆகி விடும். கட்டாயம்! பார்வையாளர் மேடைகளும் ஓட்டப் பாதைகளும், காற்பந்தாட்ட மைதான மும் வாலிபால் சதுக்கமும் அமைந்த விளையாட்டு அரங்கு குடியிருப்பில் கட்டுவோம்... விடுமுறை யை நினைவு கூர்ந்ததும் ஸெர்கேயின் உணர்ச்சி கூறுபட்டது. மகிழ்ச்சியை மங்கச் செய்தது சந்தேகம். ''வேலை மேம்பாடு, சுயேச்சையான

இலவச உழைப்பு, அது, இது என்று ஆரம்பித்து வைத்துவிட்டு இப்போது கம்பி நீட்டிவிட்டான் பார்...'' என்று தோழர்கள் சொல்வார்களோ? இல்லை, அவர்கள் இப்படிச் சொல்ல மாட்டார்கள். நண்பர்கள் நமக்காக மகிழ்வார்கள். ஆகா, வாழ்க்கைதான் எவ்வளவு இன்பமானது!.... வசந்தம்... தான்யா... விடுமுறை... அப்புறம் மறுபடி வேலை, சுரங்கம், நண்பர்கள்...

ஆனால் விடுமுறையில் செல்ல ஸெர்கேய் பெத்ரோவுக்கு வாய்க்கவில்லை... இளங் கம்யூனிஸ்ட் யுவர்கள் வேலைக்குழுவுக்கு கம்யூனிஸ முறையில் உழைக்கும் வேலைக் குழு என்ற பட்டம் வழங்கப் பட்டபோது நண்பர்களிடையே அவன் இல்லை. சுரங்கத் தொழிலாளர் குடியிருப்பின் சந்தடியற்ற வீதிகளில் தழைத்துச் சலசலக்கும் மரங்கள் அவன் கைகளால் நாட்டப்படவில்லை...

## 3

ஒரு வண்டி தண்டவாளத்திலிருந்து தடம் புரண்டு விலாப்புறமாக விழுந்தது. அதன் விளிம்பு இரும்புத் தாங்கு கம்பத்தில் பொருத்தியிருந்த கவசமிட்ட மின்கம்பி வடத்தைச் சதைத்துவிட்டது. தானியங்கிக் காப்பு அமைப்பு வேலை செய்யவில்லை. மின்னோட்ட முறிவின் விளைவாக விற்பொறி வெள்ளைத் தீவர்த்திபோலக் குபீரென்று எரிந்தது. நீல நெருப்புப் பாம்பு உக்கிரமாகச் சீறியவாறு மின்மட்ட மாற்றியை நோக்கிக் கம்பி வடத்தில் ஊர்ந்து சென்றது. இன்னும் சில விநாடிகளில் அது மின்மட்ட மாற்றி அறையை அடைந்து விடும்... அவ்வளவுதான்,பெரு விபத்து நிகழும். மின்மட்ட மாற்றி வெடிக்கும்! கிழக்குப் பகுதியின்

வெளியேறு வாயில் முழுவதும் சரிந்து விழுந்து விடும். நெருப்பு பற்றி எரியும்! வெட்டு முகப்புக் களிலும் நடைபாதைகளிலுமோ, ஆட்கள். சீக்கிரம்!

''மின்னோட்டத்தை நிறுத்திவிட வேண்டும்!'' ஸெர்கேய் மின்மட்ட மாற்றி அறைக்குப் பாய்ந்து ஓடினன். ''பிடியை அது கிளிக்கிடும்வரை இடப் புறம் சாய்க்க வேண்டும். மின்கல மேற்பகுதியி லும் அழுத்தம் மிக்க மின்னோட்டம் கட்டாயமாக இருக்கும்.''

விரைப்பாகக் கோணல் மாணலாகச் சென்று உடலை அம்பு போல் துளைத்த நூல்கள் விருவுடன் நடுங்கியவாறு புரி வடிவில் சடசடப்புடன் திருகி, கைகளிலும் தலையிலும் கால்களிலும் திருகாணி கள் போலக் குடைந்தன. பல் கோடிக் கணக்கான புரிகள். உடம்பின் ஒவ்வோர் அணுவிலும் குடைந் தன அவை. நேராவதும் சுருள்வதும் குடைவதும் நடுங்குவதுமாக இருந்தன அவை. மின்மட்ட மாற்றியின் பக்கம் அவை இழுத்தன. அங்கேயோ சாவு. கண மரணம். சாம்பலாக வேண்டியது தான்...

''பயங்கரக் கனவு! சட்டென்று விழித்துக் கொள்ளவேண்டும்!''—ஸெர்கேய் கத்தவாயெடுத் தான். ஆனல் நாக்கில் புரிகள்! அது காந்திற்று. திகில் உண்டாயிற்று.

''ஆ-ட்-க-ளே!''—கத்தல் மூளையிலேயே சிக்கிக் கொண்டது. ''ஏ-ஏ-ஏ!'' என்ற ஒலி தொண் டைக்கு வந்து அங்கேயே வலிப்புடன் நெரிந்து போயிற்று.

''அப்பால் தள்ள வேண்டும்!'' ஆனல் கைகள் கீழ்ப்படிய மறுத்தன.

புரிகள் சட்டென்று நேராகி நடுங்கும் நூலாக இணைந்தன. மூளையில் ஏதோ வெடித்துச் சுழற் காற்றாகச் சுழன்றது.

''ஆ-ஆ-ஆ!'' என்று இரைந்தது சுழற்காற்று.

விளக்கு அணைந்து விட்டது. நூல் நடுங்குவது நின்றுவிட்டது.

''இங்கே மின்னழுத்தம் ஆறாயிரம் வோல்ட் அல்லவா!''

''உதவிக்கு வா-ரு-ங்-கள்!'' குரல் கம்மிற்று. மூச்சு திணறிற்று. ''பக்கத்தில் எங்கோ தொலை பேசி உண்டே.''

ஸெர்கேய் எழுந்து சில அடிகள் முன்னே நடந்த வன் நீர்த்த, குளிர்ந்த சேற்றில் முகங் குப்புற விழுந்தான்.

''எழுந்திருக்க வேண்டும், எழுந்திருக்க வேண் டும், எழுந்திருக்க வேண்டும்'' என்று தனக்கே கட்டளையிட்டான் ஸெர்கேய். ஆனால் அவன் உடல் கீழ்ப்படிய மறுத்தது. ''மின்னோட்டம் நிறுத்தப் பட்டு விட்டது. ஆனால் கம்பி வடம் இன்னும் எரிந்து கொண்டிருக்கிறதே.''

ஸெர்கேய் முழங்கால்களை ஊன்றி எழுந்து சில மீட்டர்கள் தவழ்ந்து சென்று நீல நெருப்புப் பாம் பின்மேல் ஈர உடம்பு பட விழுந்தான்.

குடை வழி தோண்டுபவர்கள் அவனைத் தேடிக் கண்டார்கள். மின்மட்ட மாற்றி அறையிலிருந்து ஒரு பத்து மீட்டர் தூரத்தில் கம்பி வடத்தின் மேல் விழுந்து கிடந்தான் அவன். மெதுவாக முனகி, தண்ணீர் வேண்டும் என்று கேட்டான். அவ னுடைய விழிகள் அகலத் திறந்திருந்தன. வியப் புடன் மேலே பார்த்துக்கொண்டிருந்தன அவை. அவன் வலது காலில் ரப்பர் பூட்சு எரிந்து கொண் டிருந்தது. ஆட்கள் பூட்சைக் கழற்ற முயன்ற

போது ஸெர்கேய் வீரிட்டுக் கண்களை மூடிக் கொண்டான்.

''தண்ணீர்!''

கோல்யா கொஞ்சரோவின் கை நடுங்கிற்று. அவனுடைய பாத்திரத்திலிருந்து தண்ணீர் ஸெர் கேயின் மோவாய் மேலும் கன்னங்கள் மீதும் சிந்தி, கழுத்துக்குப் பின் வழிந்து, முகத்தின்மேல் வெள்ளைக் கோடுகள் இட்டது.

''தோழர்களே, நான் உயிரோடு இருக்கிறேனா?'' —ஸெர்கேய் தலையை உயர்த்தியவன், உடனே அதைத் தரையில் போட்டுவிட்டான். ''தண் ணீர்!..''

''ஸெர்கேய், பொறுத்துக்கொள் சற்றே. நீ இவ்வளவு நிறையத் தண்ணீர் குடிக்கலாமோ, கூடாதோ...'' கோல்யாவின் குரலில் கெஞ்சலும் வேண்டுகோளும் இரக்கமும் தொனித்தன.

மணி அடித்தது, விரைவாக, கலவரத்துடன். சுரங்க ஏறு கூண்டை இயக்குபவன் எச்சரிக்கை அடைந்து இருக்கையில் உறுதியாக அமர்ந்தான்.

...ஆறு, ஏழு—இல்லை, அவன் பிசகு செய்ய வில்லை. குறிப் பலகைமீது எரிந்தது ''7'' என்ற இலக்கமிட்ட விளக்கு. இது அரிதாகவே எப்போ தாவது தான் எரியும். அதனால்தான் போலும், சொந்தம் அற்றதாகவும் பயங்கரமாகவும் காணப் படும் அது. ஏழாம் எண் குறிப்பது என்னவென் றால், ''இயக்குபவனே, கூண்டை மிக மிகப் பதபாக மாக மேலே செலுத்து. காயமடைந்த சுரங்கத் தொழிலாளி கூண்டில் இருக்கிறான்...''

சுரங்க ஏறு கூண்டு எஃகு வடத்தில் தொங்கிய வாறு அலுங்காமல் மேலே சென்றது. உள்ளே

பாய்ந்த காற்றுப் பெருக்கு உஷ்ஷென்று சீழ்க்கை அடித்துச் சிறு தூவானத்தைச் சிதறியது. தூவானத்தில் வசந்தத்தின் மணமும் சுரங்கப் புகு வாயில் அருகே அடிக்கும் அழுகல் வாடையும் கலந்திருந்தன. கோல்யா கொஞ்சரோவ் மண்டியிட்டு, நண்பனின் தலையை ஜாக்கிரதையாக மடிமேல் வைத்துக்கொண்டிருந்தான்.

ஸெர்கேய் விழிகளைத் திறந்து, தன்னைக் குனிந்து நோக்கிக்கொண்டிருந்த முகங்களைக் கண்டான்.

''இவர்கள் ஏன் பேசாமல் இருக்கிறார்கள்? என்ன நடந்தது? இது நனவு தானா? மின்கலத்தில் ஆறாயிரம் வோல்ட் மின் அழுத்தம் இருந்ததே. இது கனவு இல்லை என்றால் நான் இறந்துவிட்டேன். என்னை எழுப்புங்களேன்!'' ஸெர்கேய் கையை உயர்த்த முயன்றான். அவன் முகம் வலியால் சுளித்தது. கணப்போது தெளிவான உணர்வு அவனுக்குத் திரும்பியது. ''எனக்கு நேர்ந்துவிட்டதா என்ன?...'' திகில் அவன் உடல் முழுவதிலும் பரவிற்று. இருதயம் சுருங்கி இறுகிற்று, திடீரென நின்றுவிட்டது. ''எல்லோரும் மௌனம் சாதித்தார்கள்...''

சுரங்கத்தில் விபத்து நேரும்போது சுரங்கத் தொழிலாளர்கள் கடுகடுவென்று மௌனம் சாதிப்பது வழக்கம்.

ஏற்பு மேடை அருகே வந்து நின்றது கூண்டு. பளிச்சென்ற வசந்தகால வெயில் கண்களைக் கூசச் செய்தது. காதுகளில் அழுத்தமும் மூக்கில் அரிப்பும் உண்டாயின. பக்கத்தில் செஞ்சிலுவைக் குறி பொறித்த கார் திறந்த கதவு வழியே ஸெர்கேயுக்குத் தென்பட்டது. சிலுவை பிரமாண்டமான சிலந்திபோலப் பாங்கின்றித் திரும்பி,

சிவப்புக் கால்களை முகம்வரை நீட்டி, ''அகப் பட்டுக்-கொண்டாயா-ஆ...'' என்று கரகரத்த குரலில் கத்தியது.

''ஹா-ஹா-ஹா'' என்று மேலே எதுவோ கிறீச்சிட்டுக் கெக்கலித்தது.

மிக மிகச் சிறியவனுகச் சுருங்கி, செஞ்சிலந்தியிடமிருந்தும் பயங்கரமாகக் கிறீச்சிடும் நகைப்பிலிருந்தும் தப்பி ஓடி மறைந்துகொள்ள ஸெர் கேயுக்கு ஆசை உண்டாயிற்று.

சிலந்தியோ அவன் கையைப் பிடித்து, கண்களை வலிக்கும்படி அழுத்திவிட்டு, திண்ணிய சிவப்புச் சக்கரமாக வெறியுடன் சுழன்றது.

''பெத்ரோவ், பெத்ரோவ்!'' என்ற குரல் தொலைவில் எங்கிருந்தோ வந்தது. சக்கரம் கறுப்பாகிவிட்டது.

''ஆகா, எப்பேர்ப்பட்டவன்!.. விசையைத் திருப்பிவிட்டான் பாரேன்!.. நிச்சயமான சாவை எதிர்கொள்ளப் போனுன்... கைகள், கைகள்... ஜாக்கிரதையாக...'' குரல்கள் ஒன்று கலந்து செங்கறுப்புப் பனிமூட்டத்தில் மூழ்கின.

மருத்துவ விரைவுதவிக் காரின் டிரைவர் கதவுகளை மடாரென்று சாத்திவிட்டுத் தன் இடத்துக்கு ஓடினுன். கார் புறப்பட்டு இளகு பனி நீரையும் ஈர வெண்பனியையும் வாரி இறைத்தவாறு வசந்தகால நீர்க்குட்டங்கள் வழியே விரைவாக நகரின் ஊடே சென்றது.

பொத்தான்கள் போடாத மேல்கோட்டு அணிந்த பெண் முன்போலவே சாலையோரமாக நின்று வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். செஞ்சிலுவைக் காரின் சங்கொலி கேட்டு அவள் ஒரு புறம் ஒதுங்கி அதன் பின்னே பார்க்கலானுள்:

அவளுடைய விழிகளில் கலவரம் தோன்றியது. உதடுகளோ, இன்னும் புன்னகை செய்துகொண்டிருந்தன...

ஆகாயத்தில் வானம்பாடி இசைத்தது. நீர்க் குட்டங்கள் இரு பக்கங்களிலும் விலகிப்பிரிந்தன. அதன்பின் வெகு நேரம் வரை அவை உடைந்த சூரியத் துண்டுகள் ஒளிரக் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

நோய் விவர நமூனுவில் சில வரிகள்: ''பெத்ரோவ் ஸெர்கேய். மின் சூட்டுப் புண் 4-5வது படி. இரண்டு கைகளிலும் வலது பாதத்திலும். ஆழ்ந்த அதிர்ச்சி நிலையில் விரைவுதவிக் காரில் கொண்டுவரப்பட்டார்.''

அவசர மருத்துவ ஆலோசனைக் கூட்டம் சற்று நேரத்திலேயே முடிந்துவிட்டது.

''நம்பிக்கைக்கு அவ்வளவாக இடமில்லை. நோயாளியின் நிலைமை மிக மிக மோசம். சாவு எந்தக் கணமும் நேரலாம். ஆறுயிரம் வோல்ட் மின்னேட்டம் தாக்கிய பின்பும் இந்த ஆள் உயிரோடு இருப்பது அதிசயம். நமது கடமை நம்மால் முடிந்ததை எல்லாம் செய்வதுதான்...'' — தலைமை மருத்துவர் நோய் விவர நமூனுவை அப்பால் நகர்த்திவிட்டு, ''எல்லாம் நலமே முடியும் என்று நம்புவோம்... வலேரிய் இவானேவிச் கொர்யுனேவைச் சிகிச்சை மருத்துவராக நியமிக்கிறேன்'' என்றார்.

## 4

தான்யா ஜன்னல் அருகே நின்று வெளியே பார்த்த வண்ணமாய் இருந்தாள்.

சுரங்க வாயிலிலிருந்து நீண்ட ஆட்களின் வரிசை வர்வரக் குறுகிக்கொண்டே போயிற்று.

இறுதியில் அது முற்ருக அறுந்து விடும். கைக்கடிகாரம் டிக்-டிக் என்று விஞடிகளை எண்ணியவாறு அடித்துக்கொண்டிருந்தது. தான்யாவுக்கு எரிச்சலாய் வந்தது.

''மறுபடியும் ஸெர்கேய் ஏதேனும் கூட்டத்திற்குப் போயிருப்பான்!''

சாலையில் சில ஆட்கள் கூட்டமாகக் காணப்பட்டார்கள். கைகளை வீசி ஆட்டியவாறு நடந்தார்கள் அவர்கள். எதையோ பற்றி விவாதித்தார்கள் போலும். ஸெர்கேயும் அந்தக் கூட்டத்தில் இருந்ததாகத் தான்யாவுக்குப் பிரமை உண்டாயிற்று. நன்ருகக் கூர்ந்து நோக்கியவள், இன்னும் அதிக எரிச்சல் அடைந்தாள். இங்கும் ஸெர்கேயைக் காணேம். ஆட்கள் கடந்து போய்விட்டார்கள். சாலை மீண்டும் வெறுமை ஆகிவிட்டது.

ஜன்னல் வழியே சுரங்கக் கற்குவியல் தெரிந்தது. அதன் உச்சியை நோக்கி மெதுவாக ஊர்ந்தது வண்டி. உச்சியை அடைந்ததும் அது கண நேரம் நின்று சுமையைச் சரித்தது. பெரிய பாறைப் படிவுத் துண்டுகள் வண்டியிலிருந்து சிதறி, கீழே உருண்டு சென்று, குவியலின் அடிவாரத்தில் தேங்கியிருந்த நீர்க் குட்டத்தில் சளப்பென்று விழுந்தன. நீர்த்துளிகள் தெறித்தன. வண்டியோ, மறு சுமை ஏற்றி வருவதற்காக மீண்டும் இறங்கி ஓடியது.

''சுரங்கக் கற்குவியலையும் 'உழைப்பாளி வண்டி' என்று அவன் அழைத்த இந்த வண்டியையும் பார்த்துக்கொண்டிருப்பது ஸெர்கேயுக்குப் பிடித்த பொழுதுபோக்கு.''—இவ்வாறு நினைத்துத் தான்யா புன்னகை செய்தாள். குளிர் காலத்தில் ஒரு நாள் கணவன் எதிர்பாரா விதமாகச் சிடுசிடுப்புடன் காணப்பட்டது அவள் நினை

வுக்கு வந்தது. அப்போது அவள் கவலை கொண் டாள். வேலை இடத்தில் ஏதேனும் விரும்பத்த காதது நிகழ்ந்திருக்குமோ என்று எண்ணினுள். ஆனுல் பனிப்புயல் அடங்கியதும் ஸெர்கேய் ஜன் னலருகே சென்று அந்த வண்டியைக் கண்டு வாய் விட்டுச் சிரித்தான். பிறகு ஆழ்ந்த குரலில் சொன் ஞன்: ''அப்படிப் பார்க்கத்தக்கதாக ஒன்றுமே இல்லை போலத் தோன்றுகிறது. உடைந்த கற்கள் குவிந்த மலை தானே... ஆனுல் எண்ணிப் பார்த் தாலோ... இது வாழ்க்கையே அல்லவா? அறிவார்ந் தது, அக்கறைக்கு உரியது, என்றும் வாழ்வது. லட்சோப லட்சம் ஆண்டுகள் கழிந்துவிட்டன. லட்சோப லட்சம்!... உழைப்பு குரங்கு மனிதனை நிலவுலகின் தலைசிறந்த அறிவுள்ள பிராணி ஆக்கி யிருக்கிறது லட்சோப லட்சம் ஆண்டுகள்!.. இந்த அனந்த காலத்தில் நம் வாழ்க்கை எவ்வளவு அற்பமானது, குறுகியது! ஒரு கணம் போல... நேற்று ஒரு மடையனின் அஜாக்கிரதை காரண மாக வெட்டு முகப்பில் முழுதாக ஒரு மணி நேரம் வேலை நடக்கவில்லை. இந்த ஒரு மணி அனந்த காலத்தில் வெற்றிடமாக விளங்கும்! வருத்தம் உண்டாகிறது!''

''வேடிக்கையான ஆள் அவன்'' என்று எண் ணினுள் தான்யா.

ஒரு நீலக் கார் தன் வீட்டெதிரே வந்து நின்றதைத் தான்யா கவனிக்கவில்லை. கதவுகள் திறந்து மூடப்படும் சத்தம் கேட்டது. காரிலிருந்து இறங்கியவர்கள் தன் வீட்டை நோக்கி அவசர மாக வருவதைத் தான்யா கண்டாள்.

''இவர் ஸெர்கேயின் தலைமை அதிகாரி ஆயிற் றே... அவர்களுடைய பகுதியில் வேலை செய்யும் கிழவரும் வருகிருர். ஆனுல் ஸெர்கேய் எங்கே?''

சட்டென்று தான்யாவின் மூளையில் சுருக்கென்று தைத்தது ஒரு கருத்து. அவள் முகத்தில் இரத்தம் குப்பென்று ஏறியது. நெஞ்சு படபடத்தது, பின்பு இருதயம் பந்தாய்ச் சுருண்டு இறுகி, சட்டென்று நின்றுவிட்டது.

''அவர்கள் நம் வீட்டுக்கு வரவில்லையோ என்னவோ. எதற்காக நான் இப்படிப் பதைக்கிறேன்?''

கதவு தட்டப்பட்டது. அந்த ஓசையால் அறையே அதிர்வதுபோல் இருந்தது தான்யாவுக்கு. அவள் குளிர்ந்த கன்னங்களைக் கைகளால் அழுத்திக் கொண்டாள். ''கதவைத் திறக்க மாட்டேன்!'' என்று தர்க்கப் பொருத்தமின்றி நினைத்தாள்.

கதவு தயக்கத்துடன் மீண்டும் தட்டப்பட்டது. ஆட்கள் தணிந்த குரலில் பேசிக்கொள்வது கேட்டது.

''திறக்காமல் தீராது.'' கைகள் நடுங்கின, தாழ்ப்பாள் கைகளுக்குத் தட்டுப்படவே இல்லை. கடைசியில் பியோத்தர் பாவ்லவிச்சும் கிழ ஃபோர்மன் குஸ்மீச் தாத்தாவும் இழவு வீட்டில் புகுவதுபோலத் தொப்பிகளைக் கழற்றிக் கைகளில் வைத்துக் கொண்டு மெதுவாக உள்ளே வந்தார்கள். ஏதோ பயங்கரம் நிகழ்ந்திருக்கும் என்று தான்யா அக்கணமே புரிந்து கொண்டாள்.

''ஸெர்கேயுக்கு என்ன நேர்ந்தது?'' என்று வீரிட்டு அழத் தொடங்கினுள்.

தலைக்குட்டையை எடுப்பதற்காக அலமாரியின் பக்கம் சென்றுள் தான்யா, ஆனுல் அவள் கால்கள் துவண்டன, கண்கள் இருண்டன.

''அழாதே, மகளே. ஆண்டவன் அருள்வான், எல்லாம் நேராகிவிடும்.''—குஸ்மீச்சின் குரல் தழுதழுத்தது, முதுமை காரணமாக நடுங்கிற்று. அந்தக் குரலில் தொனித்தது நம்பிக்கையா அனு

தாபமா என்று புரியவில்லே. கிழவருடைய கரடு தட்டிய பெரிய உள்ளங்கை கன்னத்தைப் பாங் கின்றி வருடியது. ''கவலேப் படாதே... மருத்து வர்கள் திறமைசாலிகள், அவன் தேகக்கட்டும் இளமையானது, வலுவானது... அழாதே... இப் போது என்ன செய்ய முடியும்... இதெல்லாம் சகஜந்தானே... எங்கள் வேலேயே போரிடுவது போலத்தான்... தற்செயலாகக் குண்டு தாக்கி விடுவதும் நடக்கக் கூடியதுதான்...''—இப்படிச் சொல்லி வரும்போதே அனுவசியமாக ஏதோ சொல்லிவிட்டோமே என்று உணர்ந்து சட்டென்று, ''புறப்படுவோம் மகளே, மேல்கோட்டைப் போட்டுக்கொள்...'' என்ருர்.

மோட்டார் முடிவின்றி நீண்ட நேரம் சென்று கொண்டிருந்தது. கணக்கற்ற தெருக்களிலும் சந்துகளிலும் தாங்கள் வழி தவறிவிட்டதாகவும், சரியான பாதையைத் தாங்கள் அடைவதற்குள் நேரம் கடந்துவிட்டிருக்கும், ஸெர்கேய் இறந்து விடுவான் என்றும் தான்யா நினேத்தாள்.

''இதோ வந்துவிடுவோம்'' என்று எண் சாணும் ஒரு சாணுய்க் குறுகினுர் குஸ்மீச்.

இனந்தெரியாத ஏதோ ஆற்றலால் உந்தப் பட்டுத் தான்யா காரிலிருந்து பாய்ந்து இறங்கி, மருத்துவ மனேயின் நீண்ட ஆளோடி வழியே ஓடி, தன் கணவன் ஸெர்கேய் பெத்ரோவ் இருந்த அறையின் முன்னே நின்ருள். அறைக் கதவைத் தள்ளித் திறந்து வார்டுக்குள் ஓர் அடி எடுத்து வைத்தவள் அப்படியே கல்லாய்ச் சமைந்து போனுள்.

இடப்புறம் ஒரு கட்டில்மேல் கிடந்தான் ஸெர் கேய். பட்டித் துணியால் அவன் உடம்பு முழு வதும் சுற்றிக் கட்டப்பட்டிருந்தது. முகம் வாடி

வெளிறியிருந்தது. விலாப்புறமாகக் கட்டில் அருகே நகர்ந்த தான்யா தன் வசமின்றியே தரையில் உட்கார்ந்தாள்.

''ஸெர்கேய், என் கண்ணே, எப்படி நீ இந்த மாதிரி, ஊம்?''—கையை அவன் முகத்தின் பக்கம் நீட்டி, புகலின்மை தோன்ற, பயங்கரமாக வீரிட்டாள்: ''ஸெர்கேய்!''

வெறுமையான, விசாலமான அறையில் உணர்வுக்கு வந்தாள் தான்யா. சுற்றுமுற்றும் கண்ணோட்டினாள். ''எங்கே இருக்கிறோம்? நமக்கு என்ன நேர்ந்துவிட்டது?'' என்று வியந்தாள். வெள்ளை மேலங்கி அணிந்த ஒரு மாது அறைக்குள் வந்து ஏதோ சொல்லிவிட்டுப் போனாள். கதவு மூடப்பட்டதும்தான் தான்யாவின் செவிப்புலனை அந்த மாதின் குரல் எட்டிற்று. ஆயினும் சொற்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. திடீரென அவளுடைய கண்களை எதுவோ பொசுக்கியது: கணவனின் மார்புமேல் சுற்றிய இரத்தம் தோய்ந்த பட்டித்துணி.

## 5

இரண்டாம் நாள் காலை ஸெர்கேய் விழிகளைத் திறந்தான். அருகே நாற்காலியில் உட்கார்ந்திருந்த தான்யா மூச்சை அடக்கிக் கொண்டாள். தணிந்த குரலில் அழைத்தாள்:

''ஸெர்கேய்!''

விழிகள் அவள் புறம் திரும்பி மூடிக்கொண்டன.

''தான்யா, என்னை எழுப்பு. என்னால் விழித்துக் கொள்ள முடியவில்லை.''

''ஸெர்கேய், உனக்கு வலிக்கிறதோ?''

''எழுப்பு, சீக்கிரம்!''

''நீ தூங்கவில்லை, ஸெர்கேய். நாம் மருத்துவ மனையில் இருக்கிறோம். மின்னோட்டம் உன் கையைச் சுட்டுவிட்டது... லேசாக...''

''உண்மை அல்ல... அது என்னைக் கொன்று விட்டது... அதில் ஆறாயிரம் வோல்ட் மின்னோட்டம் அல்லவா இருந்தது...''

தான்யா பேசாதிருந்தாள். அவள் தொண்டையில் உண்டையாக ஏதோ அடைத்துக்கொண்டது. அவள் விழுங்கினாள், ஆயினும் விழுங்க அவளால் முடியவில்லை. ''பேசத் தொடங்கிவிட்டான், பேசத் தொடங்கிவிட்டான். ஆகவே, பிழைத்துக் கொள்வான் என்று ஆகிறது. கட்டாயம் பிழைத்துக்கொள்வான்!'' கண்ணீர் பொங்கி முகத்தில் வழிந்தது.

''ஏன் அழுகிறாய்?''

''எனக்கு ஒன்றும் இல்லை... சும்மா தான்... இப்போது நான் அழவில்லையே...''

''சுரங்கத்தில் என்ன ஆயிற்று?''

''சுரங்கத்தையும் ஆட்களையும் தீ விபத்திலிருந்து நீ காப்பாற்றினாய்... அங்கே ஏதேனும் வெடித்திருக்கலாம்...''

''என்னை யார் தூக்கினார்கள்?''

''கோல்யா கொஞ்சரோவும் வழி குடைபவர்களும்.''

''மருத்துவர்கள் என்ன சொல்கிறார்கள்?''

''மருத்துவர்களா?.. பயப்படும்படியாக ஒன்றும் இல்லை என்கிறார்கள். இங்கே கொஞ்ச நாட்கள் படுத்திரு, எல்லாம் சரியாகிவிடும்.'' தான்யா இந்த வார்த்தைகளை மளமளவென்று சொல்ல முயன்றாள். இதோ யாராவது வார்டுக்குள் வந்து, ''இல்லை, மருத்துவர்கள் அப்படிச் சொல்லவில்லை.

நீ பிழைப்பாய் என்ற நம்பிக்கையே அவர்களுக்கு இல்லை!'' என்று கத்திவிடுவார்களோ என்று அவள் அஞ்சுவதுபோல் இருந்தது. ஸெர்கேய் மறுபடி மௌனத்தில் ஆழ்ந்தான். பயங்கர இரவு மீண்டும் கவிந்து வந்தது.

''நீ என்னிடம் உண்மையை மறைக்கிறாய் தான்யா, ஏன்?''

''அவர்களுக்கு... அவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை... அவர்கள்... நீ இறந்துபோவாய் என்கிறார்கள்... இது உண்மை அல்ல, உண்மை அல்ல!'' என்று கண்ணீர் மல்க விம்மினாள் தான்யா.

ஸெர்கேய் விழிகளைத் திறந்து உயரமான, கண்கள் கூசும்படி வெண்மையாய் இருந்த விட்டத்தை நோக்கினான். வலப்புற மூலையிலிருந்து குறுகிய இருண்ட வெடிப்பு ஒன்று நீண்டுவந்து சிறு வெண் முழைப்புக்களின் நடுவே வளையமிட்டு எங்கோ மறைந்தது.

தான் உறங்குவதாகவும் கனவு காண்பதாகவும் ஸெர்கேயுக்குத் தோன்றியது. உறக்கம் பேய்க் கணவாய்போல அவனைத் தன் பிசுபிசுப்பான ஆலிங்கனத்தில் அணைத்து உறிஞ்சியது. அதிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள அவனுக்கு வலிமையில்லை.

''கொஞ்சம் வெளியே போய் இருங்கள், நாங்கள் இவரைப் பார்க்கப்போகிறோம்'' என்றார் வெண் மேலங்கி அணிந்தவர்.

அவர் பின்னே நின்றார்கள் இருவர். நீண்ட ரப்பர் உறிஞ்சிகள் கொண்ட கண்ணாடிப் பேய்க் கணவாய் அவர்கள் கைகளில் இருந்தது.

''மருத்துவர்கள்!'' என்ற எண்ணம் ஸெர்கேயுக்குத் தோன்றியது.

வெள்ளைத் தலைக்குட்டை அணிந்த மாது ஸெர் கேயின் இடது கரத்திலிருந்து கட்டை அவிழ்த் தாள். இரத்தம் சுவறிய பெரிய பந்தாகப் பட் டித்துணி சேர்ந்துகொண்டேபோயிற்று. அவளோ மேலும் மேலும் அவிழ்ந்த பட்டித்துணியைச் சுருட்டுவதும், நோயாளியின் முகத்தைப் பார்த்துப் பெருமூச்செறிவதும் மறுபடி துணி யைச் சுருட்டுவதுமாக இருந்தாள். ஸெர்கேய் தலையை உயர்த்தித் தன் கையைப் பார்க்க முயன் ருன். மருத்துவத் தாதி அவன் நெற்றிமேல் கை வைத்து அவன் தலையைத் தலையணையோடு சேர்த்து அழுத்திஞள்.

''பார்க்க வேண்டாம்! வேண்டாம்...''

கொர்யுஞேவ் கட்டிலின் மீது குனிந்து, ''வலிக் கிறதோ? இங்கே?'' என்று கேட்டார்.

ஸெர்கேயுக்கு வலி தெரியவில்லை. தோளில் ஊசி குத்தியதும்தான் அவன் ஐயோ என்ருன்.

''நான் அப்படித்தான் நினைத்தேன்... உன் காரி யம் மோசம், தம்பி! ஒருவேளை வெட்டி எடுக்க வேண்டி வரலாம். அதாவது கைகளை.''

''வெட்டி எடுப்பதாவது? அறுத்துவிட வேண் டும் என்கிறீர்களா? வேடிக்கை பண்ணுகிறீர்கள், அப்படித்தானே?!''

கொர்யுஞேவ் நோயாளியை நேரிட்டு நோக் காமல் அப்பால் பார்த்தவாறு மௌனமாய் இருந்தார்.

''வெட்டி எ-டு-ப்-ப-தா!.. அது எப்படி, ஊம்? அப்புறம் நான் எப்படி உயிர் வாழ்வேன்?! கை கள்!.. தான்யா!''—திடீரென்று ஸெர்கேய் காட் டுத்தனமாகப் பேய்க் கூச்சலிட்டான்: ''மாட் டேன், கிராதகர்களா! கொன்றுவிடுங்கள் என்னை! அதுவே மேல்!''

பின்பு அடங்கிப்போனுன்.

மூன்றும் நாள் சதை அழுகல் தொடங்கியது. தப்ப ஒரே வழிதான் இருந்தது— வெட்டி அகற்றுவது. அதுவும் உடனடியாக...

## 6

வலேரிய் இவாஞெவிச் கொர்யுஞேவ், ஸெர்கேய் பெத்ரோவின் சிகிச்சை மருத்துவர் பொறுப்பை உற்சாகம் இன்றி ஏற்றுக் கொண்டார். ஸெர்கேயை முதன் முறை சோதித்துப் பார்த்ததுமே, மருத்துவப் பகுப்பாய்வின் நுட்பங்களில் புகாமலேயே, இவன் பிழைக்க மாட்டான் என்று அவர் திட்டவட்டமாக முடிவு செய்து விட்டார்.

கொர்யுஞேவ் தன்னலமி, கோழை. நோயாளியின் விரிவான காயத்தைக் கண்டு அவர் திகில் அடைந்தார். மனிதனுக்கு நேர்ந்த துன்ப நிகழ்ச்சியைக் கண்டு அவருடைய சித்த சக்தி செயலற்றுப் போய்விட்டது. தம்மை ஸெர்கேயின் நிலைமையில் வைத்துப்பார்க்கும் ஓர் எண்ணமே அவரை ஓரேயடியாகச் சோர்வு கொள்ளச் செய்தது. பயங்கரக் கனவு போன்ற இந்த எண்ணம் ஏன் தான் எழுந்தது என்று அவருக்கே தெரியவில்லை. அதை மனத்திலிருந்து விரட்டியடிக்க எல்லா வகையிலும் பாடு பட்டார் அவர். ''எனக்கு இது மாதிரி ஒன்றும் நேர முடியாது. இன்று நான் சேதமின்றி, சௌக்கியமாக வீடு திரும்புவேன். அங்கே மனைவி என்னை எதிர்கொள்வாள். இருவரும் டெலிவிஷன் பார்ப்போம், அற்ப விஷயங்கள் பற்றி வம்பளப்போம், ஒரு வேளை சினிமாவுக்குப் போனுலும் போவோம். வசந்தம் வந்துவிட்டது,

கோடையில் மனைவியும் நானும் தெற்கே, கடற் கரைக்குப் போவோம்...''—இவ்வாறு எண்ண மிட்டுத் தம்மையே உற்சாகப்படுத்திக்கொண் டார் கொர்யுனேவ். அவர் நெஞ்சுக்கு அப்பாடா என்று இருந்தது, ஆனால் சிறிது நேரத்துக்குத் தான். அதே எண்ணம் தலைக்கு உயரே பாறை போலத் தொங்கியது. நோயாளிமேல் அவருக்குப் பரிவு உண்டாகவில்லை. எரிச்சலும் சீற்றமும் உள்ளத்தில் எழுந்தன.''இவனுக்கு அறுவைசெய்ய வேண்டியிருக்கிறது. இவன் கத்தி பட்டதுமே இறந்துபோவான். என் தொழில் பட்டியலில் நோயாளியின் மரணம் வேறு குறை? எல்லோரும் பாதியானின் கதைகளை நம்புகிறார்கள்... அவனே இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளட்டும்.''

அறையில் மூவர் இருந்தார்கள். மருத்துவ மனையின் தலைமை மருத்துவர் கருங்கும்மென்று மௌனமாய் இருந்தார்.

''நோயாளி பிழைப்பான் என்ற நம்பிக்கையே இல்லை. அறுவை செய்து அவனை மேற்கொண்டு துன்புறுத்துவானேன்?'' என்றார் கொர்யுனேவ்.

''நான் ஒப்ப மாட்டேன். எல்லா உபாயங்களை யும் கையாண்டு பார்ப்பது அவசியம். நீங்கள் சிகிச்சை மருத்துவர். ஆபத்தை மேற்கொள்ள மறுப்பதற்கு உங்களுக்கு உரிமை கிடையாது'' என்று ஆட்சேபித்தார் வானோ இல்யீச் பாதி யான்.

கொர்யுனேவ் தந்திரம் செய்து நழுவித் தப்ப முயல்வதையும், கடினமான நோயாளியின் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடிந்த வகையில் எல்லாம் பாடுபடுவதையும் தலைமை மருத்துவர் இன்னும் வெகு நேரம் வரை கேட்டுக் கொண் டிருந்தார்.

முடிவில் அவர் எழுந்து, எரிச்சலை அடக்கிக் கொண்டு கூறினார்:

''முடிவு இதுதான்: வானே இல்யீச், ஸெர் கேயை அறுவைக்குத் தயார் செய்யுங்கள். கடமை உணர்ச்சியும் மனச்சாட்சியும் சொல்லுகிறபடியே கடைசியில் ஒவ்வொருவனும் நடந்து கொள் கிறான்.''

## 7

அறுவை மருத்துவர் பாதியான் ஸெர்கேயின் கட்டில் விளிம்பில் உட்கார்ந்து அறுவை இன்றி யமையாதது என்பதை ஜாக்கிரதையாக எடுத்துச் சொன்னார். ஸெர்கேய் மருத்துவரை நேரிட்டு நோக்காமல் எங்கோ பார்த்துக் கொண்டிருந் தான். தனக்கு ஆபத்து ஏற்படுத்திய ஊனமுகல் பற்றியோ, வாழ்வின் கடினமான கணங்களில் ஆண்மையுடன் நடந்து கொள்வது அவசியம் என் பது பற்றியோ மருத்துவர் சொன்ன சொற்களை அவன் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லைபோல் இருந்தது.

''நான் பச்சைப் பிள்ளை அல்ல, டாக்டர்...''

''சபாஷ், அதுதான் வேண்டும்!''

அறுவையின்போது ஸெர்கேய் பிரகாசமான ஆப் பரேஷன் விளக்கைக் கண்கொட்டாமல் பார்த்த வாறு பேசாதிருந்தான். அகலத் திறந்த விழிகள் அடியற்ற கசம் போன்று இளநீலமாக ஒளிர்ந்தன. அவை எதையும் காணவும் இல்லை, விரும்பவும் இல்லை, உணரவும் இல்லை. வலியைக் கூட. அறுவை மருத்துவரின் ரம்பம் வெறுப்பூட்டும் வகையில் ரீங்காரம் செய்யத் தொடங்கியதும் தான் ஸெர்கேய் ஒரேயடியாக இறுகி விழிகளை மூடிக்கொண்டான்.

அறுவை முடிந்த பிறகு தான்யா கணவனிடம் செல்ல அனுமதிக்கப்படவில்லை. அவள் கெஞ்சி ஞள், கதறிஞள், பயன் இல்லை.

''அவருக்கு வேண்டியது நிம்மதி. உங்களாலோ, துயரத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை'' என்று மறுத்தார் பாதியான்.

தான்யா எழுந்து வார்டை நோக்கி உறுதியாக அடி வைத்தாள். மருத்துவர் அவளை நிறுத்தி, ஒன்றும் பேசாமல் தமது வெண் மேலங்கியை அவளுக்கு அணிவித்துவிட்டு, வாயே திறவாமல் தம் அறைக்குத் திரும்பினார்.

''அழ மட்டும் கூடாது. அடக்கிக்கொள்ள வேண்டும். எப்பாடு பட்டாவது அடக்கிக்கொள்ள வேண்டும். ஸெர்கேயுக்கு உற்சாகமூட்ட வேண் டும். அவனை மனம் தளர விடக்கூடாது. இப் போது இதுதான் முக்கியம். அவன் உரம் உள்ள வன்! இருவராக நாம் எதையும் தாங்கிக் கொள் வோம், அவன் மட்டும் பிழைத்து விட்டால் போதும்.'' — இவ்வாறு எண்ணமிட்ட தான்யா, ''அவன் பிழைத்து விடுவான், பிழைத்துவிடு வான்...'' என்று விடாப்பிடியாகக் கூறிக்கொண் டாள்.

## 8

தான் கெட்ட கனவு காணவில்லை, விலங்குக் கொடுமை நிறைந்த விதியின் திருப்பம் தனக்கு நேர்ந்துவிட்டது என்று ஸெர்கேய் பெத்ரோவ் புரிந்து கொண்ட கணம் முதல் ''எல்லாம் முடிந்து விட்டது'' என்ற கருத்து அவன் மனத்தில் ஆழப் பதிந்துவிட்டது. ''எல்லாம் முடிந்துவிட்டது'' என்பதற்கு என்ன பொருள் கொள்வது என்று ஸெர்கேயுக்கே புரியவில்லை. அறுவை மேஜைமீது

இடது தோள் நெருப்பாய் எரிந்து இயல்புக்கு மாருக லேசாகி விட்டதுமோ ''செத்துத் தொலைந்தால் மேலாயிருக்குமே'' என்று நினைத்தான். அவனைத் திகில் பற்றிக்கொண்டது. சாவை அவன் அஞ்சவில்லை, திடீரென்று தோன்றிய அதைப் பற்றிய எண்ணமே அவனுக்குத் திகில் ஊட்டியது. ஏதோ சாதாரணமான, முற்றிலும் சகஜமான ஒன்று விழிகளுக்கு எதிரே பளிச்சிட்டு மறைந்தது. அதனால் நெஞ்சு குறுகிச் சுருங்கியது, ஒய்வற்ற ஏக்கம் உள்ளத்தில் குடிகொண்டது.

வார்டில் அவன் பேசாமல் விட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். கசப்பான எண்ணங்களை அடக்கிக்கொள்ள அவனுக்கு இயலவில்லை. ''இங்கேயே முடிவு வந்துவிடுமா என்ன?.. சவக் குழிக்கு மேல் பிர்ச் கன்று நடுவார்களோ...''

ஸெர்கேயுக்கு மீண்டும் திகில் உண்டாயிற்று.

''நர்ஸ் அம்மா, நான் உடனே சாகாதது எப்படி? அங்கேதான் மின்னோட்டம் நிறைய அதிகமாக இருந்ததே?''

''ஒருவேளை நீங்கள் சாகாவரம் பெற்றவரோ என்னவோ'' என்று தணிந்த குரலில் சொல்லிவிட்டு மருத்துவத் தாதி அக்கம் பக்கம் கண்ணோட்டி, ''நீங்கள் பேசாதிருங்கள். இல்லாவிட்டால் மருத்துவர் எங்களை விளாசுவார்'' என்றாள்.

''செத்திருந்தால் மேலாய் இருக்கும்...''

''என்ன நீங்கள், ஸெர்கேய்! இப்படிப் பேசலாமா?.. நீங்கள் குணம் அடைவீர்கள், வேலைக்குப் போவீர்கள், மொத்தத்தில் எல்லாம் சரியாகிவிடும்... இங்கே இப்படித்தான் ஒரு ஆள்...''

''அந்தக் கதை எல்லாம் எனக்குத் தெரியும், நர்ஸ் அம்மா. இன்னொரு கையை எப்போது துண்டிக்கப் போகிறார்கள்? அதைச் சொல்லுங்கள்

முன்னே...'' என்று கூறி மௌனத்தில் ஆழ்ந்தான் ஸெர்கேய்.

இமைகளை இறுக மூடிக் கொண்டு, நெஞ்சில் குண்டு பாய்வதை எதிர்பார்ப்பவன்போலக் காத்திருந்தான்—''நாளைக்கு'' என்று தாதி சொல்வதை எதிர்பார்த்து.

வார்டு வாயிலில் தான்யா தயங்கி நின்றாள். முடியையும் தலைக்குட்டையையும் நேராக்கிக் கொண்டாள், கதவைத் திறக்கும் நோக்கத்துடன் கையை முன்னே நீட்டினாள், ஆயினும் தயங்கினாள். கைகள் இன்றி, இரத்தம் சுவறிய பட்டித்துணிக் கட்டு போட்டுக்கொண்டிருக்கும் நிலையில் ஸெர்கேயைக் காண அவள் அஞ்சினாள். தன்னால் தாங்க முடியாது, அழுகை பீறிட்டுக்கொண்டு வந்து விடும் என்று உணர்ந்தாள். கதவுமீது உடல் முழுவதையும் சாய்த்து, திறந்துகொண்டு வார்டுக்குள் புகுந்தாள். ஸெர்கேயின் விழிகள் நொடிப் போது ஒளி சுடர்ந்தன, பின்பு இருண்டு போயின. மருத்துவத் தாதி எழுந்து நைச்சியமாக வெளியே நகர்ந்தாள்.

''நான் வீட்டிற்குப் போனேன்'' என்று பேச ஆரம்பித்த தான்யாவுக்குத் தன் குரல் ஒலியே வியப்பூட்டியது. ''நான் எதற்காக இப்படிச் சொல்லுகிறேன். இது பொய் அல்லவா?'' என்று எண்ணினாள். ''வீட்டில் எல்லாம் நன்றாய் இருக்கிறது'' என்று சொன்னவள், ''எதற்காக நான் புளுகுகிறேன்? நான்தான் அறுவைக் கூட ஜன்னல் அருகேயே நின்று கொண்டு, ஸெர்கேயின் கூச்சல் காதில் பட்டதுமே செவிகளை மூடிக்கொள்ளத் தயாராகக் கைகளை வைத்துக்கொண்டு காத்திருந்தேனே'' என்று நினைத்தாள். ''ஸெர்கேய்,

நான் இங்கேயே உன்னோடு இருப்பேன்... ஒத்தாசையாக...'' என்றாள்.

''உட்காரு, தான்யா, பேசுவோம்...''—ஸெர்கேய் கூட்டி விழுங்கிக் கொண்டு முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டான். ''அம்மாவுக்கு இதை எல்லாம் எழுதத் தேவையில்லை. அவள் இருதயம் நோயுள்ளது.''—அவன் நிமிட நேரம் உதட்டைக் கடித்துக்கொண்டு பேசாதிருந்தான். அப்புறம் கண்டிப்பாகக் கூறினான்: ''நமது இன்பம் இப்படி முடிந்தது...'' பின்பு அவசர அவசரமாக, ''நீ என்னிடம் வராதே, தான்யா. அதுதான் நல்லது. நம் இருவருக்குமே. என்னை விட்டு விட்டுப் போய்விடு. தொலைந்து போ எங்கேனும். எனக்கு உன் மேல் காதல் இல்லை... நான் உன்னை...'' என்று மேலே பேச முடியாமல் மௌனமானான்.

தான்யா வலிப்பு வந்தவள்போல முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டாள்.

''என் மனத்தை எதற்காக இப்படிப் புண்படுத்துகிறாய், ஸெர்கேய்?'' பொங்கிவந்த சோகக் குமுறலை அடக்கிக் கொள்ள முயன்றாள் தான்யா. ஆனால் அவளால் முடியவில்லை. ''எதற்காக நீ இப்படி?... நான்தான் உன்னைக் காதலிக்கிறேனே.''

''உனக்கு இருபது வயதுதான். உன் வாழ்வு இனிதான் தொடங்க இருக்கிறது. என் பாடோ, எல்லாம் ஒய்ந்துவிட்டது. போய்விடு, உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்...''

கதவு மூடுபனியில் போல ஆடியது, தரை நிலையின்றி அதிர்ந்து ஒரு புறம் விலகியது. கதவுப் பிடி கையிலிருந்து நழுவிற்று. ஒரு சமயம் பிரமாண்டமானதாகவும் மறு சமயம் மிகமிகச் சிறியதாகவும் அது காட்சி அளித்தது.

''போய்விட வேண்டும். ஸெர்கேய் சொல்கிறனே. நான் அவனுக்குத் தேவையில்லை...''

குண்டு சுடுவதுபோலக் கதவை அறைந்து மூடிவிட்டு வெளியேறினுள் தான்யா. அவள் போனதுமே நெஞ்சில் துயர் படர்ந்தது, உடல் பாறையாய்க் கட்டிலை அழுத்தியது. கதவுவரை ஓடிப் போய், அதைத் திறந்து, ''திரும்பு!'' என்று அவளை அழைக்கலாமா! ஸெர்கேய் அவளைப் பின் தொடர்வதற்காகத் துள்ளி எழுந்தவன், நிராதரவாகப் பொத்தென்று விழுந்தான். தலையணை உறையைப் பற்களால் கடித்துக் கிழித்து, அழத் தெரியாத ஆண்மகனுக்கு உரிய முறையில் அழுதான்.

விவரம் தெரிந்த பிறகு வாழ்க்கையில் முதல் தடவை, அடக்க முடியாமல், விம்மி விம்மி அழுதான்.

...ஆரவாரம் நிறைந்த மாலை நகர வீதிகள் வழியே வெற்று வெளியில் போல நடந்தாள் தான்யா. எதிலோ மோதிக் கொண்டவள் மறுபுறம் திரும்பி மீண்டும் நடக்கலானுள்—நோக்கமோ எண்ணமோ விருப்பமோ இன்றி. சாலை இருப்புப்பாதைக் கடவையின் அருகே அவள் முகத்தில் உராய்வது போலச் சீறிச் சக்கரங்கள் கடகடக்க உருண்டு சென்றது புகைவண்டி. தான்யா திடுக்கிட்டு வந்த வழியே திரும்பி ஓடினுள். ''மருத்துவ மனைக்கு, கூடிய விரைவில்!'' ஒரு பத்து மீட்டர் ஓடியவள் மறுபடி நின்றுவிட்டாள்.

''பெண்ணே, உங்களை யாரேனும் புண்படுத்திவிட்டார்களா?'' என்று பரிவுடன் வினவி, தான்யாவின் கைகளை அவள் முகத்திலிருந்து ஜாக்கிரதையாக அகற்றினர் யாரோ முகமறியாத மனிதர், அவளுடைய அழுத கண்களைக் கண்டதும்

அவர், ''ஏதேனும் நடந்துவிட்டதா? உதவி வேண்டுமோ ஒருவேளை?'' என்று கனிந்தார்.

''எங்களுக்கு யாராலும் உதவ முடியாது'' என்று விம்மினாள் தான்யா.

''நடுத் தெருவில் அழுவானேன்? உங்களுக்கு எங்கே போக வேண்டும்?''

''அறியேன். என் கணவர் மருத்துவ மனையில் கிடக்கிறார்...''

''அவருக்கு என்ன உடம்பு?''

''சுரங்கத்தில் விபத்து.''

''பாறைச் சரிவோ?''

''இல்லை. மின்னோட்டம் தாக்கியதால் கைகள் பொசுங்கிப் போயின. அவருக்கு உயிர் வாழ விருப்பம் இல்லை. என்னையும் கூட இருக்க விடாமல் விரட்டுகிறார்.''

அந்த மனிதர் சற்றுச் சிந்தித்தார். பின்பு கையை வீசி, ''போவோம் வாருங்கள்!'' என்றார்.

தான்யா அவர் அருகாக நடந்தாள். இந்த அன்னியர் தன்னை எங்கே, எதற்காக அழைத்துப் போகிறார் என்று அவளுக்கு விளங்கவில்லை. அவள் அவருடைய கேள்விகளுக்கு விடை அளித்தாள். அவசரப்பட்டுக் கொண்டு தன் துயரக் கதையை அவரிடம் சொல்ல ஆரம்பித்தவள், முழுதாக ஒரு வார்த்தை சொல்வதற்குள் அழுகை பீறிட, உள்ளங்கையால் வாயை மூடிக்கொண்டு பேச்சை நிறுத்திவிட்டாள்.

மருத்துவ மனை பூட்டியிருந்தது. அறிவிப்பு மணியை வெகு நேரம் அடித்தபின் முறை வேலையிலிருந்த மருத்துவத் தாதி வெளியே வந்து மௌனமாகக் கதவைத் திறந்து, நேரம் கழித்து வந்த பார்வையாளர்களை ஏறிட்டுக் கூடப் பார்க்காமல் போய்விட்டாள்.

தான்யாவின் வழித்துணைவர் ஆளோடியில் நின்று விட்டார். கணக்கற்ற கதவுகளைக் குழப்பத்துடன் நோக்கியவாறு பின்மண்டையைச் சொறிந்து கொண்டார் அவர். விபத்துக்கு உள்ளான மனிதன் இந்த அறைகளில் ஏதோ ஒன்றில் கிடந்தான். அவனுக்கு எவ்வகையில் அவரால் உதவ முடியும்? வெளியே, வீதியில் தன்னந்தனியாக அழுதுகொண்டிருந்த பெண்ணைக் கண்டதும் அவளிடம் பரிவு காட்டுவது எளிதாக இருந்தது. பாவம் சங்கடத்தில் மாட்டிக் கொண்டிருந்தாள், அவளுக்கு உதவ வேண்டும் என்று தோன்றியது. வழியில் உற்சாகமூட்டும் தேறுதல் வார்த்தைகளைச் சொன்னார். பிரகாசமான விளக்கொளி நிறைந்து ஐடோஃபார்மின் மயக்கும் நெடி வீசிய இந்த ஆளோடிக்கு வந்ததுமே அந்தச் சொற்கள் எல்லாம் சாயம் வெளுத்து, அவருக்கே நம்பிக்கையூட்ட முடியாதவை ஆகிவிடும் என்று அவர் சந்தேகிக்கவே இல்லை.

''உங்கள் கணவரின் குலப்பெயர் என்ன?'' என்று தான்யாவிடம் கேட்டார் அந்த மனிதர்— தமக்குத் தெரியாத இந்தக் குலப்பெயர் உருவாகியுள்ள நிலைமையை ஓரளவு தெளிவுபடுத்தும் என்று எதிர்பார்ப்பவர்போல.

''பெத்ரோவ்.''

''பார்த்தீர்களா, எப்பேர்ப்பட்ட தற்செயல் இசைவு! என் குலப்பெயர் பெத்ரேன்கோ!''— அவர் புன்னகை செய்ய முயன்றார். ஆனால் குற்றம் செய்துவிட்டவர் போல முகத்தைச் சுளித்து தொண்டையைக் கனைத்துக்கொள்ள மட்டுமே செய்தார்.

அறுவைக் கூடத்திலிருந்து வெளிவந்தார் மருத்துவர்.

''உங்களை இங்கே வர விட்டது யார்?''

''நாங்கள் பெத்ரோவைப் பார்க்க வந்தோம்.''

''நோயாளிகளைப் பார்ப்பதற்கான நேரம் இரண்டு முதல் ஐந்து மணிவரை. அதுவும் பகலில்!''

பெத்ரேன்கோ மருத்துவரின் பக்கத்தில் போய், ''தோழரே! ஒரு ஐந்து நிமிடங்களுக்கு எங்களை அனுமதியுங்கள். இது எங்களுக்கு மிக முக்கியமானது'' என்றார்.

''நம் வாழ்க்கையில் எல்லாமே முக்கியமானது தான். தவிர, காத்திருக்க ஒருவருமே விரும்புவதில்லை.''—மருத்துவர் போவதற்காகத் திரும்பினார்.

அவர் டாக்டர் பாதியான் என்பதைத் தான்யா கண்டுகொண்டாள்.

''அவனுக்கு உடம்பு எப்படி இருக்கிறது, டாக்டர்?'' என்று மருத்துவரின் மேலங்கியைப் பற்றிக் கொண்டாள்.

பாதியான் நின்றார்.

''தமனி வழியே இரத்தப் பெருக்கு ஏற்படத் தொடங்கிற்று. இரத்தப் பெருக்கு நிறுத்தப்பட்டு விட்டது. நோயாளியின் உடம்பில் செலுத்துவதற்கு ஏற்ற குழுவைச் சேர்ந்த இரத்தம் எங்கள் சேமிப்பில் போதிய அளவு இல்லை... மக்கேயெவ்காவுக்குக் கார் போயிருக்கிறது. சுமார் ஒன்றரை மணி நேரத்தில் இரத்தம் வந்து விடும். அவ்வளவுதான். நீங்கள் இங்கே இருக்கத் தேவையில்லை.''

''அது எப்படி, டாக்டர் ஐயா! இரண்டு மணி என்பது நீண்ட நேரம் ஆயிற்றே. இதற்கிடையில் ஆசாமி...''—பெத்ரேன்கோ தொப்பியைக் கைகளால் கசக்கினார், அதை மேல் கோட்டுப் பைக்

குள் திணித்துக்கொண்டார், மறுபடி வெளியே எடுத்து மருத்துவரின் முகத்துக்கு எதிரே உதறிஞர். தான் இன்னும் வெளியிடாத எவையோ கருத்துக்களில் ஆதரவு தேடியவாறு அவர் தான் யாவைப் பார்த்தார். பின்பு தணிந்த, கெஞ்சும் குரலில் கூறலாஞர்: ''தோழரே, என் இரத்தத்தை எடுத்துக்கொள்ளுங்கள், தயை செய்து. நான் முழு உடல் நலம் உள்ளவன். இதோ பாருங்கள்!'' — அவர் மேல்கோட்டைச் சட்டென்று கழற்றிப் போட்டுவிட்டுச் சட்டைப் பொத்தான்களைக் கழற்றுவதற்காக அவசர அவசரமாகத் தடவலாஞர். ''என் காணிக்கையை மறுக்க உங்களுக்கு உரிமை கிடையாது!''—பெத்ரேன்கோவின் குரல் தழுதழுத்தது. ''நான் இங்கிருந்து போக மாட்டேன். நான் புகார் செய்வேன்! எதற்காக என்னை அப்படிப் பார்க்கிறீர்கள்?''

''உங்கள் இரத்தம் எந்தக் குழுவைச் சேர்ந்தது என்பதாவது உங்களுக்குத் தெரியுமா?'' எனச் சோர்வுடன் கேட்டார் மருத்துவர்.

''அது எந்த விதத்தில் முக்கியம். இரத்தம் தானே வேண்டும் உங்களுக்கு?''

''எங்களுக்குத் தேவைப்படுவது முதல் குழு, RH பாஸிட்டிவ்!''

''அடேடே! இப்போது நினைவு வருகிறது. என் இரத்தம் இதே குழுவைச் சேர்ந்ததுதான்... RH பாஸிட்டிவ்...இதோ, என்னுடைய இராணுவச்சீட்டைவேண்டுமாஞல் பார்த்துக்கொள்ளுங்கள்...''

அரை மணி நேரத்துக்குப் பிறகு பாதியான் இரத்தம் செலுத்தும் கருவியைச் சரிப்படுத்திக் கொண்டு சிந்தனையுடன் புன்னகை செய்தார்.

''ஸெர்கேய், உனக்கு இரத்தம் வழங்கியவர் யார் தெரியுமா? உனக்கு அறிமுகமானவர்தான்...''

—இவவாறு கூறிச் சிவப்புத் திரவம் நிறைந்த கண்ணுடிக் குப்பியை ஸெர்கேயின் கண் அருகே கொண்டுவந்தார். அவன் மகிழ்ச்சியும் வியப்பும் அடைவான் என்று நம்பினுர். குப்பிமேல் ஒட்டியிருந்த குறிப்புக் காகிதத்தில் அவசரமாகப் பின் வருமாறு கிறுக்கப்பட்டிருந்தது: ''பெத்ரேன்கோ கென்னுதிய் ஃபியோதரவிச். கடைச்சல் தொழிலாளி. இரத்தக் குழு, முதலாவது.''

கடைச்சல் தொழிலாளி பெத்ரேன்கோ ஸெர்கேயுக்குத் தெரிந்தவர் அல்ல. பெத்ரேன்கோவுக்கும் சுரங்கத் தொழிலாளி ஸெர்கேயைத் தெரியாது. ஆனுல் அவர்கள் நன்கு அறிமுகமானவர்கள் என்றே மருத்துவர் எண்ணிஞர். இல்லாவிட்டால் ஒரு மனிதன் இரவு நேரத்தில் மருத்துவ மனைக்குள் கட்டாயமாகப் புகுந்து தன் இரத்தத்தை வழங்க முன்வருவானேன்?

9

அந்த இரவைத் தான்யா மருத்துவ மனையில் கழித்தாள். முறைவேலை மருத்துவத் தாதியின் அருகே நாற்காலியில் அமர்ந்தவாறு, நிமிட நேரமாவது எல்லாவற்றையும் மறப்பதற்காகக் கண் அயர முடிந்தவரை முயன்ருள். ஆயினும் அவளால் உறங்க முடியவில்லை. அனேக முறை வார்டுக்குள் போய், தூங்கிக் கொண்டிருந்த ஸெர்கேயின் அருகே சென்ருள், பேசாமல் அவனைப் பார்த்தாள், வாய்விட்டு அழுதுவிடுவோமோ என்று பயந்து வெளியே ஓடிஞள்.

யாரோ தன்னை அழைப்பதுபோல ஒரு தடவை தான்யாவுக்குத் தோன்றிற்று. வார்டுக்குள் ஓடிஞள். ஸெர்கேய் ஜன்னி கண்டு கட்டிலில் புரண்ட

வாறு கரகரத்த தணிந்த குரலில் பிதற்றிக் கொண்டிருந்தான்:

''தான்யா, தான்யாக் கண்ணே... என் பக்கத்தில் வா... அழாதே அம்மா... எனக்கு வலிக்கிறது, டாக்டர்... எனக்கு வேண்டாம், வேண்டாம்...''

காலையில் தான்யா துவாலையை எடுத்து ஸெர்கேயினது கட்டிலின் பின்னே தொங்கவிட்டு அவன் முகத்தில் வெயில் படாதவாறு மறைத்தாள்.

''வெயில் படட்டும், தான்யாக் கண்ணே!..'' இந்தச் சொற்களைக் கேட்டதும் தான்யா மலைத்துப் போனாள்.

''நீ தூங்கவில்லையா, ஸெர்கேய்?''

''எவ்வளவு கதகதப்பான வெயில்!..''

''நான் உன்னை விட்டுப் போக மாட்டேன். என்னை என்ன வேண்டுமானாலும் செய்துகொள். போகவே மாட்டேன். நீ இல்லாத வாழ்க்கை எனக்கு வேண்டாம்.''

''நன்றி... தான்யாக் கண்ணே...''

பகலில் சுரங்கத் தொழிலாளர்கள் மருத்துவ மனையை முற்றுகை இட்டார்கள். அவர்கள் தலைமை மருத்துவரைக் கெஞ்சி மன்றாடினார்கள், அச்சுறுத்தினார்கள், சிபாரிசுக் கடிதங்களை அவர் கண்ணெதிரே ஆட்டினார்கள், அப்படியும் பயன் எதுவும் இன்றித் திரும்பினார்கள். ஸெர்கேயைக் காண்பது கண்டிப்பாகத் தடை செய்யப்பட்டது. தெரிந்தவர்களையும் தெரியாதவர்களையும் வெளியே வந்து கண்டாள் தான்யா. ஸெர்கேயின் உடல்நிலை பற்றிக் குழப்பத்துடன் விவரித்தாள், தின்பண்டப் பொட்டலங்களையும் கடிதங்களையும் தொழிலாளர் கூட்ட நிகழ்ச்சி விவரக் குறிப்புகளையும் அவர்களிடமிருந்து வாங்கிக்கொண்டாள்.

அவை எல்லாவற்றின் உள்ளடக்கமும் சுருக்கமாக இதுதான்: ''உளம் சோர்ந்து விடாதே, நண்பா, வீரத்துடன் போராடு, சுரங்கத் தொழிலாளா!''

மாலைத் தறுவாயில் சுரங்க இளங் கம்யூனிஸ்டுகள் சங்கக் குழுவினர் எல்லாரும் வந்தார்கள். இளைஞர்கள் முகங்களில் ஏக்கம் ததும்ப, சமாதானமாக, ஒற்றை வரிசையில் ஏற்பு அறைக்குப் போய் மருத்துவரைச் சந்திக்க விரும்புவதாகக் கேட்டுக்கொண்டார்கள்.

டாக்டர் பாதியான் அவர்களிடம் வந்தார்.

''ஸெர்கேயைக் காண நண்பர்கள் ஏன் அனுமதிக்கப்படவில்லை?'' என்று ஆத்திரத்துடன் கேட்டான் மமேதொவ்.

''கட்டாயமான ஒழுங்கு முறை உண்டு. தவிரவும் நோயாளி மிகவும் பலவீனமாக இருக்கிறான்'' என்று விடை அளித்தார் மருத்துவர்.

''இந்த நிலைமை எவ்வளவு காலத்துக்கு நீடிக்கும்? நோயாளியைக் குணப்படுத்துவதற்கு என்ன செய்யப்பட்டிருக்கிறது?'' என்று முன்னே வந்து கேட்டான் வலொபூய்ஸ்கிய்.

''நாம் எல்லோரும் ஆண்கள். உங்கள் உணர்ச்சிகள் எனக்குப் புரிகின்றன. ஆனால்... இது அசாதாரணமான கேஸ்...''

''புள்ளி விவரங்களில் எங்களுக்கு அக்கறை இல்லை. அவன் பிழைப்பானா? இதுதான் நாங்கள் கேட்பது'' என்று வெடுக்கெனச் சொன்னான் கோல்யா கொஞ்சரோவ்.

''ஏது, ஏது, நண்பர்களே!.. ஏதோ கெடுதல் நடப்பதாகச் சந்தேகிப்பது போல அல்லவா பேசுகிறீர்கள் நீங்கள். எங்களால் முடிந்ததை எல்லாம் நாங்கள் செய்துகொண்டுதான் இருக்கிறோம். நலமே ஆகும் என்று நம்புவோம்...''

''மன்னியுங்கள்'' என்று படிந்து வந்தான் கோல்யா. ''இவன் எங்கள் ஸெர்கேய், அருமையான ஆள்!... நாங்கள் முறை வைத்துக்கொண்டு இங்கே இருக்கத் தீர்மானித்திருக்கிறோம். இரத்தமோ, தோலோ, எது தேவைப்பட்டாலும்... மொத்தத்தில் நாங்கள் உங்கள் தொண்டுக்குக் காத்திருக்கிறோம்'' என்று தணிந்த குரலில் கூறி முடித்தான்.

''நன்றி. தற்போதைக்கு இது தேவை இல்லை. ஆனால்... எதுவும் நேரலாமே...''

பாதியான் போய்விட்டார். மருத்துவ மனைக்குரிய வெள்ளை மேலங்கி அணிந்து வந்தாள் தான்யா.

''கோல்யா, ஸெர்கேயின் வலது கரத்தையும் துண்டிக்க ஏற்பாடு செய்கிறார்கள்...''

கோல்யா கொஞ்சரோவ் அவளுடைய தோளைப் பரிவுடன் அணைத்து, ''பதற்றப்படாதே தான்யாக் கண்ணே, நெஞ்சை உரப்படுத்திக் • கொள்ள வேண்டும், புரிகிறதா, உறுதியைக் கைவிடக் கூடாது'' என்றான்.

''இதோ உங்களைப் பார்க்கிறேன், எல்லோரும் சௌக்கியமாக, உடல்நலத்தோடு இருக்கிறீர்கள். ஆனால் அவனோ... நீங்கள் எப்படி அவனைக் காப்பாற்றாமல் விட்டு விட்டீர்கள்?'' என்று அழத் தொடங்கினாள் தான்யா.

''அவன் அல்லவா எங்களைக் காப்பாற்றினான்! பெரும்பாலானவர்கள் அங்கேதான் இருந்தோம், வெட்டு முகப்பில்... மத்ரோஸவ்* போல...

---

* அலெக்ஸாந்தர் மத்ரோஸவ் — இரண்டாவது உலகப் போர் வீரர்களில் ஒருவர். பகைவரின் இயந்திர பீரங்கிச் சாலகத்தைத் தம்மார்பினால் மூடித் தோழர்களைக் காப்பாற்றியவர். —பதிப்பாசிரியர்.

மார்பிஞல்...'' — கண்ணீர் தொண்டையை அடைக்கக் கூறிஞன் மமேதொவ்.

ஸெர்கேயின் நிலைமை மணிக்கு மணி மேலும் மோசமாகிக்கொண்டு போயிற்று. இரண்டாவது கையைத் துண்டித்து அகற்றுவதை மேலும் தள்ளிப் போடுவது அபாயம் ஆயிற்று.

அறுவை நடப்பதற்குச் சில நிமிடங்களுக்கு முன் ஸெர்கேய் கண்களைத் திறந்து சுற்றிலும் பரபரத்துக் கொண்டிருந்த மருத்துவர்கள்மீது கண்ணேட்டி, ''ஆக, வலது கையையுமா?'' என்ருன்.

''ஸெர்கேய், உன் உயிரைக் காப்பாற்றுவது முக்கியம்.''

''தான்யாவைக் கூப்பிடுங்கள்.''

வெண் முகமூடி அணிந்து வந்தாள் தான்யா.

''மன்னித்துக் கொள், தான்யா, நான் ஏதாவது தவறு செய்திருந்தால்... நேற்றைய விவகாரத்துக்காக... எனக்கு விருப்பம் இல்லை... நமக்கு வாழ வாய்க்கவில்லை... சரியான விதத்தில்...''

சரியான விதத்தில்... அவர்கள் வாழ்க்கையில் எதுதான் சரியான விதத்தில் இருந்தது? திருமண நாளன்று ஸெர்கேய் பரிசு அளித்த மோதிரமா? இல்லை, அது சரியான விதத்தில் இருக்கவில்லை. ஸெர்கேயின் நண்பர்கள் மூன்று கோப்பெக் நாணயம் ஒன்ருல் அந்த மோதிரத்தைத் தாங்களே செய்திருந்தார்கள். மாணவனிடம் தங்க மோதிரத்துக்குப் பணம் எங்கே இருக்கும்? தான்யா இதைப் புரிந்து கொண்டாள். மனத்தாங்கல் அடையவில்லை. முதல் சம்பளத்திலிருந்து ஸெர்கேய் வாங்கித் தந்த தங்க மோதிரத்தோடு அந்த

மோதிரமும் தான்யாவின் விரலில் இன்னமும் இருந்தது. நிறம் மங்கிய அந்தச் செப்பு மோதிரத்துக்குப் பதில் பத்துத் தங்க மோதிரங்கள் கிடைப்பதானாலும் தான்யாவுக்கு வேண்டாம்.

ஒருவேளை திருமணம் சரியான விதத்தில் நடந்ததோ? திருமணக் கொண்டாட்டம் உச்ச கட்டத்தில் இருந்தபோது அவர்களுக்கு வீட்டுக்குள் கட்டிப்போட்டது போல் இருந்தது. தங்கள் இன்பத்தை உலகம் அனைத்துடனும் பகிர்ந்து கொள்ள ஆசை உண்டாயிற்று.

''ஓடிவிடுவோம் வா!'' என்று கிசுகிசுத்தான் ஸெர்கேய்.

அவர்கள் மணவிழாவிலிருந்து நழுவி ஓடிவிட்டார்கள். இரவு நேர நகரத்தின் வெறிச்சோடிய வீதிகள் வழியே அவர்கள் நடந்தார்கள். வெண் பனி காலடியில் கறுமுறுத்தது. ''ஜனங்களே! பாருங்கள், நாங்கள் எவ்வளவு இன்பமாய் இருக்கிறோம்!'' என்று கத்த வேண்டும்போலப் பொங்கும் களி வெறியில் அவர்களுக்கு ஆசை உண்டாயிற்று.

தான்யாவின் கைகள் கடுங்குளிரில் மரத்துப் போயின. ஸெர்கேய் தன் பெரிய, வலிய கைகளால் அவற்றைச் சூடு படுத்தினான். பின்பு அவள் விழிகளிலும் கன்னங்களிலும் உதடுகளிலும் முத்தமிட்டு, ''என் அன்பே, வாழ்நாள் முழுவதும் நான் உன்னைக் கைத்தாங்கலாகச் சுமந்து செல்வேன்'' என்று கிசுகிசுத்தான்.

தான்யாவுக்கு மூச்சு திணறியது. அவள் தலை அசைத்து இசைவு தெரிவித்தாள். அழுதுவிடாது இருப்பதற்காக உதட்டைக் கடித்துக்கொண்டாள். ஆனால் அவளால் பேச முடியவில்லை.

இரண்டு மணி நேரத்துக்குப் பின் ஸெர்கேய் பெத்ரோவ் இரண்டு கைகளும் இல்லாமல் வார்டில் கிடந்தான்...

அறுவை நடந்த மறு நாள் காலை ஸெர்கேயின் தகப்பன் வந்து சேர்ந்தான். தாமே எத்தனையோ தடவை மரணத்தை நேருக்கு நேர் கண்டிருந்த அந்த முதிய படைவீரர், உணர்வற்றுக் கிடந்த மகனுடைய தலைமாட்டில் வெட்டுண்டவர்போலக் குறுகிப்போய் உட்கார்ந்திருந்தார்.

இரண்டு பகல்களும் இரவுகளும் ஸெர்கேய் வாழ்வுக்கும் சாவுக்கும் இடையே ஊசலாடினான். இந்த நேரமெல்லாம் தான்யா அவனை விட்டு நகரவே இல்லை. நாற்காலியில் அமர்ந்தபடியே கல்லாய்ச் சமைந்துவிட்டவள்போல் இருந்தாள். போய் ஓய்வு கொள்ளும்படி மருத்துவத் தாதி கேட்டுக்கொண்ட போதெல்லாம் தலையசைத்து மறுப்பு தெரிவித்துவிட்டு, நோயாளியை ஒரே பார்வையாகப் பார்த்தவண்ணம் அசையாது இருந்துவிடுவாள்.

''பாவம், சோகமே வடிவாக உட்கார்ந்திருக்கிறாள், பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது. நெஞ்சே வெடித்துவிட்டது பாவம் அவளுக்கு. அவ்வளவு துயரம். புருஷனும் பெண்சாதியும் அவ்வளவு தூரம் ஒருவர் மேல் ஒருவர் பிரியம் வைத்திருந்தார்கள் என்று தெரிகிறது இதனால்.'' —வார்டு சுத்தப்படுத்தும் தாஷா அத்தை பக்கத்து அறையில் இப்படி விவரித்தாள்.

''என்ன அம்மா நீ, அவர்களுடைய பிரியத்தைக் குழி தோண்டி மூடுகிறாயே! பிரியம் வைத்திருந்தார்களாம், வைத்திருந்தார்கள்... கேட்கவே அசிங்கமாய் இருக்கிறது!'' என்று சீறி விழுந்

தார் மண்டையில் கட்டுப் போட்டிருந்த ஒரு நோயாளி. ''எனக்கு நினைவு இருக்கிறது, நாற்பத்து மூன்றில் நடந்த ஒரு விஷயம்... அட உங்களிடம் அதைச் சொல்லித்தான் என்ன பயன்! இந்தக் கிழவிக்குத்தான் சட்டப்படி பென்ஷன் வாங்க வயதாகிவிட்டதே. வீட்டிலே குந்தியிருப்பதுதானே, இப்படி வெட்டி அரட்டை அடிப்பதைவிட! வெறுமே பரிதாபத்தைக் கிளப்பிவிடுவது தான் மிச்சம். இந்த மாதிரி வீண் உளறலை எவளாவது அசட்டுப்பெண் கேட்டால் அவளுக்குத் தன்மேலேயே இரக்கம் உண்டாகும், அவள்...'' —நோயாளி பேச்சை இடையில் நிறுத்திவிட்டுப் போர்வையால் உடம்பை நன்ருகப் போர்த்துக் கொண்டு படுத்து, திடீரென்று அன்பு ததும்பும் குரலில் தொடர்ந்தார்: ''நேற்று ஆளோடியில் அவளைச் சந்தித்தேன். சின்னஞ் சிறு பெண் அவள், ரொம்ப இளவட்டம். நீ நம்பிளுல் நம்பு, இல்லாவிட்டால் போ!.. நான் அவளுக்கு நன்றி கூறினேன். அவள் ஒரே ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்தாள் எதற்காக என்பதுபோல. நான் எதற்காக நன்றி சொன்னேன் தெரியுமோ? இதற்காக!'' என்று நோயாளி நெஞ்சில் இருதயம் உள்ள இடத்தை முட்டியால் குத்திக் கொண்டார். ''மனிதர்களைக் காண இன்பம் உண்டாகிறது. அவர்கள் ஒருவருக்கொருவர் ஓநாய்கள் அல்லவே!''

இந்தப் பேச்சுதான் தாஷா அத்தையைப் பரதித்ததோ, அல்லது வேறு ஏதேனும்தான் நிகழ்ந்ததோ, தெரியாது. அவள் ஒரு மருத்துவத் தாதியுடன் கலந்து பேசிஞள். இருவருமாகத் தான்யாவை வலுக்கட்டாயப் படுத்திக் கட்டிலில் படுக்க வைத்தார்கள்.

தான்யா சிறிது நேரமே இறங்கினாள். தூக்கத்தில் நகரவே மறுத்த கனத்த கால்களுடன் எங்கோ ஓடினாள், ஏதோ கிடங்கில் விழுந்தாள், கத்த வாயெடுத்தாள், ஆனால் வாயில் கனத்த பஞ்சுஅடைக்கப்பட்டிருந்தது,அது குரல் வெளியே கேட்காமல் அமுக்கிவிட்டது.

வியர்த்து விறுவிறுக்கத் துள்ளி எழுந்தாள் தான்யா. உறங்கு முன்பைவிட அதிகக் களைப்பு இப்போது அவளுக்கு ஏற்பட்டது. தன் கைகளை உற்றுப் பார்த்து ஆச்சரியப்பட்டாள் — எதனாலோ அவளுக்கே தெரியவில்லை.

''நீ உனக்கே என்ன கேடு விளைவித்துக்கொண்டாய், ஸெர்கேய்?'' என்று எண்ணமிடலானாள். ''என்னைத் தனியாக விட்டு விடுவாயா என்ன? தன்னந் தனியாக?.. இல்லை, இல்லை! இதற்கு உனக்கு உரிமை கிடையாது. நீ சாவதை நான் விரும்பவில்லை, உன்னைச் சாக விட மாட்டேன்! மருத்துவர்கள் வெறுமே மனம் கலங்கிப் போயிருக்கிறார்கள். தவிரவும் வட்டார மருத்துவமனையில் வாய்ப்புக்களும் அதிகம் இல்லையே. நான் தொனேத்ஸ்க் போவேன், மருத்துவப் பேராசிரியர்களிடம்...''

''அடாடா, முன்னால் இந்த யோசனை எனக்குத் தோன்றாமல் போனது எப்படி?''

இப்படி நினைத்ததுமே தான்யா மானசீகமாகப் பிரதேசத் தலைநகருக்கு விரைந்தாள், தலை நரைத்த மருத்துவர்களிடம் சென்றாள். அவர்கள் ஸெர்கேயைப் பார்க்க வேண்டியதுதான் தாமதம், அவன் எழுந்து நடமாடத் தொடங்கிவிடுவான் என்று அவளுக்குத் தோன்றியது.

தன் அறைக்கு ஓடி வந்த தான்யாவை டாக்டர் பாதியான் துயரம் ததும்ப நோக்கிஎழுந்து நின்றார்.

''இரத்தப் பெருக்கை நாங்கள் தற்போதைக்கு நிறுத்திவிட்டோம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக, இரத்தக் குழாய்கள் மின்னேட்டத் தாக்குதலால் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அவை உயிருள்ள உடம்பில் சிதைகின்றன. இந்த நிகழ் முறையைத் தடுக்க எங்களால் முடியவில்லை. ஜீவாதார முக்கியத்துவம் உள்ள மற்ற மையங்கள் பாதிக்கப்படவில்லை என்ற நம்பிக்கை எங்களுக்கு இல்லை. பிரதேசத் தலைநகர மருத்துவமனையில் வாய்ப்பு வசதிகள் நிச்சயமாக அதிகந்தான், ஆனாலும்...'' என்று மேலே ஏதோ சொல்ல வந்தவர் தெளிவின்றிக் கையை ஆட்டிவிட்டு உட்கார்ந்தார்.

தான்யா பேசாதிருந்தாள். இனந்தெரியாத எரிச்சல் நெஞ்சில் மண்டிப் பொங்குவதை உணர்ந்தாள். யார் மேல் எரிச்சல் என்பதுதான் விளங்கவில்லை. வஞ்சக மின்னேட்டத்தின் மீதோ, அல்லது மருத்துவ இயலின் கையாலாகாத்தனத்தின் மீதோ. தனக்கு எல்லோரிலும் இனிய மனிதன் உயிர் பிழைக்க மாட்டான் என்று நம்ப அவளால் முடியவில்லை, அவள் நம்ப விரும்பவில்லை.

''ஸெர்கேய் ஒரு நாள் கூடப் பிழைத்திருக்க மாட்டான் என்று முதலில் எல்லோரும் சொன்னீர்கள்!'' என்று திடீரெனக் கடுமையான குரலில் கூறினாள் தான்யா. ''அட வீணர்களே! இந்த மாதிரிச் சம்பவம் நடந்ததில்லை என்று அரண்டுவிட்டீர்கள்!'' என்று உரக்கக் கத்தினாள். தொனேத்ஸ்க் நகரத்துக்கு உடனே போக வேண்டும் என்று உறுதி செய்துகொண்டாள்.

மருத்துவமனை அருகில் இருந்த பெஞ்சில் ஸெர்கேயின் தகப்பனார் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள் தான்யா. தரையருகே தாழத் தொங்க

விட்ட தலையைக் கைகளால் பற்றிக்கொண்டு அமர்ந்திருந்தார் கிழவர்.

''அப்பா!'' என்று கூவி அழைத்தாள் தான்யா.

அந்தோன் அந்திரேயெவிச் தலையை நிமிர்த்து மளமளவென்று பொரிந்து கொட்டினார்:

''தான்யா, மகளே, எப்பேர்ப்பட்ட துன்பம், ஐயோ கஷ்டமே... ஸெர்கேய், என் தங்க மகன்... இத்துனூண்டு இருந்தான்... சின்னச் சின்னக் கைகளால் என்னைக் கட்டிக் கொண்டு, 'அப்பா, சண்டைக் களத்துக்குப் போகாதே. உன்னைக் கொன்று விடுவார்கள்' என்றான். இப்போதோ?.. யுத்தம் கூட இல்லையே...''

தான்யா அவர் முகத்தை உற்றுப் பார்த்தவள் பயந்துபோனாள். முதுமை படிந்த, களைத்த, ஆனால் ஸெர்கேயின் கண்களை ஒத்த விழிகள் அவளை நோக்கின. இந்த மனிதரிடம் ஏதேனும் அன்பு மொழிகள், தேறுதல் வார்த்தைகள் சொல்ல அவளுக்குச் சட்டென விருப்பம் உண்டாயிற்று. மாமனாரைப் பாய்ந்து தழுவிவிட்டு அப்பால் ஓடினாள்.

பஸ்ஸில் தொனேத்ஸ்க் நகர் போகும் வழியில் தனக்குப் பழக்கமற்ற ''அப்பா'' என்ற சொல்லை மனதுக்குள் திருப்பிச் சொல்லிப் பார்த்தாள் அது உச்சரிக்க அவ்வளவு எளிதாயிருந்தது அவளுக்கு வியப்பளித்தது. இந்தச் சொல் தொண்டையில் சிக்கிக்கொள்ளும், எவரை நோக்கி முதலில் கூறப்படுமோ அவருடைய செவிகளில் நாராசம் போலப் பாயும் என்றெல்லாம் முன்பு அவள் கொண்டிருந்த அச்சமும் ஐயங்களும் எங்கோ போய் மறைந்துவிட்டன. '' 'அப்பா...' என் சொந்தத் தகப்பனார் எப்படி இருந்தார்? அவர் நல்லவர், குதூகலப் பேர்வழி என்கிறார்கள்...

நாற்பத்தி ஒன்றில் போர்க்களம் போனவர்தான், இன்றுவரை தகவல் இல்லை...''

தொனேத்ஸ்க் நகர வீதிகள் பல்குரல் ஒலிகளால் ஆரவாரித்தன. தார் ரோடில் விரைந்த மோட்டார்ச் சக்கரங்களின் சரசரப்பும் பிதுங்கப் பிதுங்க ஆட்கள் நிறைந்த டிராம் வண்டிகளின் தடதடப்பும் இந்த ஆரவாரத்தில் கலந்தன. குப்குப்பென்று வீசிய ஏப்ரல் மாதக் காற்று மரங்களை உலுக்கி ஆட்டியது. நீண்ட பனிக்கால உறக்கத்திலிருந்து அது அவற்றை எழுப்புவது போலவும், வாழ்வின் இன்பத்தை அனுபவிக்க அவற்றைத் தூண்டுவது போலவும் இருந்தது.

தான்யாவின் சம வயதினளான உற்சாகம் பொங்கும் நீலவிழி நங்கை ஒருத்தி கலீனின் மருத்துவ நிலையத்துக்கு எப்படிப் போக வேண்டும் என்று விவரித்து, அங்கே நல்ல மருத்துவர்கள் கட்டாயம் இருப்பார்கள் என்று கருத்து தெரிவித்தாள். வேடிக்கையாகக் கண்களைச் சுரித்து, ''உங்கள் தாயார் நோய்ப்பட்டிருக்கிறார்களோ?'' என்று பரிவுடன் வினவினாள் அவள்.

''இல்லை, கணவர்.''

மருத்துவமனையின் பிரமாண்டமான தலைமைக் கட்டிடம் ஜன்னல்கள் கடுகடுப்புடன் விழிகள்போல் ஒளிர, சாம்பல் நிறத்தில் ஓங்கி நின்றது. அந்தக் காட்சி தான்யாவின் உள்ளத்தில் அச்சத்தையும் அதே சமயம் நாம் வந்தது வீண் அல்ல என்ற லேசான நம்பிக்கையையும் ஏற்படுத்தியது.

ஸெர்கேய் சுய நினைவை அடைந்தான். வார்டைச் சுற்றிக் கண்ணோட்டிவிட்டுத் தகப்பனை உற்றுப் பார்த்தான்.

''நீயே வந்து விட்டாயா, அப்பா? நாங்கள் உன்னைப் பார்க்க வருவதாக இருந்தோம்...''

''பயணம் சௌகரியமாக இருந்தது. வீட்டில் எல்லாரும் சுகம்'' என்று அவனை மேலே பேச விடாமல் முந்திக் கொண்டார் தகப்பனார். ''அம்மா... அம்மாவும் சௌக்கியமாய் இருக்கிறாள். உனக்கு ஆசிகள் தெரிவித்தாள். நம் ஊரிலே வெள்ளம். ஓநாய் ஆறு கரைபுரண்டு ஓடுகிறது... உன்னை எதிர்பார்த்தோம்... அதனால் என்ன, பரவாயில்லை. உடம்பு நேரானதும் இரண்டு பேருமாக வாருங்கள்...''—தகப்பனார் பேச்சை நிறுத்தினார். உற்சாகமூட்டும் சொற்களைச் சிரமப்பட்டுத் தேடினார். அவையோ, விலாங்குகள்போல நழுவிச் சென்றன. எதிரே நின்ற ''இனி எப்படி உயிர் வாழப்போகிறாய், மகனே?'' என்ற கேள்வியில் அடிபட்டு மற்றச் சொற்கள் சிதறிவிட்டன.

''நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ளாததற்கு மன்னித்துவிடு... 'துணிவுடன் நடந்துகொள்' என்று நீ எனக்கு எப்போதும் உபதேசிப்பாயே. நான் கோழைத்தனமாக நடந்து கொள்ளவில்லை, அப்பா. எனக்கு என்ன நேருமோ, அறியேன். பிழைக்க மாட்டேனாம், சொல்லுகிறார்கள். நம்ப மனம் வரவில்லை, ஆனாலும்... இடது கையை வெட்டி எடுத்துவிட்டார்கள்... அடுத்தது வலது கையின் முறை... அப்புறம் கால்...''

தகப்பனார் கலவரத்துடன் மகனுடைய முகத்தைப் பார்த்தார்: ஜன்னியில் உளறுகிறானா என்ன? இரண்டு கைகளுந்தாம் துணிக்கப்பட்டு விட்டனவே. திடீரென்று அவருக்குப் புல்லரித்தது: மறந்துவிட்டான் மகன்!

''மகனே, உனக்கு எல்லாம் நினைவு இருக்கிறதா?''

மார்பு மட்டத்தில் இரண்டு கூர்ங் கோணங்களாக எழுந்தது துப்பட்டி. ஸெர்கேய் கண்களைப் பரக்க விழித்தான், வரண்ட உதடுகளை நக்கிக் கொண்டு தணிந்த குரலில் கேட்டான்:

''அது எங்கே?''

முழங்கைகளுக்கு மேல் துணிக்கப்பட்டுப் பந்துகள் போலப் பட்டித்துணி கட்டப்பட்டிருந்த கைகள்மீது வெறித்த பார்வை செலுத்தியவன், திடீரென நரம்பு நோயாளி போன்று பயங்கரமாக வெடிச்சிரிப்பு சிரிக்கலானான்.

வலப்புறமிருந்து செக்கச்சிவந்த கறை வெள்ளைத் துப்பட்டியில் வர வர அகன்று பரவியது.

## 10

மூக்குக் கண்ணாடி அணிந்த மனிதர், கண்ணீரும் கம்பலையுமாகத் தான்யா கூறிய கதையை முடிவு வரை கேட்டுவிட்டு, ஒன்றும் பேசாமல் மேஜையின் பின்னிருந்து எழுந்து வெளியே போனார்.

''இவரைப் பார்த்தால் மருத்துவப் பேராசிரியர் போலவே இல்லையே'' என்று நினைத்துக் கொண்டாள் தான்யா.

பேராசிரியர் ஒரு மாதை உடன் அழைத்துக் கொண்டு திரும்பி வந்தார்.

''உதவிப் பேராசிரியர் கிரீனி தீப்புண்களை ஆற்றுவதில் நிபுணர். இவர் உங்களுடன் செல்வார்.''

வலப்புறம் மறுபடி தொடங்கிய இரத்தப் பெருக்கு ஒரு விதமாக நிறுத்தப்பட்டுவிட்டது. வடிகுழாயில் ஊசி செலுத்தவோ, இரத்தம்

ஊட்டவோ மருத்துவர்கள் செய்த முயற்சிகள் எல்லாம் வீணாயின. இடது கால் மட்டுமே பாதிக்கப்படாமல் இருந்தது நிலைமையை மேலும் சிக்கலாக்கிற்று. இறுக்கத்தால் வியர்த்துப் போன மருத்துவர்கள் காப்பாற்றும் இரத்தக் குழாயைத் தேடிக்காண வீணே முயன்றார்கள். அடிக்கடி ஊசி போட்டதனால் கால் வீங்கி, கலவரமூட்டும் அளவுக்கு நீலம் பாரித்துவிட்டது. நாடித் துடிப்பு புலப்படவில்லை.

நோயாளியின் கட்டில் அருகே நிலவிய பரபரப்பில் கிரீனி வந்ததை யாரும் கவனிக்கவில்லை. அவள் சக மருத்துவர்களின் செயல்களைக் கவனமாக உற்று நோக்கினாள், பின்பு கணீர் என்ற குரலில் சொன்னாள்:

''தமனியைக் கீறுவதற்குக் கருவிகளை ஆயத்தம் செய்யுங்கள்!''

எல்லோரும் கட்டளையை நிறைவேற்றுபவர்கள் போல அவளை ஏறிட்டு நோக்கினார்கள்.

''என் பெயர் கிரீனி'' என்று அறிமுகப்படுத்திக் கொண்டு, ''கழுத்துத் தமனி வழியே இரத்தம் ஊட்ட முயன்று பார்ப்போம்'' என்றாள் உதவிப் பேராசிரியை.

இரவில் மழை பெய்தது. வெளியே கவிந்திருந்த இருளை மின்னல் கிழித்தது. இடியோசை கேட்கும் என்று திகிலுடன் எதிர்பார்த்தாள் தான்யா. ஆனால் இடி இடிக்கவில்லை. விசுவுள்ள வசந்தக் காற்று ஜன்னல்கள் மீது உராய்ந்து சீறியது. எளிதில் நொறுங்கும் கண்ணாடிகள் காற்றின் அழுத்தத்தைத் தாங்க மாட்டாமல் உடைந்து ஏப்ரல் இரவின் கொந்தளிப்பை வார்டுக்குள் புக

விட்டுவிடும் என்று தோன்றியது. சிறு மேஜை அருகே உட்கார்ந்தபடி உறங்கி வழிந்தாள் முறை வேலை மருத்துவத் தாதி. தன் நினைவு இன்றிக் கம்மிய குரலில் வீரிட்டான் ஸெர்கேய். தன் ஏலாமையால் சீற்றம் அடைந்த காற்று ஊளை யிட்டது.

''நோயாளியை தொனேத்ஸ்க் மருத்துவமனைக்கு மாற்றுவது அவசியந்தான், ஆனால் ஆபத்து பெரிது. வழியில் இரத்தப் பெருக்கு மறுபடி தொடங்கி விட்டால்...'' — கிரீனியின் இந்தச் சொற்களை நூறும் தடவையாக நினைவு படுத்திக் கொண்டாள் தான்யா. உதவிப் பேராசிரியை சொல்லாமல் விட்ட வார்த்தைகள் ஒவ்வொரு தடவையும் அவளுக்குத் திகில் ஊட்டின. ''ஆபத் தாம்... இன்று மட்டும் அவள் நேரம் தாழ்த்திருந் தால், பத்து நிமிடங்கூடத் தாமதித்திருந்தால் என்ன ஆகியிருக்கும்?'' தான்யா ஜன்னல் அருகே சென்று இருட்டை நோக்கினாள்.

''ஓய்வெடுத்துக்கொள், தான்யா, நிலை கொள் ளாமல் தள்ளாடுகிறாயே...''

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், ஸெர்கேய் பிழைத்துவிடுவானா?''

''உனக்கு என்ன சொல்லுவது! இவ்வளவு சிக்கலான கேஸ் எங்கள் மருத்துவ மனையில் இதற்கு முன் வந்ததில்லை. பாதியான் தேர்ந்த மருத் துவர், நல்ல மனிதர், உற்சாகமுள்ளவர். ஆனால்... வாழ்நாள் முழுவதும் குடல்வால் அழற்சியையும் எலும்பு முறிவையுமே குணப்படுத்திப் பழகிய வருக்குத் திடீரென்று இப்படி... நேற்றுத் தான் பாரேன்... தொனேத்ஸ்க் லேடி டாக்டர் வந்திரா விட்டால் எப்படி முடிந்திருக்குமோ தெரியாது. கழுத்துத் தமனி வழியே இரத்தம் ஊட்டும் எண்

ணமே ஒருவருக்கும் தோன்றவில்லை. கையில் துணை யிட்டே பழகிவிட்டார்கள் அல்லவா?''

''என்ன தான் செய்வது, கிளாவா?''

''வாழ்க்கையின் எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் விடைகள் தயாராக இருந்தால்தான் கவலையே இல்லையே!'' என்று தனக்குத் தானே தர்க்கித்துக் கொள்பவள்போலச் சொன்னாள் மருத்துவத்தாதி. ''அவனை தொனேத்ஸ்க்குக்கு எடுத்துப் போவது தான் எல்லாவற்றிலும் நல்லது. என்ன ஆனாலும் அது பிரதேசத் தலைநகரம்... மருத்துவர்களும் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள், வாய்ப்பு வசதி களும் அதிகம். ஆனால் இந்தப் பொறுப்பை யார் ஏற்பார்கள்? கிரீனி நம் மருத்துவர்களைக் கடிந்து கொண்டாள்: அறுவைக் கூடத்துக்கே ஏன் எடுத்து வரவில்லை என்று. ஆனால் அறுவைப் பிரிவுத் தலைவர் நோயாளியை இடம் விட்டு நகர்த்தவே கூடாது என்று பாதியானுக்குத் தடையுத்தரவு போட்டு விட்டாரே. தமனி வழியே இரத்தப் பெருக்கு தொடங்கிவிடுமோ என்று பயப்படு கிறார்கள். சிக்கலான அறுவை ஒன்றைச் செய்யும் படி யோசனை சொல்லியிருக்கிறாள் கிரீனி. அவள் போன பிறகு கொர்யுனேவ் என்ன சொன்னார் தெரியுமா? 'யோசனை சொல்வதில் எல்லாரும் சூரர்கள்தாம். நோயாளி தாக்குப்பிடிப்பான் என்று உத்தரவாதம் அளிப்பது யார்? அறுவையின் போது நோயாளி இறந்தது ஏன் என்று சொல் வதற்குத்தான் யாரேனும் கிடைப்பார்களா?' என்றார். கொர்யுனேவ் எப்போதுமே பிரிவுத் தலைவரின் வார்த்தைகளையே திருப்பிச் சொல் லுவார். நண்பர்கள்... தான்யாக் கண்ணே, நீ சுகாதார இலாக்காவில் விண்ணப்பம் செய்து கொள்ளேன்.''

''யாருக்கு?''

''ஸ்துக்காலோ என்பவர் அங்கே இருக்கிறார். பிரதேசத்தின் தலைமை அறுவை மருத்துவர். அவர் உதவி செய்வார்.''

காலைத் தறுவாயில் ஸெர்கேய் தாகமாய் இருப்பதாகச் சொன்னான். தான்யா கண்ணாடித் தம்ளரில் தண்ணீர் கொண்டுவந்தாள்.

''இந்தா ஸெர்கேய், குடி! நிறையத் தண்ணீர் பருக வேண்டும் என்று மருத்துவர்கள் சொல்லுகிறார்கள்.''—நீரைச் சிந்தாமல் இருக்க முயன்றாள். தம்ளரை இரண்டு கைகளாலும் இறுகப் பிடித்துக் கொண்டு அனேகமாக வாய்விட்டுச் சொன்னாள்: ''இது முதல் தடவைதானே. பழகப் பழகச் சரியாகிவிடும்... என் கைகளை அவனுக்கு ஏற்றபடி பழக்கிக் கொள்வேன்...'' கைகள் இறுக்கத்தால் நடுங்கின. தண்ணீரோ ஸெர்கேயின் உதடுகளை விட்டுவிட்டு மூக்கிலும் கண்களிலும் கழுத்தின் பின்னும் சிந்தியது.

ஸெர்கேயுக்கு மூச்சு வாங்கியது.

''அப்பா எங்கே?''

''நம் வீட்டில் இரவு தங்கியிருக்கிறார். நாளைக்கு அவர் போக வேண்டுமாம். கூட்டாளிகள் உன்னைப் பார்க்க வந்தார்கள். சுரங்க டிரஸ்ட் நிர்வாகியும் வந்திருந்தார்.''

''என் முழுங்கைகள் எஞ்சி இருக்கின்றனவா?''

''இதைப் பற்றிப் பேச வேண்டாம், ஸெர்கேய். மனிதர்கள் வாழத்தானே செய்கிறார்கள்... எல்லாம் செய்ய என்னால் முடியும். இதோ!''—தான்யா எழுந்து கைகளை ஸெர்கேயின் முகத்துக்கு முன் நீட்டினாள். ''இவை உன்னுடையவையுந்தாம்... நம் இருவருக்குமாக இருக்கும். அவை சின்னவை தாமே, நானும் சின்னவள்தானே என்று

பார்க்காதே. என்னுல் எல்லாம் செய்ய முடியும். மற்றவர்களைவிட மேலாகவே வாழ்வோம்!''— பதிலுக்காகக் காத்திராமலே அவள் தொடர்ந்தாள்: ''இன்றைக்கு தொனேத்ஸ்க் போகிறேன். உன்னை அங்கே கொண்டு போவார்கள். அங்கே நல்ல மருத்துவர்கள் இருக்கிருர்கள். அவர்கள் உடனே குணப்படுத்திவிடுவார்கள்!''

ஆனால் புது நாள் புதிய கலவரங்களையும் அச்சங்களையும் உடன் கொண்டுவந்தது. ஸெர்கேயின் வாழ்வுக் கணங்கள் இதோ முடிந்துவிடும் என்று சில வேளைகளில் தோன்றியது. ஆயினும் அவனுடைய வலிய உடல் மரணத்துடன் உக்கிரமாகப் போராடி அதை விரட்டியடித்தது. சாவு வேறு வழியின்றி மீண்டும் மீண்டும் புதிய கெடு வைக்க நேர்ந்தது.

ஏப்ரல் முப்பதாம் தேதி மாலைத் தறுவாயில் பச்சை ''மஸ்க்வீச்'' கார் ஒன்று சாலைப் புழுதியை வீசியவாறு வட்டார நகரத்துக்குள் விரைந்தது. மனிதனுக்கு உதவுவதற்காக அவசரமாகச் சென்ருர் மனிதர்.

ஸெர்கேய் பெத்ரோவின் நோய் விவரத்தை அறிந்தபின் ஸ்துக்காலோ மருத்துவர்களின் பரிவாரம் புடை சூழ வார்டுக்குச் சென்ருர்.

''உடம்பு எப்படி இருக்கிறது, சுரங்கத் தொழிலாளரே?''

''பெருமை அடித்துக்கொள்ளும்படியாக இல்லை, டாக்டர்...''

''அடே-டே, நீங்கள் உள்ளம் சோர்ந்து போய் விட்டீர்கள் போல் அல்லவா காண்கிறது! இது சரியில்லை, சரியே இல்லை! இவ்வளவு ஆண்மை

நிறைந்த தொழிலின் பிரதிநிதி நீங்கள்—மற்ற நோயாளிகளுக்கு எந்த மாதிரி உதாரணத்தை நீங்கள் காட்டுகிறீர்கள்? நீங்கள் இன்னும் நீண்ட காலம் வாழப் போகிறீர்கள். எப்போதாவது இந்த நாட்களை நினைவுபடுத்திக்கொள்வீர்கள், அப்போது உங்கள் பலவீனத்துக்காக வெட்கப் படுவீர்கள. அதுதான் உண்மை!''

ஸ்துக்காலோ மருத்துவர்கள் பக்கம் திரும்பிக் கூறினர்:

''பெத்ரோவை வெளியேற்ற ஏற்பாடு செய் யுங்கள். மனிதன் வாழ்வதற்காகவே பிறக்கிருன்! இந்த அறைகளில் உள்ளவர்கள் யாரும் இதை மறந்துவிடக் கூடாது. சண்டையின்போது, குண்டு கள் வெடித்துச் சிதறுகையில் மருத்துவர்கள் இதை மறக்கவில்லை... பிரதேசக் காயமருத்துவ ஆராய்ச்சி நிலையம் ஐம்பதே கிலோமீட்டர் தூரந் தான்.அதற்கே போகப் பயந்துவிட்டீர்களோ?...''

ஸ்துக்காலோ போய்விட்டார். வாயிலருகே தான்யா அவரைச் சந்தித்தாள்.

''டாக்டர், அவன் பிழைப்பானு?''

''அவனுக்கு வயது என்ன?''

இந்த எதிர்க்கேள்வியால் தான்யா வெளிறிப் போனுள். ''பரிதாபம், ஆனுல்...'' என்று டாக்டர் ஏதேனும் சொல்லிவிடுவாரோ என்ற எண்ணம் சூறைக்காற்றுப்போல அவள் மனத்தை உலுக் கியது. மெதுவாகப் பின்னே நகர்ந்து கைகளை ஆட்டினுள்:

''வேண்டாம் டாக்டர், நான் தெரிந்துகொள்ள விரும்பவில்லை, வேண்டாம்...''

''அட நீங்கள் என்ன இப்படி, குழந்தாய்! நூறு வயதுவரை அவன் வாழ இன்னும் எத்தனை ஆண்டு கள் பாக்கி என்றுதான் சொல்ல விரும்பினேன்.''

''அவனுக்கு இருபத்தைந்து வயது.''

''அப்படிச் சொல்லுங்கள்! இன்னும் எழுபத்தைந்து ஆண்டுகள் வாழ்வான். எங்கள் நிலையத்துக்கு அவனை எடுத்துப் போவோம். ஒன்று மட்டும் இப்போதே சொல்லிவிடுகிறேன்: நீண்ட காலம் சிகிச்சை செய்ய வேண்டியிருக்கும். தீப் புண்கள் விரைவில் ஆறிவிடுவதில்லை. நெஞ்சைத் திடப்படுத்திக்கொள், சுரங்கத் தொழிலாளியின் மனைவி!''

# இரண்டாம் பாகம்

## 1

இரவில் ஜன்னல் வழியே எட்டிப்பார்த்தது இருமுனை அரிவாள் வடிவான பிறைச் சந்திரன். அதன்மேல் மேகங்கள் கவிந்ததும் வார்டில் இருந்த வசதி எல்லாம் போய்விட்டதுபோல் ஆகிவிட்டது. தெளிவற்ற இரைச்சல் தொலை விலிருந்து வந்தது. அது வர வர அதிகமாகி, மோட் டாரின் கடகடப்பாகத் துலக்கமாக மாறி, பின்பு அதேபோன்று மெதுவாக அடங்கிப் போயிற்று.

''கார்கள் போகின்றன, சாலை தூரத்தில் இல்லை'' என்று தூங்கச் சிரமத்துடன் முயன்ற வாறு எண்ணமிட்டான் ஸெர்கேய். ''இப்போது மணி என்ன? கைகள்தாம் எப்படி வலிக்கின்றன! நெருப்பாய்க் காந்துகின்றன. துணித்துவிட்டார் கள் அல்லவா, அதனால்தான் வலிக்கின்றன. இங் கே ஏன் மோர்ஃபியா தரவில்லை? சீக்கிரம் விடிந் தால் தேவலை. அப்பா ஊருக்குத் திரும்பிவிட் டார். அம்மாவிடம் எல்லாவற்றையும் எப்படித் தான் சொல்லுவாரோ?...''

பக்கத்தில் கட்டில் கிரீச்சிட்டது.

தூக்கக் கலக்கத்தில் இருந்த ஒரு குரல் கேட் டது:

''நீ இன்னும் உறங்கவில்லையா, யெகோரவிச்? நானும் ஓயாமல் எண்ணிப் பார்க்கிறேன்: வீட் டில் வசிக்கிறோம், வேலைக்குப் போகிறோம், என்ன தோன்றுகிறது? உலகத்தில் நோய் நொடியே கிடை யாது, துன்ப துயரம் கிடையாது, எல்லாம் சீராக,

கச்சிதமாக நடக்கிறது என்று தோன்றுகிறது. ஆனால் இங்கே வந்து கவனித்துப் பார்த்தாலோ... வேறு ஏதோ உலகம் போல் இருக்கிறது. மனிதனைத் தான் எத்தனை விபத்துக்கள் பீடிக்கின்றன! அதிலும் இந்த மாதிரி... கம்யூனிஸம் வந்த பின்புமா இப்படியே இருக்கும்?''

''இவை எல்லாம் எங்கே போய்விடுமாம்?'' என்று இருட்டிலிருந்து பதில் அளித்தது ஒரு குரல். ''இந்த ஆபாசங்கள் குறைவாக இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை, ஆனால் இருந்து கொண்டேதான் இருக்கும். பழைய நோய்களை ஒழிப் போம், புதியவை கிளம்பும். நோய் என்பதும் வாழ்க்கையின் வெளிப்பாடுதானே.''

''ஒரே சோகச் சித்திரம்.''

''இல்லை, நம்மைப்போல நோய்ப்பட்டுக் கிடக்கும் வியாதியஸ்தர்கள் இருக்க மாட்டார்கள். நோய்த்தடுப்பு முறைகள் மேம்படும். மிக மிக ஆரம்பக் கட்டத்திலேயே நோயைக் கண்டு அறிந்து அதை ஒழித்துவிடுவார்கள், அல்லது ஒரே யடியாக அது வராமலே தடுத்துவிடுவார்கள்.''

சற்று நேரம் மௌனம் நிலவியது.

''விசித்திரமானது வாழ்க்கை!'' என்று பேச்சைத் தொடங்கிய குரல் மறுபடி ஆரம்பித்தது. ''குரல்வளை நெரியும் வரை நாம் அதைப் பற்றிச் சிந்திப்பதே இல்லை. நாம் பாட்டுக்கு வாழ்கிறோம்... சம்பளம் வாங்கியதும் சந்தோஷப்படுறோம், மது அருந்தியதும் களிக்கிறோம், வீட்டுக்காரியோடு சச்சரவிட்டால் வேதனைப்படுகிறோம். ஆழும் பாழுமாக்குகிறோம் வாழ்க்கையை. அதுவோ, விலையற்றது. காலம் கடந்த பிறகே நாம் இதைப் புரிந்துகொள்கிறோம். விரைவு ரெயிலில் பயணம் புறப்படுகிறபோது நடக்கிற

கதைதான்: நண்பனிடம் பிரிவு சொல்லிக் கொள்கிறோம், வண்டி புறப்பட இன்னும் நேரம் இருக்கும் போது வெட்டி அரட்டை அடிக்கிறோம், வண்டி புறப்பட்டு, கடைசிப் பெட்டி கடந்து சென்ற பின்புதான் முக்கியமான விஷயத்தைச் சொல்லாமல் விட்டுவிட்டோமே என்று நினைவு படுத்திக்கொள்கிறோம். நேரமோ கடந்துவிட்டது! ரெயில் கடைசிச் சீழ்க்கை அடிக்கிறது, அவ்வளவுதான்!.. என் வாழ்க்கையில் எல்லாம் நன்றாக அமைந்துவிடவில்லைதான். நான் புளுகினேன், கோழைத்தனமாக நடந்துகொண்டேன், இது மாதிரி வேறு ஆபாசங்களும் நிகழ்ந்தன. ஆனால் இதை இப்போது தான் புரிந்துகொண்டேன். ஆகா, எனக்கு மட்டும் வேறு வாழ்வு கிடைத்தால்!''

''வாழ்க்கை கார் இயந்திரம் அல்ல, மாற்றிக் கொள்வதற்கு'' என்று பெரு மூச்செறிந்தார் யெகோரவிச். ''மேலுறை அப்படியே இருக்கிறது, உள்ளடக்கமோ வேறு. யாரோ கேலியாய்ச் சொன்னது வெறும் பேச்சல்ல: மனிதன் ஆவதற்கு முன் குரங்கு சிரித்ததாம், தலையை நிமிர்த்தியதாம், அதாவது முதுகை நேராக்கியதாம். அப்புறம் வாய்விட்டு அழுது கண்ணீரைத் துடைத்துக்கொண்டதாம். தனக்குக் கை இருப்பதை அப்போதுதான் புரிந்துகொண்டதாம். பிறகே மனிதனாக மாறியதாம்.''

''ஆம், கண்ணீர்... நீ என்ன நினைக்கிறாய், யெகோரவிச், மனைவி இவனுடனேயே இருப்பாளா?''

''அதாவது எந்த அர்த்தத்தில்?''

''நேரான அர்த்தத்தில்... மனைவியாக வாழ்வாளா?''

''உன்னை என்னால் புரிந்துகொள்ளவே முடிய

வில்லே, ஒஸ்தாப்! அப்படி நீ மோசமானவனும் அல்ல...''

''அட நான் சும்மாதான் இப்படி...''

குரல்கள் அடங்கிவிட்டன.

அடுத்து நிலவிய நிசப்தத்தில் யெகோரவிச்சின் கட்டில் மெல்லெனக் கிரீச்சிட்டது. கிழவர் கோ.பத்துடன் புரண்டு புரண்டு படுத்தார்.

## 2

ஸெர்கேயின் புதிய சிகிச்சை மருத்துவர் குஸ்னெத்ஸோவ் நோயாளியை மிக மிக மேலோட்டமாகப் பார்வையிட்டதுமே உடனடியாக அறுவை செய்வது இன்றியமையாதது என்று புரிந்து கொண்டார். நேரம் தாழ்ப்பது ஸெர்கேயின் உயிருக்கே கேடாக முடியலாம். கழுத்துப்பட்டைத் தமனிகள் சோப்பு நுரைக் குமிழிகள் போல உடைந்து பேரளவான இரத்தப் பெருக்கை ஏற்படுத்தின. மரண அபாயம் நிறைந்த இந்த நிகழ்முறையை நிறுத்துவதற்கு உடனடியாக அறுவை செய்து கிட்டத்தட்ட இருதயத்தின் அருகில் தமனிகளைக் கட்டுவதுதான் ஒரே வழி.

மே தின விழா நெருங்கிவிட்டது. இதனால் அறுவை குறைந்தது இரண்டு நாட்களாவது தடைப்படலாம். குஸ்னெத்ஸோவ் முடிவு செய்தார்—மறுநாளே, மே தினத்தன்றே, அறுவை செய்துவிடுவது என்று.

அறுவை மருத்துவர் வீட்டுக்கு நடந்தே சென்றார். வேலைக்குப் பின் இப்படி நடப்பதைக் குஸ்னெத்ஸோவ் மிகவும் விரும்பினார். பல குரல்களின் ஆரவாரமும் ஆட்கள் நிறைந்த வீதிகளின் உயிரோட்டமுள்ள மூச்சும் அவருக்குப் புத்

துணர்வு ஊட்டின. மருத்துவ மனைக் கவலைகளை அவை மறக்க அடித்தன, வேலை சம்பந்தமான குழப்பங்களை அமுக்கின, நரம்புகளை ஆறுதல் பெறச் செய்தன. தொல்லைகளை எல்லாம் மறந்து விட்டு, எதைப் பற்றியும் சிந்திக்கவோ கவலைப் படவோ செய்யாமல், விழாவுக்கு முந்திய நாள் கோலாகலம் நிறைந்த நகர வீதிகள் வழியே நடக்க இன்று மாலை அவருக்கு விருப்பம் உண் டாயிற்று.

குஸ்னெத்ஸோவ் நிதானமாக வீட்டை நோக்கி நடந்தார். வீதிகள் குதூகலப் பரபரப்புடன் ஆர்த் தன. செங்கொடிகள் தீநாக்குகள் போலச் சுடர்ந் தன. காற்றில் மிதந்து வந்தது களி நிறைந்த ஆரவாரம். பெரிய திருநாளுக்கு முந்திய இரவில் மட்டுமே கமழும் ஒரு வகை மணம் எங்கும் வீசியது.

''விழா நாளில் அறுவையை வைத்துக்கொண் டிருக்க வேண்டாமோ ஒருவேளை?'' என்ற சந்தே கம் திடீரென்று மருத்துவரைச் சுரீர் என்று குத் தியது. ஆனால் அதே கணம் நோயாளியின் முகமும், ''டாக்டர், நான் பிழைப்பேனா?'' என்ற அவன் குரலும் நினைவுக்கு வந்தன. அவனுடைய விழி களில் எதையும் நம்பாத தன்மை புலப்பட்டது. ''அவன் பிழைப்பான், பிழைக்க வேண்டும்! மனிதன் உயிர் வாழ வேண்டும்!''

வீட்டருகே மகன் குஸ்னெத்ஸோவை எதிர் கொண்டான். அவன் ஓடிவந்து துள்ளி அவர் கழுத்தைக் கட்டிக்கொண்டான்.

''அப்பா, அம்மா எவ்வளவு அழகான கவுன் வாங்கிக்கொண்டிருக்கிறாள் தெரியுமா? ரொம்ப அழகான கவுன்! நாம் கொண்டாட்ட ஊர்வலத் தில் கலந்து கொள்வோம் அல்லவா? நீ என்னைத் தோளில் உட்கார்த்திக் கொள்வாயா? உனக்கு

ஒரு பலூன் தருகிறேன், வேண்டுமா? ரொம்ப ரொம்ப அழகான பலூன்!''

தகப்பனார் புன்னகை புரிந்தார்.

''விஷயம் என்ன தெரியுமா, ஸெர்கேய்... வந்து, நாளைக்கு என்னால் உங்களோடு வர முடியாது. எனக்கு ரொம்ப வருத்தம், ஆனாலும்...''

மகன் கையிலிருந்து வழுகிக் குதித்து மூக்கை உறிஞ்சினான்.

''எப்போதுமே நீ இப்படித்தான் அப்பா, ஒரு நாள் காற்பந்தாட்டம் என்பாய், மற்றொரு நாள் வேறு ஏதாவது...''

''சே சே! நீ ஆண்பிள்ளை அல்லவா! என்னைப் புரிந்துகொள்ள முயற்சி செய். ஒரு மனிதன் மிக மோசமான நிலைமையில் இருக்கிறான். விபத்தில் மாட்டிக்கொண்டு விட்டான். அவனுக்கு உதவ வேண்டும் கட்டாயமாக. புரிகிறதா?''

''உனக்கு எப்போதுமே மற்றவர்கள்மேல் பிரியம். வீத்யா தன் அப்பாவோடு போவான். நானோ...''

3

ஸெர்கேயின் தகப்பனார் அந்தோன் அந்திரே யெவிச்சைத் தான்யாவும் தொனேத்ஸ்க் நகரில் வசித்துவந்த ஸெர்கேயின் ஒன்றுவிட்ட சகோதரன் மிஹயீலும் வழியனுப்பினார்கள். ரெயில் நிலையத்தில் அவர்கள் மௌனம் சுமையாய் அழுத்த, பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். தகப்பனார் குனிந்த தலையை நிமிர்த்தாமல் அடிக்கடி சிகரெட் புகைத்துக்கொண்டிருந்தார். போர்முனை வழக்கம் அவருக்கு மீண்டும் வந்துவிட்டது.

நினைவிழந்த மகன் மூர்ச்சை தெளிந்து தான் இரண்டு கைகளையும் இழந்துவிட்டதைக் கண்டு கொண்ட கணம் முதல் தகப்பனாரின் நெஞ்சில் ஏதோ உடைந்து போயிற்று. எல்லாம் நலமே முடியும் என்ற நம்பிக்கை ஏற்கனவே மெல்லிய இழை அளவே இருந்தது. அதுவும் அக்கணமே அறுந்து போயிற்று. அன்று மகனுடைய வார்டிலிருந்து வெளிவந்ததும் தகப்பனார் தம் விருப்பத்துக்கு மாறாகச் சிற்றுண்டிச் சாலைக்குப் போய் வோத்கா பருகினார். மகனுடைய பயங்கரச் சிரிப்பை எதனாலும் அமுக்க முடியாது என்பதை அப்புறம் உணர்ந்தார்.

''நீ அவனை அடிக்கடி போய்ப் பார்த்துக்கொள், மிஹயீல். அவன் தாயாரை நான் இங்கே வர விட மாட்டேன், அவளால் தாங்க முடியாது... ஏதாவது நேர்ந்தால் தந்தி அடியுங்கள்...''

மீண்டும் துயர மௌனம் குடிகொண்டது. எஞ்சின் சீழ்க்கை அடித்ததும் அந்தோன் அந்திரேயெவிச் திடுக்கிட்டு வேதனையுடன் முகஞ்சுளித்து எழுந்தார்.

''அப்பா!'' என்று அழைத்தாள் தான்யா.

''ஆமாம், எனக்குத் தெரியும்... போக வேண்டும்'' என்று சொல்லிவிட்டு அவர் வண்டியை நோக்கி நடந்தார்.

தான்யா இரவை மிஹயீல் வீட்டில் கழித்தாள். மிஹயீலின் மனைவி ஆன்னா துடியானவள், கருவிழியள். தான்யாவை அவள் அன்புடன் எதிர் கொண்டாள். அறை முழுவதும் அமைதியும் வசதியும் நிதானமான குடும்ப வாழ்க்கையின் பாங்கும் ஒளிர்ந்தன. மேஜை மீது வசந்தகாலத்தை நினைவு படுத்திக்கொண்டு எழில் காட்டின மலர்

கள். நேரந்தாழ்த்து இரவுச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்வதில் கணவனும் மனைவியும் பர பரப்புடன் ஈடுபட்டார்கள்.

''ஒரு காலத்தில் நாமும் இப்படித்தான் இருந் தோம்...'' என்று கண்ணீரை அடக்கிக்கொண்டு எண்ணமிட்டாள் தான்யா.

''சாப்பிடு அம்மா, தான்யா, சாப்பிடு!'' என்று உபசரித்தான் மிஹயீல்.

''ஸெர்கேயும் இப்படி உபசரிப்பது உண்டு...'' என்று எண்ணியபோதே ரொட்டித் துண்டு தொண்டையில் சிக்கிக்கொண்டது, கரண்டி கணீ ரோசையுடன் தரையில் விழுந்தது. தான்யா மேஜைமேல் குப்புறக் கவிழ்ந்து தேம்பி அழத் தொடங்கினாள்.

ஒருவரும் அவளைத் தேற்றவில்லை. மிஹயீல் பேசாதிருந்தான், யாரும் காணாதபடிக் கண் ணீரைத் துடைத்துக்கொண்டாள் ஆன்னா. சொற் கள் பயனற்றவையாக இருந்தன... பெருந்தீ மூண்டெரியும்போது அடிக்கும் காற்று போல அவை அதை இன்னும் அதிகமாகத் தழல் வீசி எரியச் செய்திருக்குமே தவிர வேறல்ல.

கட்டிலில் படுத்த தான்யாவுக்கு வெகு நேரம் வரை உறக்கம் பிடிக்கவில்லை. அகலத் திறந்த கண்களால் இருட்டில் உற்று நோக்கினாள், சென்ற ஆண்டு மே தின விழா எப்படி இருந்தது என்று நினைவுபடுத்திக் கொள்ள முயன்றாள். ஆனால் எண் ணங்கள் கண்டுபிடிக்க முடியாத வழிகளில் வில கிச் சென்று வரப்போகும் நாளுக்கு, வரப்போகும் அறுவைக்கு இட்டு வந்தன.

பொழுது புலர்ந்ததும் புலராததுமாகத் தான்யா எழுந்துவிட்டாள். நகரப் போக்குவரத்து இன்னும் தொடங்கவில்லை. எனவே அவள் கால்

நடையாகவே நகரம் முழுவதையும் கடந்து மருத்துவ மனை சென்றாள்.

## 4

காலை முதலே ஊர்வல அணியினரின் வரிசைகள் வழியில் காணப்பட்டன. மணிக்கு மணி அவற்றின் பெருக்கு அதிகரித்தது. குரல்கள் இன்னும் அடர்ந்து ஒலித்தன. பாட்டுக்கள் வர வர உரக்க முழங்கின. காற்று இந்தப் பாட்டுக்களின் துணுக்குகளை வாரி வந்து மருத்துவ மனை ஜன்னல்களின் திறந்த காற்றுப் போக்கிகள் வழியே எறிந்தது, வெயில் பட்டுச் சூடேறிய ஜன்னல் கண்ணாடிகள் மேல் மோதிச் சிதற அடித்தது.

குஸ்னெத்ஸோவ், வெள்ளை வெளேரென்று பளிச்சிட்ட புதிய மேலங்கி அணிந்து விரைவாக வார்டுக்குள் புகுந்தார்.

''விழா வாழ்த்துக்கள், நண்பர்களே! ஸெர்கேய், புதிய இடத்தில் என்னென்ன கனவுகள் கண்டாய்? நல்லது, பரவாயில்லை, பரவாயில்லை... இன்று ஒரு சிறு அறுவை செய்வோம், அப்புறம் வாழ்க்கை அதிகக் குதூகலமாகக் கழியும்! மோர்ஃபியா தரவில்லை என்று கோபப்படுகிறாயோ? வீண்! நமது வார்டின் அனுபவசாலியான நோயாளி இவான் யெகோரவிச் லாரின் நான் சொல்வது சரி என்பதைச் சொந்த அனுபவத்தால் ஊர்ஜிதப்படுத்துவார்.''—குஸ்னெத்ஸோவ் புன்னகை செய்தார். ''சரிதானே, யெகோரவிச்?''

''மெய்தான். உங்களுக்கு நன்றி... ஆனால் வலி பொறுக்க முடியாமல் நானும் பற்களை நெறு நெறுத்தது உண்டு.''

''பக்கத்து நோயாளிக்கு உம் அனுபவத்தைச் சொல்லும். எரிச்சல் மண்டியதையும் பற்களை

நெறுநெறுத்ததையும் சொல்லவே வேண்டாம்.''

இந்த உரையாடலுக்குப் பின் வார்டில் சட்டென இதமான கதகதப்பு பரவியது. புதிதாக வந்த கடும் நோயாளியைத் தலைக்குநாள் பிணித்திருந்த கட்டிப் போட்டது போன்ற உணர்ச்சி அகன்றுவிட்டது.

மருத்துவர் போனதுமே எல்லா நோயாளிகளும் ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டு ஏககாலத்தில் பேசத் தொடங்கினார்கள். ஒவ்வொருவனும் தன் வாழ்க்கையின் மிகக் கடினமான நிகழ்ச்சியை —ஸெர்கேயுக்கு நிலையுறுதியின் எடுத்துக்காட்டாகப் பயன்படக் கூடிய நிகழ்ச்சியை—விவரிக்க ஆசைப்பட்டான். அதன் மூலம் ஸெர்கேயுக்கு அறுவைக் கூடத்தில் இன்றியமையாது தேவைப் படும் மன வலிமையை அளிக்கலாம் என்று அவர்கள் கருதினார்கள்.

''பெர்லின் அருகில், அதாவது இராணுவ மருத்துவ மனையில், என்னுடன் இருந்தான் ஒரு பீரங்கிப் படைவீரன்'' என்று விட்டத்தில் பார்வையைப் பதித்தவாறு சொல்லத் தொடங்கினார் யெகோரவிச். ''இதோ இப்படியேதான், பக்கத்துக் கட்டிலில். கன்ஸ்தாந்தீன் என்று பெயர்... செல்லமாகக் கோஸ்த்யா என்று அழைப்போம்... நல்ல அழகன், இளைஞன்... அக்கார்டியன் வாசிப்பதில் ஒரே மோகம் அவனுக்கு! யுத்தத்தில் அவனுக்கு அதிர்ஷ்டமில்லை, கொஞ்சங்கூட அதிர்ஷ்டமில்லை. போர் முடியும் தறுவாயில் பாசிஸ்ட் அவனைக் காயப்படுத்திவிட்டான். காலிலும் கண்களிலும். பாசிஸ்ட் சுரங்க வெடி தாக்கியதால் இந்தப் படைவீரனின் கண்கள் அவிந்து போயின... கோஸ்த்யா-கன்ஸ்தாந்தீன் நான்கு பகல்களும் நான்கு இரவுகளும் காட்டின் வழியே ஊர்ந்து

தன் படைவீரர்களிடம் சேர்ந்தான். பசியும் குளிரும் காயமும் வதைக்க, உலகமே இருண்டுவிட்ட நிலையில்... முதலில் தற்கொலை செய்துகொள்ள நினைத்தானும். கைத்துப்பாக்கியை உறையிலிருந்து எடுத்தும் விட்டானும். அப்புறந்தான் அவனுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்ததாம். 'ஸ்தாலின்கிராதிலிருந்து இந்தக் கொள்ளைக்காரர்களின் பதுங்கிடம் வரையில் நான் வந்திருப்பது எதற்காக?! இல்லை, பாசிஸ்ட், என் சாவினுல், நீ களி கொண்டாடப் போவதில்லை!'—இப்படித் தீர்மானித்து ஊர்ந்தே தன் படைவீரர்களிடம் போய்ச் சேர்ந்தானும். ஒதேஸ்ஸா நகரில் அவனுக்குச் சிகிச்சை செய்யப்பட்டது. ஒரு கண் மறுபடி பார்வை பெற்றுவிட்டது—முழுதாக இல்லை என்றாலும் நாற்பது சதவிகிதம் பார்வை வந்துவிட்டது. இந்த விஷயம் யுத்தத்துக்குப் பிறகே எனக்குத் தெரிய வந்தது. தற்செயலாக ஒரு கிராமத்தில் அவனைச் சந்தித்தேன். நான் அவனை அடையாளம் கண்டுகொண்டேன். அவனும் குரலைக் கொண்டு என்னைத் தெரிந்துகொண்டான்... அந்தக் கிராமத்தில் அவன் பண்பாட்டுக் கழகத்தை நடத்துகிறான். ஒரே துடியாக வேலை செய்கிறான். கலியாணமாகிக் குழந்தைகளுக்குத் தகப்பனாகிவிட்டான். சும்மாவா... இரண்டு மகன்கள். மூத்தவன் கல்லூரிப் படிப்பை முடிக்கும் தறுவாயில் இருக்கிறான். இளையவன் பள்ளிக்கூடத்தில் படிக்கிறான். கோஸ்த்யாவின் அக்கார்டியன் வாத்தியத்தைக் கேட்கப் பிரதேசம் முழுவதிலுமிருந்து ஆட்கள் வந்து கூடுகிறார்கள்...''

''இப்படியேதான் நாங்கள் போரிட்ட வோல்ஹவ் போர்முனையில் நடந்தது...'' என்று தொடங்கினார் ஒஸ்தாப் இயோஸிஃபொவிச்.

ஸெர்கேய் இந்தக் கதைகளை அரையும் குறையுமாகவே கேட்டான். ஆயினும், ஸ்தாலின்கிராத் முதல் பெர்லின்வரை இருந்த பற்பல இராணுவ, முன்முக மருத்துவ மனைகளைக் கண்டான். அவற்றில் நிறைந்திருந்தார்கள் அற்புத மனிதர்கள். அவர்களுடைய வீரத்தின் எதிரே பின்வாங்கி ஓடின ஆயிரம் சாவுகள்.

ஸெர்கேய் பொறுமை இழந்து கதவை நோக்கினான். அவன் தான்யாவை எதிர்பார்த்தான். அறுவை அவனுக்கு அச்சமூட்டவில்லை. அறுவை மிகக் கடினமாக, நீடித்ததாக இருக்கும் என்பது அவனுக்குப் புரிந்தது. ஆனாலும் அதைப் பற்றியோ, அதன் விளைவைப் பற்றியோ அவன் எண்ணவே இல்லை. அறுவை மேஜைமீது இப்போது மூன்றும் தடவையாகக் கிடக்க வேண்டியவன் தான் அல்ல போன்றும் தனக்கு அவ்வளவாக அறிமுகம் அற்றவனும் என்ன காரணத்தாலோ வாழ்க்கை துன்பச் சுமை ஆகிவிட்டவனுமான வேறு எவனோ போன்றும் உணர்ந்தான் ஸெர்கேய்.

யெகோரவிச் தொண்டையை இருமிக் கனைத்து, கால்களைத் தொங்கவிட்டவாறு கட்டிலில் அமர்ந்துகொண்டு பேசலானார்: ''ஒன்றை நினைவில் இறுத்திக்கொள், மகனே. வாழ்க்கையை விரும்புபவன் அதற்காகப் போரிடுகிறான்! பட்டப் பகலில் தலைமேல் பாறுங்கல்லைச் சுமப்பது கஷ்டந்தான்... சூரியன்கூட ஒளி வீசுவதை நிறுத்திவிட்டது போல் தோன்றும். எல்லாருக்குமே அப்படித்தான். நாங்கள் விவரித்தோமே, சில படைவீரர்கள் பற்றி, அவர்கள் மட்டும் தனிவகை ஆட்கள் என்று நினைக்கிறாயோ? கிடையவே கிடையாது! அவர்களும் சாதாரண மனிதர்கள்தாம்—உன்னையும் என்னையும்போல. ஆனால் வாழ்க்கை

*யில் அவர்கள் ஆழ்ந்த பற்று கொண்டிருந்தார்கள், அதற்காக முழுமூச்சாய்ப் போராடினார்கள். எதற்காகச் சொல்கிறேன் என்றால் வாழ்வுக்காக முடிவுவரை போராட வேண்டும். அதற்கு அது தகுந்ததே.''*

*ஆளோடியில் மணி கிணுகிணுத்தது. வார்டில் நோயாளிகளின் பேச்சு நின்றது. விழா அணி ஊர்வலத்தினரின் பாட்டுக்கள் ஜன்னல் வழியே வந்தன. கவவு கிரீச்சிட்டது. நோயாளிகளை அறுவைக் கூடத்துக்கு எடுத்துச் செல்லும் தள்ளு வண்டி வார்டுக்குள் புகுந்தது.*

*''தான்யாவால் நேரத்துக்குள் வர முடியவில்லை'' என்று எண்ணிய ஸெர்கேய் மனதுக்குள்ளாகவே தன்னைத் தேற்றிக்கொள்ள முயன்றான்: ''வருவாள், கட்டாயம் வருவாள்.''*

*ஆளோடி வழியே அறுவைக்கூடம் செல்கையில் ஸெர்கேயின் காதுகளில் மறுபடி பட்டது பாட்டு. ''பாடுகிறார்கள்...'' என்று எண்ணியவன், உற்றுக் கேட்டான்.*

*திறந்த ஜன்னல் வழியே வந்தன பாட்டின் சொற்கள்:*

**''குழல்கள் இசைத்திடும் வசந்தப் பாட்டில்
கும்மாளம் போட்டுக் களி பொங்குவாய்!
விழைவேன் உன்னை நான், வாழ்வே, நீயும்
விரும்புவாய் என்னை, என நம்புவேன்.''**

*பாட்டின் சொற்கள் கிண்டல் நிறைந்த பசப்புடன் ஸெர்கேயின் நெஞ்சில் சுரீரெனப் பாய்ந்தன.*

*''கொண்டு போங்கள்! சீக்கிரம்!..''*

*ஸெர்கேயின் இந்தக் கூச்சலால் அரண்டுபோன மருத்துவத் தாதி நடையை விரைவுபடுத்தினாள்.*

தான்யா நேரம் தாழ்த்துவிட்டாள். மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க வார்டுக்குள் ஓடி, மலர்ச் செண்டு பிடித்த கையை முன்னே நீட்டியவள், திகைத்து நின்றுவிட்டாள்: ஸெர்கேயின் கட்டில் வெறுமையாய் இருந்தது.

மலர்கள் தரையில் விழுந்தன.

''வெகு நேரம் ஆயிற்றே?''—குரல் நடுங்கியது.

''அரைமணி நேரம் ஆயிற்று. நீ கவலைப்படாதே. எல்லாம் சரியானபடி நடந்தேறும். மருத்துவத் தாதி வந்து அறுவை நல்லபடி நடக்கிறது என்று சொன்னாள். ஸெர்கேய் சந்தோஷமாய் இருந்தான், இரவு தூங்கினான்'' என்று தேற்றினார் யெகோரவிச்.

தான்யா மலர்களைப் பொறுக்கிச் சேர்த்து, கட்டிலை நெருங்கினாள். கசங்கி வியர்வையால் நனைந்திருந்த தலையணைமேல் மலர்ச் செண்டை வைத்தாள்.

''அறுவைக் கூடம் எங்கே இருக்கிறது?''

''ஆளோடி வழியே நேரே போக வேண்டும். அங்கே விட மாட்டார்கள். இங்கேயே காத்திரு.''

''நான் அங்கே...'' என்று வாக்கியத்தை முடிக்காமலே வெளியே ஓடினாள் தான்யா.

ஸெர்கேய் இரண்டுவரை எண்ணுவதற்குள் அவன் முகத்துக்கு உயரே தொங்கிய பிரமாண்டமான விளக்கு மீது தலைகீழாக ஓடிவந்தான் சித்திரக் குள்ளன் வடிவான சிறு மனிதன். ''அடே, இது நானே தான்!'' என்று வியந்தான் ஸெர்கேய். சித்திரக் குள்ளனே சிலந்தி இழைக் கைகளை ஆட்டியவாறு விளக்கிலிருந்து நழுவிக் கரணமடித்து வெற்று வெளியில் பறந்தான். தன் உடலிலிருந்து கைகள் துணித்து அகற்றப்படுவதை ஸெர்கேய்

நொடிப்போது உணர்ந்தான். அப்புறம் அவை திரும்ப வந்துவிட்டன, கைகளின் கூரிய உணர்வு தோன்றியது.

''கை-ஐ-ஐ-கள்! அவை எனக்கு இருக்கின்றன!'' என்ற முழக்கம் மூளையில் ஆர்த்தது. ஸெர்கேய் கைகளை இறுக்கினான். விரல் கணுக்கள் சுடக்கிட்டன. கரங்கள் உடலிலிருந்து பிய்ந்து காற்றில் மிதந்தன. ''எனக்கு வேண்டாம்!'' என்ற சொற்கள் ஸெர்கேயின் உள்ளிருந்து வெடித்து வந்தன, ஆயினும் அவற்றைச் சொல்ல அவனுக்கு வாய்க்கவில்லை. முதுகுக்குப் பின்னிருந்த ஆதாரம் நகர்ந்து விட்டது, அவன் அடியற்ற கருங் குழியில் திடீரென விழுந்தான்.

''முடிவு!'' என்ற எண்ணம் கணப்போது தோன்றி, புரிந்துகொள்ளப்படாமல் அக்கணமே அவிந்து போயிற்று. அச்சத்தையோ வருத்தத்தையோ அது ஏற்படுத்தவே இல்லை. மயக்க மருந்தினல் உண்டான ஆழ்ந்த உறக்கம் அவனை ஆட்கொண்டு விட்டது.

## 5

வீடு செல்லும் வழியிலும் வீட்டில் மகனோடு விளையாடிய போதும் குஸ்னெத்ஸோவ் புதிய நோயாளியையும் மறுநாள் நடக்கவிருந்த அறுவையையும் பற்றிய எண்ணங்களை மனத்திலிருந்து விரட்ட எவ்வளவோ முயன்றார், ஆனால் அவரால் அவற்றை விரட்ட முடியவில்லை.

''திடீரென்று இருதயம் நின்றுவிட்டாலோ?... அறுவையைத் தள்ளிப் போடலாமா?... நான் விழா கொண்டாடிக் கொண்டிருக்கையில் அவனுடைய தமனியிலிருந்து மறுபடி இரத்தம் பெருகத்

தொடங்கிவிடும், விளைவாக... இப்படி மட்டும் நேர்ந்தால் என்னால் என்னை மன்னித்துக் கொள்ளவே முடியாது!''

இன்றும் மருத்துவமனைக் கட்டிடத்தை நெருங்குகையில், குஸ்னெத்ஸோவ் தம் அறுவை மருத்துவ வாழ்க்கையில் முன் ஒரு போதும் அடைந்திராத விதத்தில் பதற்றம் அடைந்தார்.

''நாம் இன்னும் போராடிப் பெறுவோம்!'' என்று தமக்கே தென்பும் உற்சாகமும் ஊட்டிக் கொண்டார் அவர். மருத்துவ மனையின் திண்ணிய கதவை உறுதியான தீர்மானத்துடன் திறந்தார். மருந்து நெடி நேரே அவர் முகத்தில் அடித்தது. அது அவருடைய பதற்றத்தை அகற்றி அவரை வழக்கமான நிலைக்குக் கொண்டுவந்தது.

ஆனால் அறுவைக்கூட முன்னறையில் நோயணு நீக்கம் செய்த கையுறைகள் அணிந்த தமது கரங்களைப் பார்வையிட்டபோது அச்சம் போன்ற ஒன்றை அவர் மீண்டும் உணர்ந்தார்.

குஸ்னெத்ஸோவ் ஜன்னல் அருகே போய், வீதியில் பார்வை செலுத்தினார். விழா ஊர்வலத்தினரின் நல்லுடை பூண்ட அணிகள் ஆற்று வெள்ளம்போலப் பெருகிய வண்ணமாய் இருந்தன. பளிச்சிடும் வானவில் ஆட்களின் தோள்கள்மேல் அமர்ந்து ஒழுங்கற்றுக் குழம்பிய தனது எல்லா வண்ணங்களுடனும் துடிப்பதுபோல் இருந்தது அந்தக் காட்சி.

''டாக்டர் குஸ்னெத்ஸோவ்! நோயாளி மேஜை மேல் கிடக்கிறான்'' என்று அழைத்தார் துணை மருத்துவர் கார்தேலிஸ்.

குஸ்னெத்ஸோவ் சட்டென்று ஜன்னலிலிருந்து திரும்பி அறுவைக் கூடத்துக்கு நடந்தார். மேதின விழா ஊர்வலத்தினரின் கொடிகள் இன்னும் அவர்

விழிகளில் அலை வீசிக்கொண்டிருந்தன, ஆயினும் அவர் மானசீகமாக நோயாளியின் அருகில் இருந்தார். ''அறுவைக் கத்தி!'' என்று சொன்னதுமோ மற்ற எல்லா நினைவுகளும் மறைந்து விட்டன. மென்மையற்ற அறுவை மேஜைமீது கண்களைக் கூசச் செய்யும் விளக்கு வெளிச்சத்தில் நீளக் கிடந்த நோயாளியும், அவனுடைய நாடித் துடிப்பும் மூச்சும் உடல் நிலையுமே அவர் மனத்தில் எஞ்சின.

அறுவை சிறு தடங்கலுடன் தொடங்கியது. காறை எலும்பை ஒட்டினாற்போல ஆழமற்ற மேல் அறுவை நடத்தியபின் குஸ்னெத்ஸோவுக்கு அறுவைக் கத்தி திருப்தி அளிக்கவில்லை. மாற்றாக வேறு கத்தி தரும்படி கேட்டார். துணை மருத்துவர் வியப்படைந்து புருவங்களை உயர்த்தியவர், சக ஊழியரின் மனநிலையைப் புரிந்துகொண்டு, ''துணிவுடன் வேலை செய், நண்பரே!'' என்னும் பாவனையில் புன்னகைத்தார்.

''Nervus vagus*ஐ நினைவு வைத்துக்கொள்'' என்று உரக்கக் கூறினார் அவர்.

''அட படு சைத்தான் இந்த நுரையீரல்-இரைப்பை நரம்பு! தமனியின் பக்கத்திலேயே கிடக்கிறது, மூச்சுப் பேச்சுக் காட்டாமல். எங்கேனும் அதன் மேல் பட்டுவிட்டோமோ, போச்சு! கூடாது, கூடாது, தற்செயல் விபத்துக்களுக்கே இடம் கொடுக்கக் கூடாது. மிக மிக ஜாக்கிரதையாக, துல்லியமாக வேலை செய்ய வேண்டும். ஒரு மில்லி மீட்டர் கோணினாலும் உயிர் போய்விடும். கார்தேலிஸ் இதை அறிவான். இல்லாவிட்டால்

---

*Nervus vagus — மூளை நரம்புகளில் பத்தாவது இணை நரம்பு. நுரையீரலையும் இரைப்பையையும் சார்ந்தது. — மொழிபெயர்ப்பாளர்.

இன்னொரு தடவை நினைவுபடுத்தியிருக்க மாட்டான். நான் பதற்றப்படுவதைக் கவனித்துவிட்டான். 'அதிகத் துணிவோடு...' என்று என்னை உற்சாகப்படுத்துகிறான். இவனோடு வேலை செய்வது நன்றாய் இருக்கிறது. இவன் என்னை நம்புகிறானா? நம்பாவிட்டால் எனக்குத் துணை செய்ய வந்திருக்க மாட்டானே. இதோ வடிகுழாய் தென்பட்டுவிடும். அதன்பின் தமனி. இப்போதைக்குக் கொஞ்சம் வேகமாக வேலை செய்யலாம்.''

குஸ்னெத்ஸோவ் நொடிப் போது முதுகை நிமிர்த்தினார். அறுவைத் தாதி சிறு துவாலையால் அவர் முக வியர்வையை லாகவமாகத் துடைத்தாள்.

''முக்கியமானது இதோ தொடங்கும்.'' கணக்கற்ற இரத்தக் குழாய்களையும் நரம்புகளையும் கடந்து, எதையும் தொட்டு விடாமல் தமனியை அடைந்து அதற்கு அடியாகப் பட்டு நூலைச் செலுத்தி அதைக் கட்டிவிட வேண்டும்.

அறுவைக் கூடத்தில் புழுக்கமாக இருந்தது. ஸெர்கேய் மயக்க மருந்தின் பாதிப்பில் ஆழ்ந்த உறக்க நிலையில் இருந்தான்.

தமனியை அபாயகரமான வழியில் நெருங்கியவாறே ''நாடித் துடிப்பு?'' என்று கேட்டார் மருத்துவர்.

''முறைப்படி இருக்கிறது!''

''வடிகுழாயையும் மேலே உள்ள நரம்பு இழைக் கொத்தையும் தொடாமல் விலகிச் செல்ல வேண்டும்.''

''வடிகுழாயை அவ்வளவு வெளித் தெரிய விடாதே. அது வெடித்துவிடக் கூடும்'' என்று எச்சரித்தார் கார்தேலிஸ்.

அறுவைக் கத்தி மில்லிமீட்டர் மில்லிமீட்

டராகத் தொட்டுணர்ந்தவாறு இலக்கை நோக்கி நகர்ந்தது. கத்தியின் முனையில் இருந்தது நோயாளியின் உயிர்.

''வடிகுழாயைக் கீறுமல் தமனியை நெருங்குவது முடியாது'' என்று எண்ணி, துணை மருத்துவரிடம் அதைச் சொன்னார் குஸ்னெத்ஸோவ்.

''பார்க்கிறேன், அவை அனேகமாக ஒன்றிணைந்துவிட்டன...''

இரத்தக் குழாய் மெய்யாகவே வெடித்துவிடக் கூடும். மின்னேட்டத் தாக்கினல் பாதிக்கப்பட்டிருந்த அதன் சுவர்கள் தங்கள் மீள்விசையை இழந்து விட்டன. எனவே இரத்த அழுத்தத்தை அவற்றால் தாங்க முடியாது போகலாம்.

''என்ன செய்வது?''

''கீறு! வேறு வழி இல்லை. பார்த்தாயா?'' என்றான் கார்தேலிஸ்.

தாம் இந்த ஒரு மணி நேரமாக அடைய முயன்று கொண்டிருந்ததைக் குஸ்னெத்ஸோவ் கண்டார் என்பதைவிட உணர்ந்தார் என்பதே சரியாய் இருக்கும். அறுவைக் கத்தி முனை தொட்டுத் தடவுவதுபோலத் தமனியின் சுவற்றில் சாய்ந்தது. அக்கணமே விகுவுள்ள நாடித் துடிப்பு அலை அதை அப்பால் தள்ளியது. நரம்பு இழைகள் சிலந்தி வலை போல இரத்தக் குழாயைச் சுற்றிப் பின்னியிருந்தன. இம்மாதிரி ஓர் இழையைத் தொட்டாலும் போதும்... அவற்றை ஒரு புறம் விலக்கிவிட வேண்டும். உயிருள்ளதை உயிருள்ளதிலிருந்து பிரித்து வேறாக்க வேண்டும். அதுவும் நரம்புகளையோ தமனியையோ சேதப்படுத்தாமல்.

சந்தேகம் கணப்போது குஸ்னெத்ஸோவை வதைத்தது: ''சாத்தியமில்லை. இது முற்றிலும் சாத்தியமில்லை...''

சுவர்க் கடிகாரத்தின் டிக்-டிக் ஒலி பெரும் சம்மட்டி அடிகள் போலத் தோன்றும்படி அத் தகைய நிசப்தம் அறுவைக் கூடத்தில் நிலவியது.

''நூல்!'' என்று கேட்ட குஸ்னெத்ஸோவ் அக் கணமே நெருப்பில் சுட்டுக் கொண்டவர்போல மேஜையிலிருந்து துள்ளி விலகினர்.

செம்பழுப்புக் குருதித் தாரை நேரே அவர் முகத்தில் அடித்தது. அறுவை இடத்தை நிறைத்து அதன் விளிம்பைக் கடந்து வழிந்து நோயாளியின் மார்பில் பெருகிற்று இரத்தம்.

''வடிகுழாயை!'' என்று கத்தினர் குஸ்னெத்ஸோவ்.

''அழுத்தி வைத்திருக்கிறேன். பயனில்லை.''

''நாடித் துடிப்பு?''

''நாடி தளர்கிறது. துடிப்பு ஒரு சீராய் இல்லை.''

''இந்த அறுவையில் சைத்தான் தான் என்னை மாட்டி விட்டிருக்கிறான்!... இவன் மனைவியின் முகத்தில் எப்படி விழிப்பேன்?...''

''கார்தேலிஸ், பஞ்சுப் பற்றைகள்! இரத் தத்தை ஒற்றி அகற்று, நான் தமனியைக் கட்டு கிறேன்.''

''என்ன இது, தவரு அல்லது தவிர்க்க முடி யாத நிகழ்ச்சியா? இந்தக் குழம்பலில் நான் எதை யேனும் நரம்பை நசுக்கிவிட்டேனே, தொலைந் தது... அட கடவுளே, கட்டிவிட்டேன் போலிருக் கிறது.''

மறு கணமே அவர் அறுவைத் தாதியின் அகலத் திறந்த விழிகளைக் கண்டார், அவளிடமிருந்து வெடித்துச் சீறிய கிசுகிசுப்பைக் கேட்டார்:

''நாடி விழுந்துவிட்டது. கண்மணிகள் பிரதிச் செயல் அற்றுப் போயின...''

''அட்ரினலின்!'' என்று முழங்கினர் கார்தே லிஸ்.

''இருதயத்தைத் தேய்த்து விடுங்கள்!''

அறுவை மருத்துவரின் கை சில தடவைகள் தேய்த்து விட்டதும் ஒரேயடியாக நின்றுபோகத் தயாராயிருந்த இருதயம் லேசாக எம்பித் தணியலாயிற்று. கட்டாயமாக அன்றே அறுவை செய்வது என்ற முடிவுதான் சரியான ஒரே தீர்மானம் என்பதை அப்போது அவர் புரிந்து கொண்டார். மருத்துவர்கள் எல்லோரும் மேதின விழா கொண்டாடிக் கொண்டிருக்கையில் வார்டில் நோயாளிக்கு இரத்தப் பெருக்கு ஏற்பட்டிருக்குமானல் மிக மிக உடனடியான அறுவை கூடப் பயன் அளித்திருக்காது...

குஸ்னெத்ஸோவ் ஆளோடிக்கு வந்தார். திறந்த ஜன்னலை நெருங்கி ஆர்வத்துடன் சிகரெட் புகைக்கலானர். அவர் ஒரேயடியாகக் களைத்துப் போயிருந்தார். முதுகும் கைகளும் கால்களும் நன்ருக அடிபட்டவை போல ஓய்ந்து வந்தன. கன்னப் பொருத்துக்களில் விண் விண் என்று தெறித்தது.

கார்தேலிஸ் அருகே வந்தது அவர் காதில் படவில்லை.

''வா, நண்பரே, உன் வெற்றிக்காக மது அருந்துவோம். நீ இன்று நேர்மையாக உழைத்து நூறு கிராம் மது அருந்தும் தகுதி பெற்றுவிட்டாய்!''

குஸ்னெத்ஸோவ் கால் மரப்பைப் போக்குவதற்காக இடை வழியில் நடந்தார், அறுவைக் கூடத்துக்குள் எட்டிப் பார்த்தார், பின்பு தம்மை அறியாமலே ஸெர்கேயின் வார்டுக்குள் சென்ருர்.

ஸெர்கேயின் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தாள் தான்யா. கசங்கிய பூச் செண்டு இரத்தக் கறை பட்டுச் சிவந்திருந்தது. மற்றக் கட்டில்கள்

வெறுமையாய் இருந்தன. ''எல்லோரையும் இள வேனில் வெளியே இழுத்துப் போய்விட்டது. இவர்களுக்கோ அது இன்பம் தரவில்லை...'' வெறிச்சோடிய வார்டில், மயக்கமருந்திஞல் ஏற்பட்ட ஆழ்ந்த உறக்கத்தில் கிடந்த கணவன் பக்கம் குனிந்தவாறு துயரமே வடிவாக உட்கார்ந்திருந்த இளம் பெண்ணின் தோற்றமும், அவள் தன் இளமை வீரம் அனைத்தையும் துணைக்கு அழைத்து, இன்னும் பற்பல பகல்களும் இரவுகளும் இம்மாதிரியே உட்கார்ந்திருக்க நேரும் என்ற உணர்வும் மருத்துவரின் இருதயத்தை வலியெடுக்கும்படி நசுக்கின.

அவர் அருகே நாற்காலியில் அமர்ந்தார். ''அறுவையின் போது ஸெர்கேயுக்கு 'மருத்துவ நிலைய மரணம்' எனப்படும் உயிரோட்டமற்ற நிலை ஏற்பட்டது என்பதை இவளிடம் யாரேனும் சொன்ஞர்களோ, சொல்லவில்லையோ?''

தான்யா வந்தவரைக் கவனிக்காமலே உட்கார்ந்திருந்தாள். அடிக்கடி கையை நீட்டி, கணவனின் தலைமயிரை ஜாக்கிரதையாக வருடிஞள். அவளுடைய விழிகளோ, அவனையே நிலையாகப் பார்த்துக்கொண்டிருந்தன.

''கவலைப்பட்டாயோ?'' என்று தணிந்த குரலில் வினவிஞர் குஸ்னெத்ஸோவ்.

தான்யா தலையை நிமிர்த்து, அவரை நோக்கி, சத்தமின்றி அழுதாள்.

''சரியாய்ப் போச்சு! சொஸ்தப்படுத்துவதற்கு அவசியமாக வேண்டிய காரியத்தைச் செய்தாயிற்று, நீ என்னடா என்ருல் அழுகிருய்!''

''டாக்டர், இவன் பிழைப்பாஞ?''

''ஓரிரண்டு மணி நேரத்துக்கு முன் என்ருல் இதற்குப் பதில் சொல்வது எனக்குக் கடினமாய்

இருந்திருக்கும். இப்போதோ உறுதியாகச் சொல்லுகிறேன்: இவன் பிழைப்பான், கட்டாயம்! அங்கே அறுவை மேஜைமேல் இவன் உன்னைப் பற்றி விசாரித்தான். நீ இவனுக்கு மிகவும் வேண்டும், தான்யா!''

''எனக்கே இது புரியவில்லையா என்ன? இந்த அசடு என்னை விரட்டியடிக்காமல் இருந்தாலே போதும். தனது வாழ்வு தீர்ந்துவிட்டது என்றும் நான் மறுபடி புது வாழ்வு தொடங்க முடியும் என்றும் ஓர் அசட்டு எண்ணம் எப்படியோ இவன் மூளையில் புகுந்துவிட்டது. ஆனால் என்னால் முடியாது!... இவன் இல்லாமல் வாழ என்னால் முடியாது!... மகிழ்ச்சியை இருவரும் சமமாகப் பகிர்ந்து கொண்டோம். இப்போது மட்டும் என்ன?... இவன் என்மேல் இரக்கப் படுகிறான். எனக்கோ இது வேண்டவே வேண்டாம்...''

அறுவைக் கூடத்தின் உணர்வற்ற கதவருகே பொங்கிப் பொங்கி வந்த கண்ணீர் உளத் துயரை ஓரளவு குறைத்தது. ஆனால் வேதனை இன்னும் எஞ்சி இருந்தது. கணவன் படும் துன்பத்தைக் கண்டு, தன் ஏலாமையை நினைத்து வதைபட்டாள் தான்யா. அறுவை நடக்கையில், எல்லாம் நன்றாகவே நடைபெறுகிறது என்று மருத்துவத்தாதி சொன்ன சொற்கள் அவளுக்கு மகிழ்வூட்டின என்றாலும், இந்தக் கதவின் மறு புறம் நிலைமை அவ்வளவு சீராய் இல்லை என்பதை அவள் இதயத்தால் உணர்ந்தாள். ஸெர்கேய், பாவம், அங்கே வதைபடுகிறான், ஐயோ, எப்படி வதைபடுகிறான்! அவனுக்குத் தன்னால் எவ்விதத்திலும் உதவ முடியாது என்பதால் அவளும் வாதனைப் பட்டாள்.

குஸ்னெத்ஸோவ் எழுந்து வார்டில் குறுக்கும்

நெடுக்கும் நடந்தவாறு பேசலானூர்: ''உங்கள் இருவருக்கும் கஷ்டமாய்த் தான் இருக்கும். ஆனுல் நீங்கள் தாங்கிக்கொள்ள வேண்டும். அவன் முன்னே அழாதீர்கள், அவன்மேல் இரக்கப்படுவ தாகக் காட்டிக்கொள்ளாதீர்கள். இரக்கம் மனி தனைப் பலவீனப்படுத்துகிறது, அவனுடைய சித்த உறுதியைக் குலைக்கிறது. ஒன்றும் பயங்கரமாக நடந்துவிடவில்லை என்பதுபோல அவன் எதிரே காட்டிக்கொள்ளுங்கள். இது லேசல்ல என்பது எனக்குப் புரிகிறது, ஆனுல் இது இன்றியமை யாதது...அந்தமருத்துவமனையில் இவனுக்குநான்கு மணிக்கு ஒரு தரம் மோர்ஃபியா ஊசி மூலம் செலுத்தினுர்கள். இவனுடைய வாழ்க்கை முடிந்து விட்டது என்று எண்ணி, அதன் கடைசி நிமிடங் களைத் துன்பம் குறைந்தது ஆக்க முயன்றுர்கள். மோர்ஃபியா அடிமை என்றுல் என்ன, தெரி யுமா?''

தான்யா தெரியாது என்று தலையை அசைத் தாள்.

''மோர்ஃபியா மிகக் கடுமையான பாதிப்பு விளைக்கும் லாகிரிவஸ்து. உடல் வலியைப் பொறுக்கும் சக்தி நோயாளிக்கு இல்லாதபோது இது அவனுக்குத் தரப்படுகிறது. நோயாளியின் உடலில் மோர்ஃபியா செலுத்தப்பட்டதும் வலி தாற்காலிகமாக அடங்கிவிடுகிறது. ஆனுல் லாகிரி வஸ்துவுக்கு ஆட்கள் வெகு விரைவில் பழக்கமாகி விடுகிறுர்கள். மோர்ஃபியா ஊசிபோடுவதை உரிய நேரத்தில் நிறுத்தாவிட்டால் மிகக் கோர மான விளைவுகள் ஏற்படும். கைகளை இழந்துவிடு வது மிகப் பெரிய விபத்து. மோர்ஃபியா அடிமை ஆவதோ அவ்வளவே பெரிய விபத்து... இரண்டும் ஏககாலத்தில் ஏற்படுமானுல்...''—

குஸ்னெத்ஸோவ் கைகளை விரித்தார். ''ஸெர்கே யுக்கு இனியும் தொடர்ந்து மோர்ஃபியா ஊசி போட்டால் அவன் அதற்கு அடிமை ஆகிவிடு வான், அந்த எல்லையை அவன் அடைந்துவிட் டான். இன்னும் மூன்று நாட்கள் கழிந்ததும் இவ னுக்கு மோர்ஃபியா ஊசி போடுவதை நான் கண் டிப்பாகத் தடை செய்துவிடுவேன். ஸெர்கேயுக்கு அப்போது கஷ்டமாய் இருக்கும். அவன் கெஞ் சுவான், முரண்டு அடிப்பான்... ஆனால் இதைச் சகித்துக்கொள்ள வேண்டும். நீயும் அவனும்... அவனுடைய உடல் நலத்தைக் கருதி... நேரம் கடந்து விடுவதற்கு முன்பே...''

கைகளை முதுகுப் புறம் வைத்தவாறு அகல அடிகள் வைத்து வார்டில் நடை போட்டார் குஸ் னெத்ஸோவ். கதவிலிருந்து ஜன்னல்வரை ஆறு அடிகள், திரும்பிக் கதவு வரை ஆறு அடிகள். அவர் கதவருகே செல்லும்போதெல்லாம் தான்யா அவருடைய கையை மிரட்சியுடன் நோக்குவாள்: இதோ அது கதவுப் பிடியின் பக்கம் நீளும், கதவு கிரீச்சிடும், மருத்துவர் போய்விடுவார். திடீரென்று ஸெர்கேயின் நிலைமை மோசமானால் அருகே யாரும் இருக்க மாட்டார்கள். துள்ளி எழுந்து, ''டாக்டர், போய்விடாதீர்கள்!'' என்று கத்த வேண்டும் போல் இருக்கும் தான்யாவுக்கு. ஆனால் ஒவ்வொரு தடவையும் குஸ்னெத்ஸோவ் பாங் கின்றி மெதுவாகத் திரும்பி ஜன்னலை நோக்கி நடப்பார்.

குஸ்னெத்ஸோவ் போகவில்லை. கடந்த சில மணி நேர நிகழ்ச்சிகளை அவர் மறுபடி மறுபடி நினைத்துப் பார்த்தார். அதுவரை அவருக்குத் தெரி யாதிருந்த வேறு கோணத்திலிருந்து அவர் வாழ்க் கைமீது பார்வை செலுத்துவது போலிருந்தது.

இந்தப் பார்வை மனிதர்களைப் பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் மனித உணர்ச்சிகளைப் பற்றியும், முடிவில், தம்மையே பற்றியும் புதிய எண்ணங்களை அவர் மனத்தில் தோற்றுவித்தது. அவர் முன்பு ஒரு போதும் சிந்தனை செய்யாத விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கவும் அது தூண்டியது.

மருத்துவப் பணியில் இதற்கு முன்பும் கஷ்டமான அறுவைகளும் அறுவைக்குப் பிந்திய கலவரம் நிறைந்த நாட்களும் எதிர்ப்பட்டது உண்டு தான். ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களில் அவர் நோயை எதிர்த்துப் போராடினார், தம் நோயாளிகளின் வருங்காலத்தைத் தெளிவாகக் கண்டார். மருத்துவரின் திறமையும் அனுபவமும் எல்லாம் உதவாமல் போகும்படி செய்யும் இந்த ஊழ் விதித் தன்மை அந்தச் சந்தர்ப்பங்களில் இருக்கவில்லை. காயங்களை ஆற்றவும் உள அமைதியை ஏற்படுத்தவும் அவரால் முடியும், ஆனால் கைகள்... கைகளை அவரால் திரும்பி வரச் செய்ய முடியவில்லை.

## அறுவை மருத்துவர் குஸ்னெத்ஸோவின் நாட்குறிப்பிலிருந்து

மே, 13. இளவேனில் வந்துவிட்டது! நகரம் தான் எப்படி எழில் பெற்றுத் திகழ்கிறது! ''ஆனால் ஆண்டுகள் செல்கின்றன, நமது ஆண்டுகள், பறவைகள் போல...'' எங்கள் மருத்துவமனையில் இன்று பார்வையாளர் தினம். ஒரு பெண் ஸெர்கேய் பெத்ரோவின் சிறு அலமாரி மேல் மலர்ச் செண்டை வைத்தாள். அவன் உறங்கிக் கொண்டிருந்தான். விழித்ததும் வந்தது யார் என்று கேட்டான். அதற்குப் பதில் சொல்கையில்

சற்றும் அறிமுகம் அற்றவர்கள் கூட நமது இன்பத்தை விழைகிருர்கள் என்று தான்யா அழுத்திக் கூறிஞள். ஸெர்கேயுக்குக் கோபம் வந்துவிட்டது. அப்புறம் அன்று முழுவதும் அவன் பேசவில்லே. எதஞல் இப்படி? அவனுக்கு அழுகை வருகிறது, வெறும் சித்த உறுதியாலேயே அவன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிருன் என்று எனக்குத் தோன்றுகிறது. இரவுத் தறுவாயில் அவன் உடல் வெப்பம் அதிகரிக்கிறது. இரத்தச் செவ்வணுக்கள் மீண்டும் அவன் உடலில் குறைவாகவே இருக்கின்றன. ஒஹ்-ஹோ-ஹோ, இரத்தச் செவ்வணுக்கள், இரத்தச் செவ்வணுக்கள்... மூன்ருவது இரத்தப் பகுப்பாய்வு, ஒரு சதவிகிதமாவது அதிகமாகாதா...

மே, 14. ஜனங்கள் அங்கவீனன்மேல் கொஞ்சம் இரக்கம் காட்டத் தொடங்கியிருக்கிருர்கள் என்று ஸெர்கேய் மனைவியிடம் சொன்ஞன் (இது அதே பூச்செண்டு விஷயமாகத் தான்). அங்கவீனன் என்ற சொல்லே உச்சரிப்பது அவனுக்குக் கடினமாக, பயங்கரமாகக் கூட இருந்திருக்கும். அங்கவீனன்... திடகாத்திரஞய் இருந்த இளைஞன், இப்போது இந்த நிலேக்கு வந்து விட்டான். இரவு தூங்கவில்லே, மோர்ஃபியா தரும்படி கேட்டான். உனக்குக் கஷ்டந்தான், ஸெர்கேய், ஆஞல் மயக்க மருந்துகளே உனக்குத் தரச்சொல்ல என்ஞல் முடியாது.

அவனுடைய வலது கால் பற்றி அஞ்சுகிறேன். எலும்பு பாதிக்கப்பட்டிருந்தால்... இன்ஞேர் எக்ஸ்-ரே படம் எடுக்கச் சொல்லி நன்ருக ஆராய்ந்து பார்க்க வேண்டும். மருத்துவ ஆலோசனைக் குழு கூட்ட வேண்டும்.

தான்யா நிற்க முடியாமல் தள்ளாடுகிருள். ஆஞல் ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி எவ்வளவு தான் சொன்ஞலும் மாட்டேன் என்கிருள். கணவனை விட்டு ஓரடி கூட விலகுவதில்லே அவள்.

விந்தை என்னவென்ருல், ஸெர்கேய் மருத்துவ மனைக்கு வந்தது முதல் நோயாளிகள் எதஞலோ

பொறுமைசாலிகள் ஆகிவிட்டார்கள். மனைவிகளும் கணவன்மாரை அடிக்கடி வந்து காணத் தொடங்கி இருக்கிறார்கள். ஆனால் இது விந்தை தானா?

மே, 15. வெகு காலத்துக்கு முன்பு, கல்லூரியில் படிக்கும் போதே எனக்கு ஒரு ஆசை (அது பற்றி ஒரு தடவை கனவு கூடக் கண்டேன்)—கடினமான அறுவைக்குப் பிறகு நோயாளி அறுவை மேஜையில் இருந்தே உள்ளம் உருக்கும் குரலில் சொல்கிறான்:

''டாக்டர்! நான் உங்களுக்கு என்றென்றும் நன்றி பாராட்டுவேன்! நீங்கள் என் உயிரைக் காப்பாற்றிவிட்டீர்கள்!''

விழைவுகள், ஆசைக் கனவுகள்... எதார்த்த வாழ்க்கையில் இவை எல்லாம் எவ்வளவு அதிகச் சிக்கலானவை! யெரியோமின் என்பவன் நோய் தீர்ந்து வீடு திரும்ப அனுமதிக்கப்பட்டான். அவன் என்னிடம் வந்து சொன்னான்:

''நன்றி, டாக்டர்! நீங்கள் அருமையான மனிதர்கள்தாம், ஆனால் உங்களிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் இருப்பதே மேல்.''

மே, 17. நடைவழியில் தான்யா எனக்கு எதிர்ப் பட்டாள். ''உள்ளதைச் சொல்லுங்கள், ஸெர்கேயின் கால் எப்படி இருக்கிறது? நான் அவனை அதற்குத் தயாராக்க வேண்டும்'' என்றாள். நான் அவளைத் தேற்றினேன், ஆனால் எனக்கே வெட்கமாய் இருந்தது. அதாவது புளுகினேன்...

காலையும் வெட்டி அகற்ற வேண்டியது தானா?

6

இவான் யெகோரவிச் லாரின் ஒருவனிடம் நட்பு உறவு கொள்வதற்கு முன் எச்சரிக்கையாக, முன்னும் பின்னும் தீர்க்கமாகப் பார்வையிட்டு, அப்புறமே முடிவுக்கு வரும் வகையான ஆட்களைச்

சேர்ந்தவர். ஒரு மனிதன் முதல் பார்வைக்குத் தோற்றம் அளிப்பது போல உண்மையில் இல்லா விட்டாலோ?—இவ்வாறு அவர் அஞ்சுவது போல் இருக்கும். புதிதாக ஒருவன் அறிமுகம் ஆனதும் யெகோரவிச் நீண்ட, நிதானமான உரையாடல் தொடங்குவார், தம்மைப்பற்றிச் சொல்லுவார், ஆனால் அதிகமாக விசாரிப்பார். ஆழ்ந்த முக்கியத்துவம் தொனிக்கும் தோரணையில் கேள்விகள் கேட்பார். ''நான் உன்னிடம் வேடிக்கை பேசவில்லை. வெறும் ஆவலால் தூண்டப்பட்டுக் கேட்கவில்லை. நீ யார், எப்படிப்பட்டவன், வாழ்க்கையில் என்ன செய்யத் திறன் உள்ளவன் என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்'' என்று தமது தோற்றப் பாங்கு முழுவதாலும் காட்டிக்கொள்வார். ஆனால் ஒன்று: இந்தக் கேள்விகளும் முக்கியமாக இவற்றுக்குக் கிடைக்கும் பதில்களும் முடிவாக நண்பனைத் தெரிந்தெடுப்பதில் மிகக் குறைவாகவே பாதிப்பு ஏற்படுத்தின.

இப்படியும் நேர்வதுண்டு: ஒருவன் பார்ப்பதற்குக் கெட்டவன் அல்ல என்றே தோன்றும், அவனுடைய வாழ்க்கையும் யெகோரவிச்சுக்குப் பிடித்திருக்கும். ஆனாலும் அவர் உள்ளத்தில் அந்த மனிதன்மேல் நேசம் சுரக்காது. இந்த ஆள் நட்புக்கு ஏற்றவன் அல்ல என்று ஏதோ உள்ளுணர்வு சொல்லும். அப்புறம் யெகோரவிச்சால் ஒன்றுமே செய்ய முடியாது. அவருடைய மூளை ஒன்று சொல்லும், இதயமோ வேறொன்று கூறும். சில வேளைகளில் தம்முடனேயே போராட அவர் முயல்வார். இதயம் ஓரளவு மென்மை அடைந்தது போல் இருக்கும். ஆனால் இரண்டொரு நாட்கள் சென்றதுமே எதிர் உணர்ச்சி மறுபடி தோன்றி விடும்.

யெகோரவிச் ஒருவன்மீது நல்லெண்ணம் கொண்டுவிட்டாலோ, அவரைவிடச் சிறந்த நண்பர் அந்த மனிதனுக்குக் கிடைக்கவே மாட்டார். நண்பனின் சகோதரனாகவும் தகப்பனாகவும், நண்பனின் அழைப்பைக் கேட்டதுமே அவனுக்காக நெருப்பிலும் நீரிலும் குதிக்க ஆயத்தமாய் இருக்கும் மனிதராகவும் அதே சமயம் நண்பனின் செயல்களை மிகக் கண்டிப்பாகவும் நியாயமாகவும் மதிப்பிடும் நடுவராகவும் விளங்குவார் யெகோரவிச்.

யெகோரவிச்சின் முகம் ஒரு தடவை பார்த்தவர்கள் நீண்டகாலம் நினைவு வைத்துக்கொள்ளக் கூடிய வகையைச் சேர்ந்தது. குறிப்பிடத்தக்கவையாக விளங்கின அவருடைய புருவங்கள். கன்னப் பொருத்துக்களின் அருகே தொடங்கி, அடர்த்தியற்ற பொன்முடிகளாக விழிகளுக்கு மேலே சென்று மூக்கந்தண்டின் பக்கத்தில் அடர்த்தியான நரை மயிர்க் குச்சங்களாகச் செறிந்திருந்தன அவை. குச்சங்கள் எல்லாப் புறங்களிலும் துருத்திக்கொண்டிருந்தன. பந்தாக உருண்ட இரண்டு முள்ளெலிகள் போன்று அவை தோற்றம் அளித்தன.• யெகோரவிச் முகம் சுளிக்கையில் முள்ளெலிகள் முட்களைச் சிலுப்பிக் கொண்டு ஒன்றை ஒன்று குத்த முற்படும்.

புருவங்கள் முக அமைப்பு முழுவதன் மீதும் முள் நிழல் பரப்பின. மூக்கும் உதடுகளும் கண்களின் வடிவமும் நல்லியல்பையும் மென்மையையும் இணக்க சுபாவத்தையும் தோற்றுவித்தன. ஆயினும் புருவங்கள் இதற்குப் பொருந்தவில்லை. அவை யெகோரவிச்சினுடையவை அல்ல போன்றும், கடுகடுப்பும் தீய சுபாவமும் உள்ள வேற்றாள் ஒருவனிடமிருந்து எடுத்துக்கொள்ளப் பட்டவை

போன்றும் தோன்றின. அவற்றைப் படிமானத்துக்குக் கொண்டுவருவதற்கும் பழக்குவதற்கும் அவர் எவ்வளவோ பாடுபட்டார், ஆனல் பயனில்லை. நரை மயிர்க் குச்சங்கள் முட்களாகத் துருத்தி நின்றன. ஆனுலும் யெகோரவிச்சின் முகத்தில் அவை தீயவையாக இல்லை. அவர் புன்னகை செய்ய வேண்டியதுதான் தாமதம், முள்ளெலிகள் சமாதானமாகத் தங்கள் முட்களை மறைத்துக் கொண்டு பின்னே நகர்ந்து விடும். ''யெகோரவிச், நீங்கள் கொடியவரே அல்ல'' என்று சொல்ல அப்போது விருப்பம் உண்டாகும்.

இந்த மாதிரி மனிதருடன் மருத்துவ மனையில் சேர்ந்து வசிக்க ஸெர்கேயுக்கும் தான்யாவுக்கும் வாய்த்தது. தான்யா வெகு விரைவில் யெகோரவிச்சுக்குப் பழகிவிட்டாள். ''எப்படி, ஏது'' என்று தூண்டித் துளைத்து நச்சரிக்காமல் இருந்ததற்காக அவள் அவருக்கு உளமார நன்றி செலுத்தினுள். மற்றவர்கள் போல அவர் அவளுடைய ஆன்மாவைக் கடைத்தேற்றும் உரையாடல்கள் செய்வதில்லை, தேறுதல் வார்த்தைகள் சொல்லுவதே இல்லை. வெறுமே புன்னகை புரியவும் தலையசைப்பால் ஆமோதிப்பைத் தெரிவிக்கவும் யெகோரவிச்சால் முடிந்தது. பல்வகை மனிதர்களிடம் தெவிட்டிப்போகும் அளவிற்குக் கேட்க நேர்ந்த நீண்ட பரிவுரைகளைக் காட்டிலும் தான்யாவுக்கு இது உவப்பாய் இருந்தது. யெகோரவிச் இல்லாவிட்டால் தன் துயரத்தைச் சகித்துக்கொள்வது தான்யாவுக்கு இன்னும் எவ்வளவோ கடினமாய் இருந்திருக்கும்.

மே மாதக் கடைசியில், உடல்நிலை சற்று சீரானதும் ஸெர்கேய் மருந்துகளும் கட்டுக்களும் உணவும் வேண்டாம் என்று திடீரென மறுத்து

விட்டான். மறுபடியும் தான்யா ஆலைபாய்ந்தாள். அவள் கெஞ்சினுள், மன்ருடினுள், ஆனல் ஸெர்கேய் அவளுடைய வேண்டுகோள்களைக் காதிலேயே போட்டுக்கொள்ளமாட்டேன் என்றுவிட்டான். அவனுடைய நிலைமை அவளுக்குப் புரிந்தது. இவ்வளவெல்லாம் அனுபவித்தபின் ஒருவன் ஏங்குவதும் நம்பிக்கை இழப்பதும் சகஜம்தானே! அவன் மட்டும இரும்பால் ஆனவன் அல்லவே. ஆயினும் திடீரென்று அவன் உள்ளத்தில் எழுந்துவிட்ட ஏக்கத்தைப் போராடி அகற்றியே தீர்வது என்று அவள் உறுதி பூண்டாள். அந்த நிலையில்தான் அவள் யெகோரவிச்சிடம் முறையிட்டாள்:

''யெகோரவிச், அருமை நண்பரே, என்ன தான் செய்வது?''

''நானே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன், மகளே'' என்று எண்ணத்தில் ஆழ்ந்தவராகப் புருவங்களை நெரித்தார் கிழவர்.

## அறுவை மருத்துவர் குஸ்னெத்ஸோவின் நாட்குறிப்பிலிருந்து

மே, 25. ஆரம்பித்து விட்டது... எப்போதுமே இப்படித்தான்: உடல் வலி கொஞ்சம் மட்டுப்பட்டதுமே மனிதன் உள்ளத்தைக் குடையத் தொடங்கிவிடுகிருன். ஒருவேளை கால் வெட்டி அகற்றப்படும் என்று ஸெர்கேய் அஞ்சுகிருனே?

மே, 26. கார்தேலிஸ் சரியான யோசனை சொன்ஞன்—ஸெர்கேயின் சுரங்கத் தொழிலாளி நண்பர்களிடம் போய், அவன் பிரிவைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் ஒரு மொத்தமாக வந்து அவனுடன் பேசி உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்ளும்படி...

நான் ஸெர்கேயின் சிகிச்சை மருத்துவன் என்று

தெரிந்ததும் முறை வேலைத் தொழிலாளர்கள் அத்தனை பேரும் ஒன்று திரண்டு என்னிடம் ஓடி வந்தார்கள். ஞாயிற்றுக் கிழமை சுரங்கத் தலைமை அதிகாரியையும் அழைத்துக்கொண்டு வருவதாக வாக்களித்தார்கள். ஒரு கிழவன் சொல்லிச் சொல்லி வருத்தப்பட்டான்: ''எங்கள் ஸெர்கே யாவது, மனம் கசந்து போகவாவது? இப்படி நேரும்படி எப்படித்தான் விட்டீர்கள்?'' ஆனால் பெரியவரே, இந்த வாழ்க்கை மாற்றாந்தாயாக மாறிவிடும்போது மனிதனை ஈவிரக்கம் இல்லாமல் வதைக்கும் ஐயா. அதன் அடிகளால் ஒரேயடி யாகச் சோர்ந்து விழுந்துவிடாமல் நம்மைக் காப் பாற்றிக் கொள்ள வேண்டும். அதில் தான் இருக் கிறது சூக்குமம். இந்த மாதிரித் துன்பம் நேர்ந்த பின் இப்படிச் செய்வது மிகவும் கடினம். எனக்கு ஸெர்கேய் மேல் நம்பிக்கை உண்டு! எதனாலோ, அறியேன், ஆனால் அவனை நம்புகிறேன்! இந்த மனச் சடைவெல்லாம் போய்விடும்!

மே, 27. தான்யா ஸெர்கேயின் கட்டில் அருகே விழுந்து மூர்ச்சையானாள். நரம்புத் தளர்ச்சி... அவள்மேலாவது நீ இரக்கப்பட வேண்டும், ஸெர் கேய். தான்யாவை நாங்கள் கட்டிலில் கிடத் தினோம். அவள் ஒரு பத்து நிமிடங்கள் படுத்திருந் தாள். பிறகு மறுபடி கணவனிடம் போய்விட்டாள்.

''தான்யா, கொஞ்சம் இளைப்பாறு'' என்றேன்.

''இளைப்பாறுவது எப்படியாம்? அவன் இறந்து போய்விடலாமே'' என்று பதிலளித்தாள்.

அந்தச் சொற்களில்தான் என்ன வேதனை!.. அவள் உள்ளமும் உயிரும் கதறுகின்றன, அவளோ அதை வெளியே காட்டிக் கொள்வதில்லை, புன்ன கை செய்கிறாள். பெருந் துயரம் பெரும் வீரத்தை விளைவிக்கிறது என்பது உண்மையே. ஒவ்வொரு வரும் இம்மாதிரி வீரர் ஆக முடியாது. அதிலும் இவளுக்கோ வயது இருபதே தான்...

மே, 30. சுரங்கத் தொழிலாளர்கள் சொல்லைக் காப்பாற்றிவிட்டார்கள்! ஒரு இருபது பெயர்

வந்தார்கள். மருத்துவமனை ஒழுங்கு முறைகளை மீறவேண்டியதாயிற்று—எல்லோரையும் காப்பு மேலங்கிகள் இல்லாமலே ஒரு மொத்தமாக வார்டுக்குள் போக அனுமதித்தேன். இந்தத் தான்தோன்றிச் செயலுக்காகத் தலைமை மருத்துவர் நாளை என்னை விளாசப் போகிறார்! ஸெர்கேய் குதூகலம் அடைந்தான். பார்வையாளர்களை ஒருவர், இருவராக அனுமதித்திருந்தால் எல்லாருக்குமே அலுப்பு தட்டியிருக்கும், இத்தகைய விளைவும் ஏற்பட்டிராது. எல்லாரையும் ஒருசேரக் கண்டதும் ஸெர்கேயுக்குத் தன்னவர்கள் நடுவில் இருக்கும் உணர்வு ஏற்பட்டது. அவர்கள் பேச்சைக் கேட்கையில் ஒரு மணி நேரத்துக்காவது அவன் தன்னை மறந்திருந்தான். சுரங்கத் தொழில் பற்றி எனக்குத் தெரிந்ததெல்லாம் சொற்பமே. ஸெர்கேயின் கூட்டாளிகளோ சுரங்கத் தொழிலுக்குரிய கலைச் சொற்களை வாரி வீசியவாறு ஏதேதோ பேசினார்கள், மனம் விட்டுச் சிரித்தார்கள். ''நிர்வாக அலுவலகம் ஆதியோடந்தமாக எல்லா வேலைகளையும் ஒழுங்கு படுத்திக் கொண்டிருக்கிறது'' என்று அவர்கள் சொன்னதைக் கேட்டு ஸெர்கேய் பெரு மகிழ்ச்சி அடைந்தான்.

பதினோராவது வார்டில் இவ்வளவு கூச்சலும் குதூகலமுமாக முன் எப்போதாவது இருந்தது உண்டா என்று எனக்கு நினைவில்லை.

ஆனால் வார்டிலிருந்து வெளிவந்ததுமே தொழிலாளர்கள் மௌனத்தில் ஆழ்ந்தார்கள். சொல்லி வைத்தாற்போல எல்லோரும் பைகளுக்குள் கைகளை விட்டுச் சிகரெட்டுகளை எடுத்தார்கள்.

## 7

மாலையில் மருத்துவர் பார்வையிட்டுவிட்டுப் போனதும் ஸெர்கேய் முதியவரிடம் கேட்டான்:

''சொல்லுங்கள், யெகோரவிச், மனிதனுக்கு விதி என்பது இருக்கிறதா?''

யெகோரவிச் அவனை உற்றுப் பார்த்தார்.

''உனக்கு இதை எப்படிச் சொல்வது?.. நான் பாதிரியோ தத்துவவாதியோ அல்ல. ஆனாலும் என் அறிவுக்குப் படுகிறபடி, ஒவ்வொரு மனிதனுக்கும் விதி இருந்தாக வேண்டும். அவனுக்கே சொந்தமானது. தனியானது. புரிகிறதா? மனிதனுடைய சித்தத்துக்கோ விழைவுகளுக்கோ கட்டுப் படாமல், அவற்றின் சார்பு இன்றி நிலவும் பொருள்கள் உள்ளன. ஆனால் இறுதிப் பகுப்பாய் வில் விதியைத் தம் இஷ்டப்படி மாற்றவோ, மக்கள் அடிக்கடி சொல்வதுபோல தான்தோன்றித் தனமாக அதைப் பந்தாடவோ அவற்றால்எப் படியும் முடியாது. அதாவது, மனிதன் தானே போராட மறுக்காவிட்டால்.''

''அட நான் கேட்டது இதைப் பற்றி அல்ல...'' என்று அதிருப்தியுடன் முகம் சுளித்தான் ஸெர் கேய்.

''இதைப் பற்றியோ, இதைப் பற்றி இல்லை யோ, ஸெர்கேய், ஆனால் விஷயத்தின் சாரம் என் னவோ இதில்தான் அடங்கியிருக்கிறது! மத மறை பொருள்வாதத்தைக் கணக்கில் எடுத்துக்கொள் ளாவிட்டால், 'மனிதன் தன் விதிக்குத் தானே பொறுப்பாளி' என்னும் சொற்களில் எல்லாம் கூறப்பட்டுவிட்டது. இது எளிது என்று ஒருவரும் சொல்லவில்லை. கடினந்தான்... அதுவும் மிகவும் கடினம். ஆனால் நாம் தொய்ந்துபோனோம், வாழ்க்கையில் நம்பிக்கை இழந்தோம் என்றால் இது இன்னும் கடினம் ஆகிவிடும்.''

ஸெர்கேய் பதில் சொல்லவில்லை. விதி பற்றிய பிரச்சினை அவனுக்கு வெறும் ஆவல் அல்லது பொழுதுபோக்குக்கு உரியது அல்ல, அதற்கு விடையை அவன் மிகுந்த வேதனையுடன் தேடினான் என்பதை யெகோரவிச் புரிந்துகொண்டார். ''விதி

நீலி மாற்ருந்தாய்'' என்ற பழைய, புராதனமான சொற்ருெடர், கஷ்ட தசையில் அகப்பட்டுக் கொள்ளும்போது மக்கள் பயன்படுத்தும் சொற் ருெடர் ஸெர்கேயுக்குப் பொருத்தமாய் இல்லே. அவன் தன் விதியைப் பழித்து முணுமுணுக்க வில்லே. அவன் துன்பப்பட்டான். தான் முன்பு செய்து வந்ததுபோல எல்லாக் காரியங்களேயும் செய்யும் திறனே இழந்துவிட்ட மனிதன் எப்படித் துன்பப்படக் கூடுமோ அப்படித் துன்பப்பட்டான் அவன். விதியைப் பற்றிக் கேட்டபோது ஸெர்கேய் தனது வருங்காலத்தின் மீது கொஞ்சம் மகிழ்ச்சி யுடன் பார்வை செலுத்த முயன்ருன்போலும். வாழ்விலிருந்து விலகிப் போய்விடாமல் மக்க ளுக்குத் தொண்டு ஆற்றுவதற்குத் தன்ஞல் வருங் காலத்தில் ஏதேனும் செய்ய முடியுமா என்று அறிய அவன் விரும்பிஞன் போலும். மனிதர்களேத் துன்பத்திலிருந்தும் அழிவிலிருந்தும் காத்து, அவர்களுக்குத் தொண்டாற்றியபோது அவன் அத்தகையவஞகத்தானே விளங்கிஞன்!

''நம்ப வேண்டும், மகனே'' என்று சொல்லி விட்டுப் பேசாதிருந்தார் யெகோரவிச்.

ஸெர்கேய் பேசுவான் என்று எதிர்பார்த்து, அவர் வேண்டுமென்றே பேசாதிருந்தார். ஸெர் கேய் பேசத் தொடங்கியிருப்பதே நல்ல அறிகுறி ஆயிற்றே! இத்தனே நாட்கள் வாயை மூடிக் கொண்டிருந்துவிட்டு இப்போது திடீரென்று பேச ஆரம்பித்திருக்கிருனே!

''இப்படிப் பிறத்தியார் கையை எதிர்பார்த்து எனக்குப் பழக்கமில்லே... ஒரு துண்டு ரொட் டியை வாயில் போட்டுக்கொள்வதற்குக்கூட... மற்றவர்களின் உதவி இல்லாமல் முடியாது...''

''நீ அவசரப்பட்டு உன்னேயே வதைத்துக்

கொள்ளாதே. ஜனங்கள் எல்லாவற்றையும் புரிந்து கொள்வார்கள். மனிதர்கள்... நல்லவர்கள்.''

''ஆமாம், நான்தான் நல்லவன் அல்ல...''

வார்டில் மௌனம் குடிகொண்டது. தொடங்கி விட்ட உரையாடலில் குறுக்கிட ஒருவருமே முன் வரவில்லை. வாழ்க்கையில் யாவற்றிலும் முக்கிய மான, இதற்கு முன் ஒருவரும் ஒருபோதும் அறிந் திராத விஷயம் பற்றிய உரையாடல் இது என்று எல்லோரும் எண்ணியதுபோல் இருந்தது.

யெகோராவிச் சொன்னார்: ''இந்தக் கிழவன்மேல் நீ கோபப்படாதே, ஸெர்கேய். நான் நிறையப் பட்டுத் தேறியவன், வாழ்க்கையில் எத்தனை எத்தனையோ கண்டுவிட்டவன்... அறிவார்ந்தவை, அசட்டுத்தனமானவை, படு முட்டாள்தனமானவை, எல்லா வித வாழ்வுகளையும் சாவுகளையும் பார்த்த வன். எத்தனை வகை மனிதர்களை நான் பார்க்க நேர்ந்திருக்கிறது தெரியுமோ? இப்போது சமீபத் தில்தான், அதாவது ஒரு மூன்று ஆண்டுகளுக்கு முன்னால்...''

யெகோரவிச் மெதுவாகத் தலையணைமேல் தலையை வைத்துக்கொண்டு, கம்மலாக மாறிய, தடிமல் பிடித்தது போன்ற குரலில் கதையைத் தொடர்ந்தார்:

''நாங்கள் மூன்று பேர் உச்சூர் என்னும் இடத் துக்குப் போனோம். அது யக்கூத்தியாவில் இருக் கிறது. ஜனவரி மாதம். கடுங்குளிர், அது நாச மாய்ப்போக! சரியான சைபீரியக் கூதல் என்பார் களே, அந்தக் குளிர். நாலு பக்கமும் தைகாக் காடு... மணவுடை அணிந்த கிறிஸ்தவக் கன்னி போல வெண்பனியாடை அணிந்து இலகிற்று காடு. ஒரு மரத்தைத் தொட வேண்டியதுதான், வெண்பனிக் குவியல் தலைமேல் கொட்டும். இரவு

வேளைகளில் ஓநாய்கள் ஊளையிடும். அதனால் உண்டாகும் ஏக்கத்தில் நமக்கே ஊளையிட வேண்டும் போல் இருக்கும். நாங்கள் குறித்த இடம் போய்ச் சேர்ந்தோம். எதைப் பார்க்கப் போனோமோ அதைக் காணவில்லை. தேடத் தீர்மானித்தோம். வெறுங்கையோடு திரும்ப எவன்தான் விரும்புவான்? இரண்டு நாட்கள் தைகாவில் சுற்றி அலைந்தோம். குடியிருப்பிலிருந்து ஒரு நூற்றைம்பது கிலோமீட்டர் தொலைவு வரை போய்விட்டோம். உணவுப் பண்டச் சேமிப்பு தீர்ந்துபோகும் நிலையில் இருந்தது. ஆலோசனை செய்து, திரும்புவது என்று முடிவு செய்தோம். அந்த வேளை பார்த்து, வேண்டுமென்றே போல வீசத் தொடங்கிற்று வெண்பனிப் புயல். இரவில் ஓநாய்கள் எங்கள் பனிமான்களை மிரட்டி விரட்டிவிட்டன. ஆக நாங்கள் எங்கள் கால்களையே நம்ப வேண்டியதாயிற்று. நடந்தோம். ஒரு நாள் நடந்தோம், இரண்டாவது நாளும் நடந்தோம், பனிப் புயல் மட்டும் ஓய்ந்த பாடில்லை. மூன்றும் நாள் பார்க்கிறேன், எங்களுக்கு வழி தவறிவிட்டது... அப்போதுதான் ஆரம்பித்தது கதை. எங்களோடு இருந்தான் ஓர் இளைஞன். பலசாலி, உடல்நலம் உள்ளவன்... அவன் மூளை தான் நேராய் இல்லை. அவன் மடையன் என்ற அர்த்தத்தில் நான் சொல்லவில்லை. சிரமம் இல்லாத வாழ்க்கையை விரும்பினான் அவன். உணவு விடுதியில் தின்றும் குடித்தும் களிப்பது, பெண்களின் மதியை மயக்குவது, குடி வெறியில் சண்டை போடுவது... இதிலெல்லாம் அவனை விடச் சாமர்த்தியசாலியும் வீரனும் தேடினாலும் கிடைக்க மாட்டான். சங்கடம் எதிர்ப்பட்டதுமோ, அவன் வீரமெல்லாம் எங்கேயோ ஓடி ஒளிந்துவிட்டது! 'நான் மேலே போக மாட்டேன்,

அவ்வளவுதான்! எப்படியும் சாகத்தான் வேண்டும். உடனே சாவது மேல் அல்லவா? என்னையே வதைத்துக்கொள்ள மாட்டேன். பெரிய வீரர்கள் என்ற நினைப்பு போலிருக்கிறது உங்களுக்கு! நனைந்த கோழிகள் போலச் செத்து மடிவீர்கள். உட்கார்ந்து ஆட்களை எதிர்பாருங்கள். அவர்கள் திடீரென்று நினைத்துக்கொண்டு தேடி வருவார்கள்' என்று கத்தினான். நாங்கள் எந்த வகையில் வீரர்கள்! அவனைப்போலவே எங்களுக்கும் பயமாய்த்தான் இருந்தது. நாங்கள் வெளியில் காட்டிக்கொள்ளவில்லை. தவிர, கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்த வண்ணம் மடிய நாங்கள் விரும்பவில்லை. சாகத்தான் வேண்டும் என்றால் போராடிச் சாவோம் என்று நினைத்தோம். நாங்கள் அவனுக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம், இடித்துரைத்தோம், தூக்கிக்கொண்டுபோக முயன்றோம்... இது முடிகிற வேலையா? அவன் எதிர்த்தான்... என்ன செய்வது? உணவுப் பண்டங்கள் தீர்ந்துபோகும் நிலையில் இருந்தன, இன்னும் எவ்வளவு தூரம் நடக்க வேண்டுமோ, ஆண்டவனுக்கே வெளிச்சம். உட்கார்ந்து அவன் சிணுங்குவதைக் கேட்டுக் கொண்டிருந்தோம். அவனோ அழுதான், வரிசையாக எல்லாவற்றையும் திட்டி நொறுக்கினான். தைகாக் காட்டையும், கடுங் குளிரையும் எங்கள் குழுவில் சேர்ந்த நாயையும், தன்னைப் பெற்றதற்காகச் சொந்தத் தாயையும் கூடத் திட்டினான். நாங்கள் ஒரு ஸ்லெட்ஜ் செய்து அவனைக் கட்டி அதில் போட்டு இழுத்துக்கொண்டு போனோம். அவன் எங்களை ஆபாசமாகத் திட்டிக் கூச்சலிட்டான், ஸ்லெட்ஜிலிருந்து சறுகி விழுந்தான்... அதாவது ஒரேயடியாக வெறி பிடித்து விட்டது அவனுக்கு, முழு அறிவுடன் இருந்த

போதே. நடப்பதைவிடச் சவாரி செய்வது மேல் தான், இருந்தாலும் மனச்சாட்சி என்று ஒன்று இருக்கிறதே, அதை என்ன செய்வது? எங்களைப் போலவே நல்ல ஆரோக்கியசாலி அவன், ஆனால்... இவனை இழுத்துக்கொண்டு நம்மவர்களிடம் போய்ச் சேர முடியாது, எல்லோருமே மடிந்து போவோம் என்று உணர்ந்தோம். ஆகவே அவனுடைய வேண்டுகோளை நிறைவேற்றத் தீர்மானித்தோம். அவனை அங்கேயே விட்டுவிட்டு நாங்கள் இருவரும் வழியைத் தேடுவது என்று முடிவு செய்தோம். ஒரு குடிசை கட்டி, உணவுப் பண்டங்களில் ஒரு பங்கை அவனுக்குக் கொடுத்துவிட்டு நடையைக் கட்டினோம். களைத்துப் போகாத ஆட்களை அனுப்புவதற்காக வழியில் குறிகள் போட்டோம். நான்கு நாட்கள் நடந்தோம். ஐந்தாவது நாள் வேட்டைக்காரர்கள் எங்களைக் கண்டுபிடித்தார்கள். நாங்கள் திராணியற்று, குளிரில் அனேகமாக விரைத்து, பசியால் நலிந்து போயிருந்தோம்... ஆட்கள் ஒரு நாளுக்குப் பிறகு எங்கள் தடத்தைப் பின்பற்றிச் சென்று அந்த ஆளையும் கண்டுபிடித்தார்கள். ஆனால் அதற்குள் நேரம் கடந்துவிட்டது. அவன் குளிரில் உறைந்துபோய்விட்டான்... தன் கோழைத்தனத்தினாலேயே மடிந்தான் அந்த ஆள். வழி நடப்பது கடினம் என்று பயந்தான். அதற்குக் கிடைத்த பலன் இதுதான்... நேற்று இருந்தவன் இன்று இல்லை. வருத்தமும் அதே சமயம் கோபமும் உண்டாகிறது! தன் உயிரைப் பற்றியே இப்படி அலட்சியமாய் இருப்பது எப்படித்தான் முடிகிறது! மடத்தனம்!''

யெகோரவிச் வெறிச்சோடிய விழிகளால் விட்டத்தை நெடுநேரம் நோக்கிக் கொண்டிருந்தார். பின்பு பெருமூச்செறிந்து மேலே சொன்னார்:

''ஒருவேளை அவனைத் தனியாக விட்டிருக்கக் கூடாதோ? ஆனால் இன்னொரு வகையில் பார்த்தால் அவன் முற்றிலும் திடகாத்திரமான இளைஞன். நாங்கள் இருவரும் என்ன செய்வது?.. நாங்களும் உட்கார்ந்து ஒப்பாரி வைப்பதா? எங்கள் முடிவை எதிர்பார்ப்பதா?''

''நீங்கள் செய்ததே சரி!'' என்று நோயாளிகளில் ஒருவன் கத்தினான்.

''அந்த ஆள் மணம் ஆனவனா?'' என்று கேட்டான் இன்னொருவன்.

''இல்லை, தனிக்கட்டை... நம் ஸெர்கேயின் வயதுதான் இருக்கும் அவனுக்கு.''

வார்டில் மறுபடி மௌனம் நிலவியது.

''யாரை யாருடன் ஒப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டான் ஸெர்கேய்.

''ஸெர்கேய், நான் யாரையும் யாருடனும் ஒப்பிடவில்லை. ஒரு பேச்சுக்குச் சொன்னேன், அவ்வளவுதான்.''

## அறுவை மருத்துவர் குஸ்னெத்ஸோவின் நாட்குறிப்பிலிருந்து

**ஜூன், 6.** ஸெர்கேய் பெத்ரோவை என்ன செய்வது? காலை வெட்டி அகற்றுவது நிலைமையிலிருந்து தப்ப மிக எளிய வழி. அது மிக நம்பகமானது, அதே சமயம் மிகவும் உதவாக்கரையான வழி.

**ஜூன், 8.** எதிலிருந்து தொடங்குவது? சிறுவன் போல ஓடவும் துள்ளவும் எனக்கு ஆசையாய் இருக்கிறது. கடைசி எக்ஸ்-ரே படத்தில் எலும்பு பழுதடையாமல் நன்றாய் இருப்பது தெளிவாகத் தெரிகிறது. நீ நடப்பாய், ஸெர்கேய்! நீ மட்டும் பொறுமை கடைப்பிடி. உடல் நலம் பெறுவதற்கு

நீண்ட வழி நடக்க வேண்டியிருப்பதை எண்ணிக் கலங்காதே. நீ உடல் நலம் பெறுவாய். கட்டாயம் உடல் நலம் பெறுவாய்.

## 8

ஒரு நாள் வார்டுக்குள் வந்ததும் குஸ்னெத்ஸோவ் கேட்டார்:

''ஸெர்கேய், உனக்கு வெளியே போய்வர ஆசையாக இல்லையா?''

பின்பு பதிலுக்குக் காத்திராமலே தான்யாவை அழைத்தார்.

ஒரு நிமிடத்துக்கெல்லாம் ஸெர்கேய் மருத்துவமனைத் தள்ளுவண்டியில் வெளியே இட்டுச் செல்லப்பட்டான்.

நோய்ப்பட்ட பின்பு முதன் முறையாக.

தன் வாழ்க்கையிலேயே முதல் தடவையாக எதுவும் ஏலாதவனாய், தள்ளுவண்டியில் கிடத்தப்பட்டு வெளியே இட்டுச் செல்லப்பட்டான் ஸெர்கேய், குழந்தைபோல.

கடைசிக் கதவு திறக்கப்பட்டதையும் தான் வெளியே வந்துவிட்டதையும் ஸெர்கேய் கவனிக்கவில்லை. பளிச்சென்ற வெளிச்சம் கண்களைக் குருடாக்கியது, குளுகுளுவென்று வீசிய தூய காற்று மூக்கில் தாக்கியது. ஸெர்கேயின் தலை சுற்றியது.

''வானம்! பார், தான்யா, வானம்! மேகங்கள் வேறு!'' என்று தன்னை மறந்து கத்திவிட்டான் அவன். இன்னும் ஏதோ கத்த வாய் எடுத்தவன் மனைவியைப் பார்த்து மௌனமாகி விட்டான்.

தான்யா புன்னகை செய்தாள். ஆனால் அவள் விரும்பாத கண்ணீர் அவள் முகத்தில் பொங்கி வழிந்தது.

''நிறுத்து!'' என்று சீறினார் குஸ்னெத்ஸோவ்.

''அது தானே வழிகிறது... சத்தியமாக, தானே வழிகிறது...'' என்று சமாதானம் கூறினாள் தான்யா.

ஸெர்கேயோ, எங்கே வேற்று கிரகத்துக்கு வந்து விட்டவன் போலவும் எல்லாவற்றையும் முதன் முதலாகப் பார்ப்பவன் போலவும் ஆகாயத்தையும் மரங்களையும் பெஞ்சியையும் அதில் உட்கார்ந்திருந்தவர்களையும் வியப்பு சுடர்விடும் விழிகளால் மாறி மாறி நோக்கினான். குழந்தைக்கு முன்னே போலவே அவனுக்கு முன்னே காட்சி அளித்தது பிரமாண்டமான உலகம். அதில் வாழ்க்கை குமிழியிட்டுப் பொங்கியது, விந்தை விந்தையான அதிசய வடிவங்கள் கொண்ட மேகங்களாக மிதந்தது, மரங்களின் பசிய இலைகளாகச் சலசலத்தது, பல்வேறு குரல்களில் கிணுகிணுத்தது, ரீங்காரம் செய்தது, சரசரத்தது, ஆரவாரித்தது. தனது இன்னொரு பக்கத்தை, இரத்தமும் ஏமாற்றமும் வேதனையும் சாவும் கொண்ட பக்கத்தை, இந்த வாழ்க்கை எதனாலும் நினைவுபடுத்தவில்லை.

ஸெர்கேய் கருவேல மரத்தின் இலையைக் கிள்ளுவதற்காக நிமிர்ந்தவன் அப்படியே கல்லாய்ச் சமைந்துபோனான்: ''எதனால் நான் கிள்ளுவேன் இலையை?''

நிமிட நேரத்துக்குமுன்அவனுக்குக் களிப்பூட்டிய வண்ணங்கள் அக்கணமே இருளடைந்து போயின. ஸெர்கேய் விழிகளைச் சுருக்காமல் சூரியனை உற்று நோக்கினான். அவன் கண்களில் வலியே தெரியவில்லை. பின்வரும் கேள்வி அவனை இடைவிடாது நச்சரித்தது: ''சூரியன் கறுப்பானது என்று எங்கே கேள்விப்பட்டேன்? நான் அதை நம்பவில்லை. வெறும் சொல் விளையாட்டு என்று

நினைத்தேன். சூரியன் முற்றிலும் கறுப்பானது அல்ல தான், அது இரத்தக் கறுப்பானது, கொடியது...''

''சிகரெட் கொடுங்கள்...'' என்று நெஞ்சைப் பிழிந்து எடுப்பவன்போலக் கேட்டான் ஸெர்கேய்.

குஸ்னெத்ஸோவ் பையிலிருந்து பாக்கெட்டை எடுத்து ஒரு சிகரெட்டை உருவி, ஸெர்கேயின் உதட்டருகே கொண்டு போனார்.

''நிறையப் புகைபிடிப்பது கெடுதல், ஆனால் எப்போதாவது பிடிக்கலாம்.''—குஸ்னெத்ஸோவ் நெருப்புக் குச்சியைக் கிழித்தார். ''யெகோரவிச்சும் நீங்களும் ஏதோ அதிசாமர்த்தியசாலிகளான சதியாலோசனையாளர்கள் என்று எண்ணிக் கொள்ள வேண்டாம்! நீங்கள் வார்டில் புகை பிடிப்பது எனக்குத் தெரியும்! மேற்கொண்டு கேலி வேறுசெய்கிறீர்கள்: ''நாம் எப்பேர்ப்பட்ட தந்திரசாலிகள், டாக்டரை இஷ்டம் போல ஆட்டி வைக்கிறோம்'' என்று.

ஸெர்கேய் ஒன்றும் பேசவில்லை. சிகரெட்டுப் புகையை ஆவலுடன் விழுங்கினான். அவன் தலை ஒரு சீராகக் கிறுகிறுத்தது, பொருள்களின் வடிவங்கள் கோணல்மாணலாயின—கூரிய முனைகள் கொண்ட, பேய்த்தனமான வடிவங்களாக மாறின.

தான்யா ஒரு பக்கம் விலகி, மருத்துவ மனை வேலிக்கு அருகே வளர்ந்த பல நிற மலர்ச் செடிகளை நெருங்கி, பூக்களைப் பறித்துச் செண்டு தயாரிக்கலானாள்.

மருத்துவர் வானத்தை நோக்கினார், பார்வையைத் தம் கைகளுக்குத் திருப்பினார், அப்புறம் முகத்தைச் சுளித்துப் பேசலானார்:

''ஒரு மூன்று நாளில் உன் காலில் அறுவை செய்

வோம்... துண்டுத் தோலை வேறு இடத்திலிருந்து எடுத்து ஒட்டவைப்போம்... ஒரு மாதத்தில் நீ வீட்டுக்குப் போகலாம்...''

ஸெர்கேய் மருத்துவரைப் பார்த்துவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

''எதற்காக? ஒரு கால் அதிகமாகவோ குறைவாகவோ இருந்தால் என்ன, எல்லாம் ஒன்றுதானே!'' — ஸெர்கேயின் குரல் நடுங்கியது. ''கால் இல்லாத மனிதன் செருப்பாவது தைக்க முடியும், கடிகாரங்களையாவது செப்பனிட முடியும், நானே?.. எனக்கே யாரேனும் கரண்டியால் ஊட்ட வேண்டும்.''

''ஸெர்கேய், உனக்கு அற்புதமான சிநேகிதி—உன் மனைவி—இருக்கிறாள். அவளோடு சேர்ந்து நீ கட்டாயம் வேலை தேடிக்கொள்வாய். ஒன்று தெரியுமா, நண்பனே. இன்பம் என்பது பிடியில் அகப்படாத ஆவி அல்ல. வாழ்க்கையில் அது நிறைய இருக்கிறது, உன் பங்குக்கும் போதும்படி. அதாவது நீ உன் வேதனையை அடக்கிக்கொள்ள முடியுமானால்.''

''மெரேஸ்யெவையும் கர்ச்சாகினையும் பற்றி எனக்குக் கதை சொல்லப் போகிறீர்கள்... இன்பமாம்... உழைப்பு இல்லாமல், அன்புக்கு உகந்த தொழில் இல்லாமல் இன்பம் எங்காவது கிட்ட முடியுமா? பேச்சை வளர்த்துப் பயன் என்ன?'' என்று ஆத்திரத்துடன் சீறி விழுந்தான் ஸெர்கேய். ''குழந்தையைப்போல என்னைச் சமாதானப்படுத்துகிறீர்கள்! இன்பத்தையும் போராட்டத்தையும் ஆண்மையையும் பற்றி ஆடம்பரமான வார்த்தைகள் எத்தனையோ எனக்கே தெரியும். யெகோரவிச் விதியைப் பற்றி எனக்கு விவரித்தார், அறிவுக்கூர்மையுடன், தந்திரமாக... என் விதியில்

எனக்கு அக்கறையே இல்லை. அது எரிந்துபொசுங்கிப் போய்விட்டது. ஆனால் இதோ இவள்'' — ஸெர்கேய் மனைவியின் பக்கம் தலையசைப்பால் ஜாடை காட்டினான். ''அவள் எதற்காக என்னோடு சேர்ந்து வேதனைப்பட வேண்டும்? மற்றொரு மனிதருடைய வாழ்க்கையைப் பாழாக்கும் உரிமையை எனக்குத் தந்தது யார்?''

''கத்தாதே, சைத்தானே! காதலிக்கும் உரிமையை ஒரு மனிதரிடமிருந்து பறிக்க உன்னை அனுமதித்தது யார்? நீ உன்னைப்பற்றி மட்டுமே நினைக்கிறாய். உன் பக்கத்தில் வசிப்பது எப்பேர்ப்பட்ட ஆள் என்பதை நீ புரிந்து கொள்ள வேளை வந்துவிட்டது!''

''சாமர்த்தியமாக எல்லாவற்றையும் தலைகீழாகத் திருப்பி விட்டீகள். புத்தகம் போலப் பேசுகிறீர்கள்'' என்று தணிவாக மொழிந்தான் ஸெர்கேய். ''என் பாடு மிகக் கடினம். நான் மின்னோட்டம் தாக்கியதுமே ஏன் செத்துத் தொலையவில்லை... எல்லோருக்கும் லேசாக இருந்திருக்குமே என்ற நினைப்பை மறக்க என்னால் முடியவே முடியாது...''

''அதற்கென்ன, மனைவியிடம் இதை எல்லாம் சொல்லு. அவள் உன்னோடு இவ்வளவு துன்பப் பட்ட பிறகு சொல்லு அவளிடம் இதை. அவள் மகிழ்ந்து போவாள். அம்மா, தான்யா, இங்கே வா. ஸெர்கேய் உன்னிடம் என்னவோ சொல்ல விரும்புகிறான்.''

தான்யா பக்கத்தில் வந்தாள். நம்பிக்கை இல்லாமல் இருவரையும் நோக்கினாள்.

''நீ என்ன, ஸெர்கேய்?'' என்று வினவினாள்.

''அட ஒன்றுமில்லை என்கிறேன். நாங்கள் ஆண்களுக்கு உரிய வகையில் பேசிக்கொண்டோம்...''

# 9

விண் மீன் கற்கள் ஏராளமாக விழும் ஜூலை மாத இரவுகள் குறுகியவை. சூரியன் பூமியின் ஒரு கோடிக்கு அப்பால் மறைந்ததும் மறையாததுமாக அதன் மறு கோடியில் முதல் கதிர்கள் குறைந்துவரும் இருள் திரையைக் கிழித்துவிடுகின்றன. ஆனாலும், இந்த இரவுகள் எவ்வளவு தாம் குறுகியவையாக இருந்த போதிலும் யெகோரவிச்சும் ஸெர்கேயும் எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள், கனவு கண்டார்கள், மானசீகமாகப் பல்வேறு இடங்களுக்குப் போய் வந்தார்கள். சில சமயம் யெகோரவிச் ஸெர்கேயுடன் சுரங்கத்துக்குள் இறங்கி குடைவழிகளிலும் வெட்டு முகப்புக்களிலும் சுற்றி வந்தார், அவனுடைய நண்பர்களைச் சந்தித்தார். மறு சமயம் ஸெர்கேய் யெகோரவிச்சுடன் சைபீரியக் காட்டிற்குள் நெடுந்தூரம் போனான், விலைமிக்க கனியங்களைத் தேடினான், வளம் மிக்க கனியப் படிவுகளைக் கண்டுபிடித்து மக்களுக்கு வழங்கினான்.

ஸெர்கேயின் அறுவைக்கு முந்திய கடைசி இரவிலும் இவ்வாறே நிகழ்ந்தது. யெகோரவிச் ஸெர்கேயை உறங்கும்படி அனேக முறை கேட்டுக்கொண்டார், தாமும் பேசாதிருந்தார். இருவரும் நிமிட நேரம் மௌனமாய் இருந்தார்கள். அப்புறம் இருவரும் கவனிக்காத விதத்தில் உரையாடல் மறுபடி தொடங்கிவிட்டது. பொழுது புலர்வதற்கு முன் யெகோரவிச் திடீரென்று கேட்டார்:

''ஸெர்கேய், நீ என்ன படித்திருக்கிறாய்?''

''உயர்நிலைப் பள்ளியிலும் சுரங்கத் தொழில் பள்ளியிலும் படிப்பை முடித்தேன்...''

''உனக்கு இலக்கியத் திறமை இருப்பதாகத் தோன்றியது உண்டா? செய்யுள்கள், சிறு கதை கள் என்று ஏதாவது எழுதியிருக்கிருயா?''

''கிடையாது... எங்கள் குடும்பத்திலேயே இதெல்லாம் இருந்ததில்லை. எதற்காக என்னை இதைப் பற்றிக் கேட்கிறீர்கள்?''

''இலக்கியம் உனக்கு நல்ல துறையாய் இருக் குமே என்றுதான்...''

''எழுதுவது தொழில் துறை அல்லவே. அதற்கு இயல்பான திறமை வேண்டுமே. தவிர, எதனல் எழுதுவது?''

''ஊம்-ம்-ம்... ஒருவேளை இந்தத் திறமை உன் னிடம் இருக்கலாமோ?''

''பள்ளிக்கூடத்தில் ஒரு தரம் கவிதை எழுதி அதற்காகச் சங்கடத்தில் மாட்டிக்கொண்டேன்...''

தான் சொல்ல வந்ததை முடிக்க ஸெர்கேயுக்கு வாய்க்கவில்லை. முறைவேலை மருத்துவத் தாதி வார்டுக்குள் வந்தவள், வாயிலிலிருந்தே ஐயோ என்ருள்.

''ஸெர்கேய், நீ இராத்திரி முழுவதும் தூங்க வில்லை! பார்க்கிறேன்! இன்று உனக்கு அறுவை ஆயிற்றே! அட என் கடவுளே! குஸ்னெத்ஸோவ் எங்களை என்ன செய்வார் தெரியுமா?''

''மெதுவாக, ஸிஸ்டர். கலவரம் வேண்டாம்!'' என்று கண்ணடித்தான் ஸெர்கேய். ''நடந்தது எங்களுக்கும் உங்களுக்கும் மட்டுமே தெரியும்... நாங்கள் கம்மென்று இருந்துவிடுவோம். நீங் களும்... டாக்டரின் கோபத்தைக் கிளப்பாமல் இருப்பதற்காக... அவ்வளவுதான், ஒருவருக்கும் ஒன்றும் தெரியாது!''

மருத்துவத் தாதி திடுக்கிட்டாள். ''அடேடே! உனக்கு வேடிக்கைப் பேச்சுகூட வரும் போல் இருக்கிறதே! நான் என்னவோ நினைத்தேனே...''

''ஸோன்யா, இன்னும் என்னென்னவோ எனக்கு வருமே! பாட்டு கூடத் தெரியுமே எனக்கு: 'எப்படியும் நம் வாழ்க்கை முறிந்து போனது தானே-ஏ-ஏ...''

''முறிந்து போனது தானேயாம்'' என்று கோரணி செய்தாள் ஸோன்யா. ''இப்பேர்ப்பட்ட மனைவி இருக்கும் போதா?... நூறு வருஷங்கூட உன்னைச் சாக விடமாட்டாளே அவள்! இந்த மாதிரி மனைவி எங்கே கிடைப்பாள்?'' மருத்துவத் தாதி யெகோரவிச்சின் பக்கம் திரும்பினாள். ''நேற்றைக்குத் தான்யா குஸ்னெத்ஸோவிடம் கெஞ்சினாள், ஸெர்கேயின் உடம்பில் ஒட்டு போடுவதற்காகத் தான் உடம்பிலிருந்து தோல் துண்டு எடுத்துக்கொள்ளும்படி. வேற்றுருடைய தோல் உள்ளங்காலில் ஒட்டி வளராது என்று டாக்டர் அவளுக்கு விளக்கினார். அவளோ, 'நான் ஸெர்கேயுக்கு எப்படி வேற்றாராம்?' என்று சாதிக்கிறாள்.''

## 10

''நாம் இருக்கிறோமே, பெண்பிள்ளைகள், முட்டாள்கள்! வடிகட்டின முட்டாள்கள்! உனக்கு ஏதாவது நேர்ந்திருந்தால் இவன் இந்த மாதிரி ஓடியாடியிருப்பான் என்று நினைக்கிறாயோ? வெறும் பிரமை! அவன் உன்னைப் பார்க்கக்கூட வந்திருக்க மாட்டான்!'' என்று பக்கத்து மருந்துச் சிகிச்சைப் பிரிவைச் சேர்ந்த, வண்ணச்சாயம் பூசிக்கொண்டிருந்த மருத்துவத் தாதி சொன்னாள்.

''தெரியாத மனிதரைப் பற்றி இப்படிப் பேசுவானேன்?'' என்று மறுத்துரைத்தாள் தான்யா.

''பொறு, பொறு, தானே தெரிந்துகொள்வாய், அம்மணீ! உடம்பு நேரானதுமே அவன்

உனக்குக் காட்டுவான் சுயரூபத்தை. இந்த மாதிரி ஆட்களை எங்களுக்குத் தெரியும்! மோர்ஃபியா அடிமை ஆகாவிட்டால் குடி வெறியன் ஆகிவிடுவான்... அவன் உனக்கு நன்றி பாராட்டுவான் என்று எண்ணிக்கொண்டிருக்கிறாய்! பொறுத்திரு... அவன் கொடுக்கிற உதையில் புரிந்து கொள்வாய் உலகம் எப்படிப்பட்டது என்று. வேறு என்ன? இவன் பதற்றக்காரன், சிடுமூஞ்சி... இவர்கள் எல்லோருமே இப்படித்தான்... சிடுமூஞ்சிகள்.''

''இவன் அப்படிப்பட்டவன் அல்ல, வேரா, இவன் மாதிரியே வேறு! நீ ஆண்களையே வெறுக்கிறாய், அவ்வளவுதான். எவனோ ஒருவன் உன்னை ஏமாற்றிவிட்டான், உடனே நீ எல்லா ஆண்களும் கடைகெட்டவர்கள் என்று முடிவு செய்துவிட்டாய்.''

''ஐயையே, தான்யா! உன்னைப் பார்த்து எண்ணிக்கொள்கிறேன்: நீ இளம் பெண், அழகானவள், உனக்கு ஒரு புருஷன் கிடைக்காமலா போய் விடுவான்? அங்கவீனனோடு ஆயுள் முழுவதும் வாழ வேண்டும் என்பதைப் புரிந்து கொள். நாலு பேருக்கு முன் வளையவரவே வெட்கமாய் இருக்கும். பெண்ணுக்கு வேண்டிய தன்மானம் உன்னிடம் இல்லை!''

''தன்மானம் பல வகைப் பட்டது. சிலர் தங்கள் கீழ்மைக்காகவே பெருமைப் படுகிறார்கள்! எனக்கு என் காதலில் வெட்கப்பட வேண்டியது ஒன்றும் இல்லை'' என்று பொங்கிவந்த கோபத்தையும் மனத்தாங்கலையும் அடக்கிக்கொண்டு கத்திவிட்டாள் தான்யா.

''ஹா! காதலாம்! எங்கே பார்த்தாய் அதை? அயல்நாட்டுத் திரைப்படத்திலா? ரோமியோவா!...''

''நீ ஆன்மா மேல் காறித்துப்புகிறாய், எதற்காக, வேறா?... உனக்கே தெரியாது. உன் வாழ்க்கைமேல் ஏற்பட்ட கோபம் உன்னைக் குருடாக்கி விட்டதா என்ன?''

''உன்னைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை...'' —மருத்துவத் தாதி தலை குனிந்து சிந்தனையில் ஆழ்ந்தாள். ''ஐந்தாவது மாதம் அவன் பக்கத்திலேயே இருக்கிறாய். தரையிலோ, அங்கவீனர்களின் தள்ளுவண்டியிலோ, எங்கு இடம் கிடைத்ததோ படுத்துக்கொள்கிறாய். அவனுடைய கட்டிலுக்குப் பக்கத்தில் இருக்க முடிந்தால் போதும் உனக்கு... ஒரு சினிமாவுக்கோ நடனத்துக்கோ போக உனக்கு ஆசையே உண்டாவதில்லையா?...''

''அதெல்லாம் அப்புறம் பார்த்துக்கொள்வோம். எங்களுக்கு இனிமேல்தானே எல்லாவற்றையும் அனுபவிக்க வேண்டும்!''

''நேற்றைக்கு மட்டும் எங்கே போயிருந்தாயாம்?'' என்று சந்தேகத்துடன் கண்களைச் சுரித்தாள் மருத்துவத் தாதி.

''சமூக நலப் பாதுகாப்பு நிலையத்துக்கு. பென்ஷன் மனு கொடுத்துவிட்டு வந்தேன்.''

''அடத் தூ... 'காவியம் எல்லாம் முடிந்து போயிற்று. அவள் போனவள் போனவள் தான். இனிமேல் அடித்து விரட்டினாலும் இங்கே வர மாட்டாள்! வேடிக்கை செய்தாள், இனி போதும் என்று போய்விட்டாள்' என்று நம் பீன்ஸ்கிய் என்னென்னவோ பேசினானே!''

''வேடிக்கை செய்தாளாவது, அது என்ன?'' என்று மலைத்துப்போய்க் கேட்டாள் தான்யா.

''நீ என்ன, அறியாக் குழந்தையா? நீ அவனை விட்டு விட்டுப் போய்விட்டாய் என்று ஜனங்கள் நினைத்தார்கள்... புரிகிறதா?''

தான்யா வாயைத் திறந்தவள் ஒரு வார்த்தை பேச முடியாமல் தவித்தாள். மொண்ணையான கனத்த கருவி ஒன்ருல் யாரோ தலைமேல் அடித்தது போல் இருந்தது அவளுக்கு. முந்திய நாள் ஸெர்கேயின் பென்ஷன் விஷயமாகத் தான் சுரங்க அலுவலகம் போய்விட்டுத் திரும்பிய பொழுது, மருத்துவமனைச் சோதனைக்கூடத்தில் வேலை செய்யும் பெண் தன்னிடம் ஓடிவந்து, ''என்ன? நீ திரும்பி வந்து விட்டாயா?'' என்று வியப்பினுல் விரிந்த விழிகளுடன் கேட்டது அவள் நினைவுக்கு வந்தது.

அப்போது தான்யா அவளுடைய கேள்வியையோ ஆச்சரியத்தையோ புரிந்துகொள்ளவில்லை. அதற்கெல்லாம் அவளுக்கு நேரம் இல்லை. ஸெர்கேய் விபத்துக்குள்ளான பின் அப்போதுதான் முதல் தடவையாக அநேகமாக ஒரு நாள் முழுவதும் அவள் காணுமலிருந்தாள், எனவே ஸெர்கேயிடம் போவதற்காக அவள் பறந்தாள்.

மருத்துவ மனையின் நடைவழியில், வார்டின் கதவுக்கு அருகாமையில் அவளைச் சந்தித்தாள் நர்ஸ் கிளாவா. அவள் கைகளைக் கொட்டினுள், தான்யாவைத் தழுவிக்கொண்டாள், இரண்டு கன்னங்களிலும் முத்தம் இட்டாள், பின்பு வாய் விட்டு அழுதாள்.

''ஸெர்கேய் எப்படி இருக்கிருன்?'' என்று பதறிப்போய்க் கேட்டாள் தான்யா.

''அவனுக்கு ஒன்றும் இல்லை, அசட்டுப் பெண்ணே, ஒன்றும் இல்லை... எல்லாம் நன்ருக நடந்து முடிந்துவிட்டது'' என்று புன்னகையுடன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் நர்ஸ்.

தலைக்கு நாள் கண்டவற்றைத் தான்யா இப்போதுதான் புரிந்துகொண்டாள். திடீரென்று

அவளுக்கு வெட்கமாய் இருந்தது. கணவன்மேல் தனக்கு உள்ள உணர்ச்சிகளைச் சந்தேகித்த மனிதர்களுக்காக அவள் வெட்கினாள். நம்பிக்கையின்மையால் அவளை அவமதித்தவர்கள் அவர்கள் அல்ல போலவும், தானே ஏதோ கயமையும் கீழ்மையும் நிறைந்த காரியத்தைச் செய்துவிட்டது போலவும் அவளுக்குத் தோன்றியது.

''வேரா, உன் போன்றவர்களின் வாழ்க்கை பயங்கரமானது... நீங்கள் மனிதர்கள் அல்ல, ஓநாய்கள் போலிருக்கிறது. உங்கள் கருத்துக்களும் மனிதத்தன்மைக்குப் புறம்பானவை'' என்று தணிந்த குரலில் சொன்னாள் தான்யா.

## 11

நாட்கள் எப்போதும் போலவே ஒன்றன் பின் ஒன்றாய் வந்து போயின. இயற்கை நியதி விதித்த படியே அவை கழிந்தன. ஸெர்கேயின் உள்ளங்காலில் அறுவை மிகச் சிறந்த முறையில் நிறைவேறியது. அவன் இன்னும் ஒரு மாதத்தில் எழுந்து நடமாட முடியும் என்று குஸ்னெத்ஸோவ் நம்பினார். ஏதோ விழாவைப் போல அந்த நாளை எதிர்பார்த்தார் மருத்துவர்.

ஸெர்கேயுக்கும் தான்யாவுக்கும் துன்பகரமான நாட்கள் தொடங்கின. கலவரமும் மறு சிந்தனைகளும் தேட்டங்களும் நிறைந்த நாட்கள் அவை. ''மேற்கொண்டு எப்படி வாழ்வது?'' என்ற பிரச்சினை அவர்களுக்கு முன் நின்றது. புது வழியைக் கண்டுவிட்டதாகவும் மீளும் வகை இருக்கிறது என்றும் சில வேளைகளில் ஸெர்கேயுக்குத் தோன்றும். ஆனால் விவரங்களை ஆராய்ந்து பார்க்கத் தொடங்கியதுமே கடக்க முடியாத சுவர்போல

எதிர்ப்படும் ஓர் உண்மை: ''கைகள இல்லை, நான் முற்றிலும் ஏலாதவன்...'' அககணமே மனக்கோட்டைகள் எல்லாம் தகர்ந்துவிடும். புகலின்மை துரோகத்துடன் காதில் கிசுகிசுக்கும்: ''உன் ஆட்டம் ஓய்ந்துவிட்டது, தம்பீ!'' துள்ளி எழவும், ''போக்கிரித்தனம் செய்கிருய், கீழ்மகளே! நான் இன்னும் ஆட்டம் ஆடிக் காட்டுகிறேன் பார்!'' என்று சக்தி கொண்ட மட்டும் உரக்கக் கத்தவும் வேண்டும்போல் இருக்கும். ஆயினும் தன்மேலேயே இரக்கம் உள்ளத்தில் மறுபடி புகுந்துவிடும், சந்தேகங்கள் மீண்டும் முளைக்கும்: ''வாழ்க்கை எனப்படும் இந்த ஆட்டம் உண்மையிலேயே ஓய்ந்து விட்டதோ எனக்கு ஒருவேளை?''

அவன் மனைவியை நோக்கி, அவள் விழிகளில் தனக்கு ஆதரவைத் தேடுவான். அவளோ, சின்னவளாக, சிறு கூடான மேனியும் கூரிய மூக்கும் மிகவும் உள் ஆழ்ந்துவிட்ட விழிகளுமாக உட்கார்ந்திருந்தாள். தகாதமுறையில் கடுமையாகப் புண்படுத்தப்பட்ட பள்ளிச் சிறுமி போலக் காணப்பட்டாள் அவள். ஸெர்கேய் மனைவியின் முகத்தைக் கூர்ந்து பார்வையிட்டவன், திடீரென்று அதில் ஏதோ புதுமையைக் கண்ணுற்ருன். தான்யா புண்படுத்தப்பட்ட பள்ளிச்சிறுமியாக அப்போது தோற்றம் அளிக்கவில்லை. உற்சாகமூட்டும் உள் வலிமை நிறைந்த வயதுவந்த பெண்மணியாக அவள் மாறிவிட்டாள். ஸெர்கேயின் புகலின்மை அப்போது மறுபடி பின்வாங்கி விட்டது. புதிய நம்பிக்கைகளும் புதிய திட்டங்களும் அவன் மனத்தில் உதயமாயின.

ஆகஸ்டு மாதத் தொடக்கத்தில் யெகோரவிச்சின் நிலைமை மிகக் கடுமையாகச் சீர்கேடு அடைந்தது. கிழவர் உற்சகம் காட்டினுர், தமக்குக் கடின

மாய் இருப்பதை மறைத்தார். ஆயினும் தம் நோயை மறைப்பது நாளுக்கு நாள் அவருக்குக் கடினமாகிக்கொண்டு வந்தது நன்ருகத் தெரிந்தது. அவருடைய கடகட வென்ற சிரிப்பொலி எப்போதாவதுதான் கேட்டது. சமீபகாலம் வரை ஒளி சுடர்ந்த விழிகளின் பிரகாசம் நாளுக்கு நாள் மங்கியது. மருத்துவ மனேயின் சலிப்பூட்டும் வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களே வியாஜமாகக்கொண்டு ஏராளமாகப் பேசப்படும் கேலிப் பேச்சுக்கள் பதினென்ரும் வார்டில் இப்போது அனேகமாகக் கேட்கவே இல்லே.

குஸ்னெத்ஸோவ் நோயாளியை உற்சாகப் படுத்திஞரே தவிர, வார்டிலிருந்து வெளியே வந்ததும் அவர் புருவங்கள் சுளிக்கும், அவற்றில் கவலே தேங்கி நிற்கும், தோட்கள் ஏலாமையைக் காட்டும் விதத்தில் தொங்கிப் போகும்.

''யெகோரவிச்சுக்கு என்ன நேர்ந்து விட்டது, டாக்டர்? அவர் அனேகமாக உறங்குவதில்லே, வாதனேப்படுகிருர். நீங்கள் காணவில்லேயா என்ன?'' என்று ஸெர்கேய் அவர் காதில் கிசுகிசுத்தான்.

''ஒன்றுமில்லே, ஸெர்கேய், ஒன்றுமில்லே... நன்றி, நான் காண்கிறேன்'' என்று துயரத்துடன் விடை அளித்தார் குஸ்னெத்ஸோவ்.

''யெகோரவிச், இது நேர்மையில்லே'' என்று ஒரு முறை வேடிக்கையாகச் சொன்னுன் ஸெர்கேய். ''நான் எழுந்து நடமாட ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். உங்களோடு வெளியே உலாவிக் காற்று வாங்க ஆசைப்பட்டேன். நீங்களோ...''

''இந்தச் சனியன் என்னே விட்டு ஒழியட்டும், ஸெர்கேய், நாம் நடமாடுபவர்கள் குழாத்தில் சேர்ந்துவிடுவோம், மறு பிறப்பு பெற்றவர்கள்

போல! விடுதலை இல்லாமல் மனிதன் வாழவே முடியாது. விட்டம் எவ்வளவு உயரமாய் இருந்தாலும் அது அழுத்தத்தான் செய்கிறது, அதன் அடியில் இறுக்கமாய்த்தான் இருக்கிறது. மார்புச் சட்டையைக் கிழத்து எறிந்துவிட்டு வானத்தைப் பார்க்கவும் மரங்களின் சலசலப்பைக் கேட்கவும் ஆசை உண்டாகிறது.''—யெகோரவிச் பேச்சை நிறுத்திவிட்டு வெறிச்சோடிய விழிகளால் விட்டத்தை நெடு நேரம் பார்த்துக்கொண்டிருந்தார், பின்பு கம்மிய குரலில் சொன்னார்: ''ஸெர்கேய், நீயும் நானும் வெளியே போவோம். கட்டாயமாக உலாவுவோம்.''

## 12

வழக்கமாக அமைதியும் நிதானமுமாக இருக்கும் நர்ஸ் கிளாவா அத்தை மாறிவிட்டதுபோல் இருந்தது.

''டாக்டர், டாக்டர்!'' என்று தொண்டையைப் பிய்த்துக் கொண்டு கத்தினாள் அவள். ''ஸெர்கேய் எழுந்து நின்றான்!''—டாக்டர்களின் அறைக்குப் பாய்ந்து சென்றவள் குஸ்னெத்ஸோவ் மேல் மோதிக்கொண்டாள். அவருடைய மேலங்கியைப் பற்றிக்கொண்டு, ''ஸெர்கேய் எழுந்து நின்றான் என்கிறேன்! அட கடவுளே, சீக்கிரமாகத்தான் வாருங்களேன்! அவன் எழுந்து நின்றுவிட்டான், என் கண்ணு!'' என்று கத்தினாள்.

மார்புமேல் பட்டித் துணி கட்டப்பட்டு, நீலக் காற்சட்டை அணிந்து, வெறுங்காலனாய்க் கட்டிலின் பக்கத்தில் நின்றான் ஸெர்கேய், வெளிறிய முகமும் மெலிந்த உடலுமாக. குழந்தை போல ஒளிவு மறைவற்ற புன்னகை அவன் உதடுகளில் தவழ்ந்தது. அவன் முதுகைத் தாங்கலாகப்

பிடித்தவாறு அருகே நின்ருள் தான்யா. திறந்த வாயிலில் நோயாளிகளும் முறைவேலை மருத்துவத் தாதிகளும், பணித் தாதிகளும் மருத்துவர்களும் கூட்டமாய் நின்று இந்தக் கட்சியைக் கண்டார்கள். தங்கள் கண்களை அவர்களால் நம்ப முடியவில்லை. இறந்தவர்களிடையிலிருந்து மறுபிழைப்பு எய்திவிட்டான் மனிதன்! யெகோரவிச் வலியால் முகம் சுளித்தவாறு கட்டிலில் உட்கார்ந்து பாராட்டினுர்:

''சபாஷ்! அருமை, ஸெர்கேய்! பலே, பலே, வீரா! சரியான கழுகு அப்பா நீ! இப்படியே முன்னேறு!''

''கழுகுக்கோ'' தலை சுற்றியது, விழிகளுக்கு முன் கரும் புள்ளிகள் பறந்தன, கால்கள் தள்ளாடின, கெட்டியான பலகைத் தரை அலைகளில் அல்லாடும் அற்றலைந்த தெப்பம்போலப் பாதங்களுக்கு அடியிலிருந்து வழுகிச் செல்லப் பார்த்தது.

அன்றைய தினம் ஸெர்கேய் இரண்டு தரம் எழுந்து நின்ருன். இரண்டாம் தடவை ஒரு நிமிடம் நின்ற பிறகு அடி எடுத்துவைக்க முயன்ருன். முன்னே வைக்கும் நோக்கத்துடன் ஒரு காலை இழுத்தவன், நிலை குலைந்து நிர்க்கதியாகக் கட்டிலில் விழுந்துவிட்டான்.

''அட சைத்தான்! நடப்பதை மறந்துவிட்டேன்! கால்கள் எவையோ பாறையால் ஆனவைபோல மாறிவிட்டன... என் விருப்பத்துக்கு இசைய மறுக்கின்றன.''—அவன் தான்யாவைப் பார்த்தான். தன் நடக்க இயலாமைக்குச் சமாதானம் சொல்லுபவன் போல, குற்றப்பான்மை ததும்பும் குரலில் கூறினுன்: ''சமநிலையை வைத்துக்கொள்வது கடினமாய் இருக்கிறது. உடம்பு

எல்லாப் புறங்களிலும் ஆடுகிறது. கையை வீசத் தோன்றுகிறது, ஆனால்... கால் கொஞ்சங்கூட வலிக்கவில்லை! உனக்கு நம்பிக்கை ஏற்படவில்லையோ? கொஞ்சம் பிடித்துக்கொள், நடக்கிறேன்...''

''வேண்டாம், ஸெர்கேய், நான் நம்புகிறேன். இப்போது நீ களைத்துப்போய் விட்டாய். இன்றைக்கு இவ்வளவு போதும்.''

அன்று இரவ ஸெர்கேயும் யெகோரவிச்சும் மறுபடி கண்களை மூடவே இல்லை. நள்ளிரவு வரை ஜன்னல் வழியே வார்டுக்குள் நிலவு எட்டிப் பார்த்தது, இளநீல ஒளியைப் பாய்ச்சியது. எட்ட முடியாத தொலைவில் உள்ள ஏதோ பழங்கால நினைவை அது கொண்டு வந்ததாக நோயாளிகளுக்குத் தோன்றியது. உள்வேதனை உடல் வலியுடன் சேர்ந்து சகிக்க முடியாதது ஆயிற்று. உழைத்துக் களைத்த ஸெர்கேயின் கால்களில் உளைச்சல் ஏற்பட்டது. உடம்பெல்லாம் வேர்வை பெருக அவன் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். யெகோரவிச்சோ அடிக்கடி மருந்துப் பொடிகளை விழுங்கினார், ஆனால் அவற்றால் அவர் வேதனைமட்டும் குறைந்த பாடில்லை.

காலைத் தறுவாயில் ஸெர்கேய் லேசாக உறங்கினான். அக்கணமே உரத்த கூச்சல் அவனை எழுப்பி விட்டது. வார்டில் விளக்கு எரிந்தது. ஜன்னியில் புரண்டு புலம்பிக் கொண்டிருந்த யெகோரவிச்சின் பக்கத்தில் முறை வேலைத் தாதியும் மருத்துவரும் ஆலை பாய்ந்துகொண்டிருந்தார்கள்.

''குஸ்னெத்ஸோவுக்கு ஃபோன் செய். அறுவைக் கூடத்தைத் தயார் படுத்து'' என்ற சொற்கள் ஸெர்கேயின் காதில் விழுந்தன.

விடியற் காலையில் யெகோரவிச்சுக்கு அறுவை

செய்யப்பட்டது. ஸெர்கேயும் தான்யாவும் கேட்ட கேள்விகளுக்குக் குஸ்னெத்ஸோவ் விருப்பமின்றி மறுமொழி பகர்ந்தார். அறுவை இருபது நிமிடங்கள் நீடித்தது என்றும், பயன் மட்டும் எதுவும் விளையவில்லை என்றும் அவர் சொன்னார். யெகோரவிச் வேறு வார்டுக்கு மாற்றப்பட்டிருப்பதாக அறிவித்தார்.

தான்யா வெளியே பாய்ந்தோடப் போனாள். குஸ்னெத்ஸோவ் அவளைத் தடுத்து நிறுத்தினார்.

''வேண்டாம், அவர் உணர்விழந்து கிடக்கிறார்.''

''அது எப்படி, டாக்டர்?'' என்று பதைப்புடன் கேட்டான் ஸெர்கேய்.

''அப்படித்தான், ஸெர்கேய், நாங்களும் கடவுள்கள் அல்ல, தெரிந்ததா?''

## 13

நாட்கள், சிறிது காலத்துக்கு முன்பு தனக்குத் தோன்றியது போல அவ்வளவு நீண்டவை அல்ல என்பதை ஸெர்கேய் திடீரென்று கண்டறிந்தான். காலையில் உடம்பு பிடித்துவிடும் மருத்துவர் அவனிடம் வருவார். இரத்தம் கட்டிப்போன கால் மூட்டுக்களைப் பிடித்துத் தேய்த்துவிடுவார் அவர். அப்புறம் ஸெர்கேய் சில நிமிடங்கள் நிற்பான். தனக்கு அடியில் மிக உறுதியான ஆதரவு இருக்கிறது, அதை நம்பலாம் என்ற எண்ணம் தடவைக்குத் தடவை அவனுக்கு மேலும் வலுப்படும். பிறகு தான்யா துவாலையால் அவனைக் கட்டி, பின்னல் வார் போலச் செய்து பிடித்துக் கொள்வாள். ஸெர்கேய் மூன்று அடி நடந்து யெகோரவிச்சின் காலிக் கட்டில் வரை போ

வான். கட்டிலில் உட்கார்ந்து இளைப்பாறி விட்டு மறுபடி மூன்றடி நடந்து தன் கட்டிலுக்குத் திரும்பு வான். ஒவ்வொரு அடி வைப்பும் உடம்பு முழு வதும் காந்தும்படியான வலி. அதனால் கண்களில் பூச்சி பறக்கும், தன் வசமின்றியே கண்ணீர் பெரு கும், மூளையிலோ சம்மட்டி அடிபோல ஒரு நச்சரிக் கும் குரல் மறுபடி மறுபடி ஒலிக்கும்: ''இன்னும் ஓர் அடி, இன்னும், இன்னும்...''

செர்கேய் தாவு தீர்ந்துபோய்க் கட்டிலில் விழுவான், கண்களை மூடிக்கொள்வான், இரத்தம் வரும்படி கடித்த உதட்டை நக்கிக்கொண்டு சொல்லுவான்: ''ஒரு நிமிடம், ஒரே ஒரு நிமிடம் இளைப்பாறுகிறேன்...'' மறுபடி எழுந்து, வலி யைப் பொறுத்துக்கொண்டு, சித்திரவதையாய்த் துன்பம் அளிக்கும் மூன்று அடிகள் எடுத்து வைப் பான். இப்படியே நாள் பூராவும். மாலையில் எண் ணிக் கணக்கிடும்போது இந்த அடிகள் அவ்வள வாக நிறைய இல்லை—சுமார் நூற்று இருபது என்று தெரியவரும். தலைக்கு நாள் இவை பாதி எண்ணிக்கைதான் இருந்தன என்பதை செர்கேய் நினைவுபடுத்திக்கொள்வான். அவனுக்குக் களி பொங்கும். ஆகவே, மறுநாள் அடிகளின் எண் ணிக்கை சுமார் முன்னூறு இருக்கும். நோய் கார ணமான அரை மறதியிலும் செய்கையையும் போ ராட்டத்தையும் ஆர்வத்துடன் எதிர்பார்ப்பதி லும் புழுக்கம் நிறைந்த கோடை இரவுகளை ஒரு விதமாகக் கழித்தவாறு மறுநாள் விடிவதற்காகக் காத்திருப்பான். யெகோரவிச்சுக்காகவும் ஏங்கு வான். இன்னதென்று தெரியாத ஏதோ காரணத் தால் அவரிடம் போக அவன் அனுமதிக்கப்பட வில்லை.

# 14

அறுவையால் எதுவும் பயன் ஏற்படாது என்று துலக்கமாகத் தெரிந்தபடியால் யெகோரவிச்சின் அறுவை தொடங்கு முன்பே முடிந்துவிட்டது. அதன் பிறகு யெகோரவிச் மறுபடி அநேகமாகச் சுய நினைவை அடையவே இல்லை. அரிதாக எப் போதாவது உணர்வு தெளியும் நிமிடங்களில் அவர் பணிவிடை மருத்துவத் தாதியின் பக்கம் கட்டாயமாகத் திரும்பி, ''பரவாயில்லை, ஸிஸ்டர், நாம் இன்னும் போராடுவோம்'' என்று பலவீன மான குரலில் சொல்லுவார்.

பிறகு ஜன்னல் புறம் திரும்பிப் பசுமை படரும் மரங்களையும் விசாலமான நீல வானத்தையும் வைத்த கண் வாங்காமல் பார்ப்பார். முதிய புவியியலாளரைத் தைகாக் காடு பசுங்கிளைகளால் கண்களில் அடிக்கும். நெஞ்சைப் பிளக்கும் முறை யீட்டால் உளப் புண்ணைக் கிளறிவிடும்:

''என்னை விட்டு ஏன் போய்விட்டாய், இவான் யெகோரவிச்? வா, உன் காயத்தை ஆற்றுகிறேன்.''

யெகோரவிசுக்கு யாரேனும் இறக்கைகள் மட் டும் கொடுத்திருந்தால், வெறுப்பூட்டும் மருத் துவ மனை மேலங்கியை வீசி எறிந்துவிட்டு, சிகிச் சைக்கு வசப்படாத காயத்தை அழுத்திக்கொண்டு, தைகாக் காட்டுக்குப் பறந்து சென்றி ஆனால் எங் கே அவை, இறக்கைகள்? வாழ்க்கை அவற்றைத் துணித்துவிட்டது.

குளிர்காலத்தில் நண்பர்கள் அவரைப் பார்க்க வந்திருந்தார்கள். அவர்கள் கொண்டுவந்திருந்த தேவதாருக் கிளை இன்றும் மருத்துவமனைச் சிற் றலமாரியில் கிடந்தது. உறக்கமற்ற நீண்ட இரவு களில் யெகோரவிச் அதை எடுத்துக் கன்னத்தில்

அழுத்திக்கொள்வார். வார்டின் நசுக்கும் நிசப் தத்தில் தைகாக் காடு இரையும், முனகும், புவி யியலாள நண்பர்களின் கட்டைக் குரல்கள் முழங் கும்:

''நினைவு இருக்கிறதா இவான், உஸ்ஸுரீ தை காவிலே? கம்ச்சாத்காவில் நடந்தது ஞாபகம் இருக்கிறதா?... நினைவு இருக்கிறதா?...''

இவான் யெகோரவிச்சுக்கு எல்லாம் நினைவு இருக்கிறது.

புதிய கண்டுபிடிப்புக்களின் பெருமை பொங் கும் மகிழ்ச்சி, தைகாக் காட்டில் மூட்டப்படும் நெகிடி நெருப்பின் கொஞ்சலான கதகதப்பு, வெறித்துப் பாயும் மலையாறுகளில் சொற்றைத் தெப்பங்கள் மீது பயணங்கள், மைனஸ் அறுபது டிகிரி சென்டிகிரேடுவரை போகும் கடும் குளிர், காட்டுத்தீயின் நெருப்பு வளையங்கள்...

எல்லாமே யெகோரவிச்சின் நினைவில் பதிந் திருந்தன.

ஒன்று மட்டுமே அவருக்குப் புரியவில்லை. நூறு சாவுகளை வென்றவரும் எத்தனை எத்தனையோ இன்னல்களைக் கடந்தவரும் ஆன அவரை இந்த மடத்தனமான நோய் கட்டிப் போட்டு விடுமா என்ன? இதற்கு அவ்வளவு துணிச்சலா?

ஒரு தடவை நினைவு திரும்பியதும் யெகோரவிச் குஸ்னெத்ஸோவைத் தம்மிடம் அழைத்துவரும் படி கேட்டுக்கொண்டார். மருத்துவர் வந்து நாற் காலியில் அமர்ந்தார்.

''உடம்பு எப்படி இருக்கிறது, இவான் யெகோ ரவிச்?''

''டாக்டர், நாம் குழந்தைகள் அல்ல. இந்தக் கண்ணும் பொத்தி விளையாட்டு எதற்காக? நான் இன்னும் எத்தனை நாட்கள் வாழ்வேன்?''

''யெகோரவிச்...''

''தெரியும், கொஞ்ச நாட்கள்தான்!'' என்று இடைமுறித்தார் கிழவர். ''நான் வேறொரு விஷயம் பற்றிப் பேச விரும்புகிறேன்.''—யெகோரவிச் சற்று நேரம் பேசாதிருந்துவிட்டு, துணுக்கு துணுக்காகச் சொல்லலானார்: ''எத்தனையோ விதமான ஒட்டுச் சிகிச்சைகளைப் பற்றி நான் கேள்விப் பட்டேன்... நான் இந்தத் துறையில் தேர்ந்தவன் அல்ல, எனவே அறியேன். மனிதர்கள்மீதும் இந்த முறை சோதித்துப் பார்க்கப்படுகிறதாம், சொல்லுகிறார்கள். என் ஆட்டமோ ஓய்ந்து போய்விட்டது. என்னைவிட நீங்கள் இதை நன்றாக அறிவீர்கள். என் கைகள் வலியவை, ஆரோக்கியம் உள்ளவை. என் இரத்தக் குழுவும் அவனுடைய இரத்தக் குழுவும் ஒன்றேதான். நான் யாரைக் குறிப்பிடுகிறேன் என்பதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். துணிந்து செய்து பாருங்கள், டாக்டர்! நான் இசைகிறேன்.''—யெகோரவிச் தம் கைகளை ஒரு முறை பார்த்துவிட்டு அவசரமாக மேலே சொன்னார்: ''நான் எழுத்துமூலம் இசைவு தருகிறேன். இதோ. ஸெர்கேயோ இளைஞன். அவன் வாழ வேண்டும். எனது நாட்களோ அளவறுக்கப் பட்டுவிட்டன... ஆபத்து மேற்கொள்ளத் தக்கதே... ஒட்டுச் சிகிச்சை பயன் தரா விட்டால் அவனுக்கு அபாயம் எதுவும் நேராது. சிகிச்சை பயனளித்தாலோ... உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன், டாக்டர் குஸ்னெத்ஸோவ்!... இது என் இறுதி விருப்பம்...''

''யெகோரவிச், என் அன்பரே!'' என்று கிளர்ச்சியுடன் பேசத் தொடங்கினார் குஸ்னெத்ஸோவ். ''நான்... உங்கள் உணர்ச்சிகளை நான் புரிந்து

கொண்டேன். ஆனால் வருந்தத்தக்கது என்ன வென்றால் திசுக்களின் கூட்டுச்சேராமை என்ற ஒரு விஷயம் மருத்துவத்தில் இருக்கிறது. தடை எனப்படுவது அதுவே... உங்கள் கைகளை ஸெர் கேயுக்கு வைத்து ஒட்டுச் சேர்ப்பது என்னால் முடிந் தால் கூட, அவை உயிர்ப்பு அடைய மாட்டா. இம் மாதிரி அறுவைச் சிகிச்சைகளை நோக்கி மருத்துவம் முன்னேறிக் கொண்டிருக்கிறது, ஆனால் இன்னும் அவற்றை எட்டிவிடவில்லை.''

''இது கண நேர உணர்ச்சிப் பெருக்கோ அல் லது அது மாதிரி ஏதேனுமோ என்று மட்டும் எண்ணிவிடாதீர்கள். இல்லை. தீர்மானம் செய் வதற்கு முன் நான் நீண்ட நேரம் சிந்தித்தேன்... இனிமேல் நான் உயிரோடு இருக்கும் நம்பிக் கைக்கு இடமே இல்லை என்று புரிந்துகொண்டேன். நமது கைகளாவது பயன்படும் என்ற எண்ணத் தால் மகிழ்ந்தேன்... நீங்கள் என்னடா என்றால் தடை என்கிறீர்கள்... ஐயோ, மனிதனின் வழி யில் இந்தத் தடைகள்தாம் எத்தனை! இதோ என் கைகள், எடுத்துக்கொள்ளுங்கள், வேறு ஒருவ னுக்குக் கொடுங்கள்! ஒருவேளை நாளைக்கேயோ, அல்லது... இவை யாருக்குமே பயன்படாமல் போய்விடும். யாருக்குமே...''

குஸ்னெத்ஸோவ் யெகோரவிச்சின் கையை ஆர்வத்துடன் பற்றி இறுக்கினார்.

''உங்களையும் வதைத்துக் கொள்ளாதீர்கள், என்னையும் வதைக்காதீர்கள்.''

''நல்லது, வதைக்க மாட்டேன். ஆனால் என் நோய் என்ன என்பதை என்னிடமிருந்து மறைக் காதீர்கள். எனக்கு வெகு காலமாகவே, ஆரம்பத் திலிருந்தே தெரியும்... எனக்குப் புற்றுநோய் என்று... கைகளை மாற்றிவைத்து ஒட்டுச் சிகிச்சை

செய்வது என் கற்பனை அல்ல. அமெரிக்கர்கள் அது மாதிரிச் செய்ததாக வானொலியில் செய்தி கேட்டேன்...''

''அது வெறும் விளம்பரப் பரபரப்பு. ஒட்டு வைத்த கைகள் ஒரு வாரத்தில் துண்டித்து அகற்றப்பட்டுவிட்டன.''

''நான் என்னவோ பயந்தேனே, இசைவு தெரிவிப்பதற்கு முன் இறந்து போவேனோ என்று... அதற்காகவே பத்திரம் எழுதி வைத்தேன்... எல்லாம் வீண்தானா!..

## 15

மருத்துவர் குஸ்னெத்ஸோவும் தான்யாவும் எவ்வளவுதான் மறைக்க முயன்றுங்கூட, யெகோரவிச் எந்த வார்டில் வைக்கப்பட்டிருக்கிறார் என்பதை ஸெர்கேய் தெரிந்துகொண்டு விட்டான். பாதி திறந்த கதவு வழியே பார்வை செலுத்தி, அந்த வார்டு சுமார் எழுபது அடிகள் தூரத்தில் இருக்கிறது என்று அவன் கணக்கிட்டான்.

''எழுபது அடிகள்! எழுபது தடவைகள் உடல் கனத்தை நோயுற்ற காலின்மேல் சுமத்த வேண்டும், அதே கணத்தில் திடமான காலைச் சட்டென முன்னே வைக்க வேண்டும். ஏதேனும் கவைக்கோல் இருந்தால் நன்றாய் இருக்கும்! ஆனால் எதனால் பிடித்துக்கொள்வது? பரவாயில்லை, தோளைச் சுவற்றில் அழுத்திச் சாய்ந்துகொள்கிறேன். அது வண்ணம் பூசிய சுவர், எனவே தோள் வழுக்கும். கட்டுப்போடும்போது பட்டித் துணிக்குள் நிறையப் பஞ்சுப் பற்றைகள் வைக்கச் சொல்லுகிறேன். இளைப்பாறுமல் ஐம்பது அடிகள் என்னால் நடக்கமுடிகிறது. குறைவு. ஆனால் சுவற்றில் ஆதாரமாகச் சாயாமலே இத்தனை அடிகள் நடக்க

லாமே. நடைவழியில் தரைக் கம்பளம் விரித்திருக்கிறது. அதன்மேல் நடப்பது வெறும் தரையில் நடப்பதைவிடக் கடினம். பாதி வழியில் விழுவது வேறு வேண்டுமா லட்சணம்! குஸ்னெத்ஸோவ் ஓடி வருவார். 'யார் அனுமதித்தது? அவர்களைச் சைத்தான் வாரிக்கொண்டு போக!' என்பார்.''— இவ்வாறு எண்ணமிட்டான் ஸெர்கேய்.

தன் வார்டிலிருந்து யெகோரவிச்சின் வார்டுக்கு நடக்கும் திட்டத்தை, சிறு சிறு விவரங்களைக் கூட விடாமல் தயாரித்து முடித்துவிட்டான் ஸெர்கேய். மிகக் கடினமானது—திட்டத்தைச் செயல்படுத்துவது—பாக்கி இருந்தது. நண்பருடன் தன் சந்திப்பை ஸெர்கேய் ஏற்கனவே கற்பனை செய்து கொண்டிருந்தான்: அவன் யெகோரவிச்சிடம் மிக மிக அமைதியாக, ஏதோ தலைக்கு நாள்தான் அவரைப் பிரிந்ததுபோல, செல்வான். ''வணக்கம், யெகோரவிச்! உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்!'' என்பான். யெகோரவிச் புன்னகை புரிவார். முழங்கையை ஊன்றி நிமிர்ந்து, ''அப்படிப் போடடா என்றேன்! இதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது! அப்படியானால், தானாகவே நடக்கிறாயாக்கும்! சரி, உட்காரு, சேதி சொல்லு!'' என்று மகிழ்ச்சியுடன் கூவுவார். ஸெர்கேய் உட்காருவான்...

திடீரென்று ஒரு கேள்வி எழுந்தது: ''ஆமாம், எந்த நேரத்தில் நான் போவேனும்? கூட்டம் கூடிவிடும், குஸ்னெத்ஸோவ் பார்த்துவிடுவார், அவ்வளவுதான்... பகல் தூக்க நேரத்தில்!'' என்ற எண்ணம் ஸெர்கேயுக்குச் சட்டென உதித்தது.

வார்டுக்கு வெளியே அடி வைத்ததும், மருத்துவ மனை நடைவழியின் அசாதாரண நீளம் அவனுக்கு மலைப்பூட்டி அவனை நிற்க வைத்தது.

ஆட்கள் இல்லாத குறுகிய நடைவழி கட்டிடத் தின் உள்ளே எங்கேயோ நீண்டு சென்றிருந்தது. அதற்கு முடிவே கிடையாதுபோலத் தோன்றி யது.

''அந்தக் கதவுவரை போக எழுபது அடிகள் நடக்க வேண்டுமா?'' என்று திகைத்த ஸெர்கேய், தயக்கத்துடன் முதல் அடி எடுத்து வைத்தான்.

பதினேழாவது அடி எடுத்து வைத்ததும், நடை வழியின் மறு கோடியில் ஆட்கள் வருவதை ஸெர் கேய் கண்ணுற்றான். நான்கு பெயர் இருந்தார்கள். தலைகளை ஒருவர் பக்கம் ஒருவராகச் சாய்த்துக் கொண்டு, கனமாக அடிகள் வைத்து அவனை நோக்கி வந்தார்கள் அவர்கள். சற்று கீழே பார்வை செலுத்திய ஸெர்கேய், வெள்ளைத் துணி போர்த்த தூக்குபடுக்கையை அவர்கள் ஏந்தி வருவதைக் கண்டான்.

''நோயாளிகள் இப்படி எடுத்துவரப்படு வதில்லை!'' என்று விளங்காத திகிலுடன் எண்ண மிட்டான். ''நான் எதற்குப் பயப்படுகிறேன்?''— நிசப்தத்தில் திடீரென வெடித்த துப்பாக்கிக் குண்டு போல இந்த எண்ணம் அவன் மூளையைத் தாக்கியது. அவன் தலை கிறுகிறுத்தது, வயிறு கலங்கிக் குமட்டல் எடுத்தது.

தான் செல்ல விருந்த வார்டின் கதவை மறு நொடியில் ஸெர்கேய் கண்டான். அது விரியத் திறந்திருந்தது.

''இறந்தது யார்?'' என்று தன் பக்கத்தில் வந்த மனிதர்களிடம் நடுங்கும் குரலில் கேட்டான் ஸெர்கேய்.

''இவான் யெகோரவிச்'' என்று உரக்கப் பதில் அளித்தான் மருத்துவப் பணியாள்.

ஏதோ கனத்த பொருளால் அஜாக்கிரதையாக

இடிக்கப்பட்ட பெட்டிபோல நடைவழி ஸெர்கே யின் கண்களுக்கு முன் அசைந்தாடி நடுங்கிவிட்டு நிலைத்து நின்றது.

''நில்லுங்கள்! அவரை எங்கே எடுத்துப் போகிறீர்கள்?'' என்று கத்தினான் ஸெர்கேய்.

''நாம் எல்லோருமே இறக்க வேண்டியவர்கள் தாம், மகனே'' என்று அமைதியாகச் சொன்னான் அந்த ஆள்.

உயர நிமிர்ந்த மோவாயுடன் தூக்குபடுக்கையில் கிடந்தார் யெகோரவிச். அவருடைய மஞ்சள் பாரித்துச் சுருக்கங்கள் விழுந்த முகத்தில் அவர் வாழ்ந்த வாழ்க்கை அனைத்தையும் போலவே அமைதியற்ற பாவம் பதிந்திருந்தது. புருவக் குச்சங்கள் சாம்பல் வெண் நிற ஊசிகள் போலத் துருத்தியிருந்தன. இறந்தவரின் சுபாவத்தில் ஒரு போதுமே இருந்திராத கடுமையை அர்த்தமின்றி உறுதிப்படுத்தியவாறு, அவை இன்னும் உயிர்த் துடிப்பு கொண்டிருப்பவை போலத் தோற்றம் அளித்தன.

''யெகோரவிச்!'' என்று வீரிட்டான் ஸெர்கேய். பின்பு, வழுகலான, குளிர்ந்த சுவற்றின் மேல் மோவாயை அழுத்தியவாறு மெதுவாகத் தரையில் சரிந்தான்.

## 16

அன்று இரவு ஸெர்கேய் உறங்கவில்லை.

அவனுடைய சொந்த வாழ்வு முழுவதும் ஒவ்வோர் அடியாக, ஒவ்வொரு நிகழ்ச்சியாக அவன் கண்முன்னே தோன்றி, புதிய, அதிக விசாலமான மதிப்பீட்டைக் கோரியது. யெகோரவிச்சின் நடத்தையையும் செயல்களையும் கருத்துக்களையும்

ஸெர்கேய் இப்போது வேறு கோணத்திலிருந்து நோக்கினன். அவை அவனுக்கு ஒளிமிக்க அளவு மானமாக விளங்கின. தனது நடத்தை, தனது கருத்துக்கள், தன் செயல்கள் ஆகியவற்றை அவற்றுடன் அவன் ஒப்பிட்டுப் பார்த்தான்.

பலபலவென்று விடியத் தொடங்கியதுமே ஸெர்கேய் சிரமத்துடன் தலையணையிலிருந்து தலையைத் தூக்கி எழுந்து நின்று, வலியைப் பொருட்படுத்தாமல் வார்டில் நடை பழகத் தொடங்கினன்.

''நமக்கு எவ்விதமான செல்லமும் கொடுக்கக் கூடாது! கூடவே கூடாது! ஒவ்வொரு நாளும் ஐம்பது அடிகள் அதிகமாக நடக்க வேண்டும்!'' என்று மீறத் தகாத ஆணை இடுபவன் போன்ற தோரணையில் தனக்குள் உறுதி செய்துகொண்டான்.

காலையில் வார்டுக்குள் வந்த தான்யா, ஸெர்கேய் தரையில் உணர்விழந்து கிடப்பதைக் கண்டாள்.

''மூன்று நாட்கள் படுக்கையிலேயே கிடக்க வேண்டும்! முழு அமைதி!'' என்று உத்தரவிட்டார், செய்தி அறிந்து ஓடிவந்த குஸ்னெத்ஸோவ். பின்பு தான்யாவைப் பார்த்துக் கூறினர்: ''எங்களை மன்னித்துக்கொள். நீ இல்லாத போது நாங்கள் அவனைச் சரியாகக் கண்காணிக்காமல் விட்டு விட்டோம். நேற்று அவன் நடைவழிக்குப் போய் யெகோரவிச்சைச் சந்தித்துவிட்டான்... அதாவது அவருடைய உடலை...''

தான்யா கண்களைப் பரக்க விழித்தாள், ஏதோ சொல்ல வாயெடுத்தாள், ஆனல் பேச முடியாமல் நின்றாள்.

''யெகோரவிச் உயிரோடு இல்லை'' என்று சொல்லிவிட்டு வெளியேறினர் குஸ்னெத்ஸோவ்.

நரம்பு அதிர்ச்சியால் ஏற்படக்கூடிய விளைவுகள்பற்றிக் குஸ்னெத்ஸோவுக்கு உண்டான அச்சம் நல்ல வேளையாகத் தவருயிற்று. இளம் உடல் விரைவாக வலிமையைத் திரட்டிக்கொண்டு தானே நேராகிவிட்டது. மாலையாவதற்குள் ஸெர்கேய் எழுந்து நின்று, நடைப் பயிற்சியைத் தொடர்ந்தான். விரைவாகவும் உறுதியாகவும் தன் பலத்தில் நிற்கவும், இயக்கமின்மை என்னும் வெறுப்பூட்டும் தளையை அறுத்துக் கொண்டு வெளியேறவும் அவனுக்கு இருந்த ஆர்வத்தை எந்தச் சக்தியாலும் தடைசெய்ய முடியவில்லை.

மருத்துவ மனையிலிருந்து வெளியேறும் நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. தான்யாவும் ஸெர்கேயும் மேலும் மேலும் அடிக்கடி அதைப் பற்றிப் பேசலானுர்கள். அந்த நாள் எப்படி இருக்கும்? மருத்துவ மனையின் உயரமான வாயிலுக்கு வெளியே அவர்களுக்கு என்ன காத்திருந்தது? இவையும் வேறு பற்பல கேள்விகளும் தங்கள் தெளிவின்மை காரணமாகத் திகிலூட்டின, துரிதப்படுத்தின. வீட்டு வாழ்க்கை தங்களுக்கு எத்தகைய துயரங்களையும் இன்பங்களையும் வழங்கும் என்று இருவருக்குமே தெளிவாகப் புலப்படவில்லை என்ருலும் விரைவில் வீட்டுக்குப் போக ஆவல் கொண்டு துடித்தார்கள் அவர்கள்.

பழகிவிட்ட மருத்துவ மனையைப் பிரிவது கடினமாய் இருந்தது. ஸெர்கேயின் புதிய நிலைமையில் மருத்துவ மனையில் இருந்தவை எல்லாம் வசதியாகவும் பழக்கமாகவும் இருந்தன. இதோ இந்தத் தரை விரிப்பில்தான் அவன் முதலில் அடி வைத்தான். அதோ அங்கே விழுந்தான். அப்புறம் விட்டத்தில் இருந்த அந்தக் கீறல்? அதற்கு நிறைய விஷயங்கள் தெரியும். மனிதன் மல்லாக்கப்

படுத்திருக்கிறன், முனகல்களை அடக்கிக்கொள் கிறன், ஆனல் அவனது வெட்டுண்ட கைகளின் விரல்களோ காந்துகின்றன — பழுக்கக் காய்ந்த இரும்பால் யாரோ அவற்றின்மேல் சூடு போடுவதுபோல. இந்தக் கதவைத் திறந்துகொண்டு காலைதோறும் வருவார் குஸ்னெத்ஸோவ், புன் முறுவல் செய்வார், ''நன்றாக உறங்கினயா?'' என்று தவருமல் கேட்பார். முறை வேலைக்கு வருபவர் களும் வேலை முடிந்து வீடு திரும்புபவர்களுமான பணிவிடைத் தாதிகளும் மருத்துவத் தாதிகளும் ஒருவர் பின் ஒருவராக வார்டுக்குள் வருவார்கள், கையை ஆட்டி முகமன் தெரிவிப்பர்கள், அல்லது விடை பெறும் பாவனையில் தலை அசைப்பார்கள். வெளியே என்ன இருக்கும்? என்ன? அறிமுகம் அற்றவர்கள் தெருவில் அவனை எப்படிப் பார்ப் பார்கள்? இரக்கத்துடனும் ஆவலுடனும் பார்ப் பார்கள்...

ராஃபிக் மமேதொவும் கோல்யா கொஞ்சரோவும் சனிக்கிழமை வந்தார்கள். ஒரே ஆரவாரமும் கிளர்ச்சியுமாக வார்டுக்குள் பாய்ந்தார்கள்.

''அடே ஸெர்கேய், சைத்தான் பயலே! உன் வளர்ப்புப் பிள்ளை இருக்கிறதே, இளங்கம்யூனிஸ்டுகள் வேலைக் குழு, அதற்குக் கம்யூனிஸ முறை வேலைக் குழு என்ற பட்டம் வழங்கப்பட்டிருக் கிறது!''

''ஓகோ-கோ... பிரமாதம், பலே பேஷ்!'' என்று தலையணையிலிருந்து தலையை நிமிர்த்தினன் ஸெர்கேய்.

''குழுவினர் விழா மிதப்பில் வளைய வருகிறர் கள். கால் தரையில் பாவவில்லை அவர்களுக்கு! குழு விதிகளை எழுதிக் கொண்டிருக்கிறர்கள்.

நாளைக்குத் திடீரென்று உன்னிடம் வருவார்கள். ஏதோ சபதம் ஏற்க வேண்டுமாம், அவர்களுடைய புது ஏற்பாடு!'' என்றான் மமேதொவ்.

''கோல்யா, அந்தக் கோட்டை என் மேலே போர்த்து.'' — ஸெர்கேய் உட்கார்ந்து கால்களைத் தொங்கவிட்டுக் கொண்டான். ''சபதம் என்ன சொல்கிறாய்? இந்த ஆடம்பரங்கள் இல்லாமல் நடக்காதா என்ன? எதற்காக இது? நம் பையன்களை யாரேனும் சந்தேகிக்கிறார்களா என்ன?''

''அட நீ என்ன, ஸெர்கேய். அவர்கள் உன்னை ஞானத் தந்தையாக மதிக்கிறார்கள். நீ அவர்களுக்கு... அவர்களுக்கு மட்டும் ஏன், எங்கள் எல்லாருக்கும் தான் ஆதர்சம். புரிகிறதா?''

''இந்தப் பேச்சு வேண்டாம், கோல்யா.''

''வேண்டும், கட்டாயம்!'' என்று காற்றை வெட்டுபவன்போல் கையை வீசினான் ராஃபிக் மமேதொவ். ''வாழ்க்கையில் எப்படி எல்லாம் நேர்கிறது, தெரியுமா? பீரங்கிச் சாலகத்துக்கு இரண்டு வழிகள் எப்போதுமே உண்டு—முன்னேயும் பின்னேயுமாக. எல்லோருமே முன் வழியைத் தெரிந்தெடுப்பது இல்லையே. உண்மையிலோ, எல்லோரும் அதையே தெரிந்தெடுக்க வேண்டும்! புரிந்ததா? எல்லோரும்!''

''நீ மட்டும் என்ன, பின் வழியைத் தெரிந்தெடுப்பாயோ?'' என்று கேட்டான் ஸெர்கேய்.

''த்தெ-தெரியாது... அதாவது முன்பு அறியாதிருந்தேன், இப்போது அறிவேன்.''

''இதெல்லாம் என்ன... அறியேன், அறிவேன்... என் இடத்தில் நீயும் கோல்யாவும் அப்போது இருந்திருந்தால், இந்தப் பின் வழி ஒன்று இருக்கிறது என்பதையே மறந்திருப்பீர்கள்.''

''ஐந்தாவது சுரங்கவழியில் கன்வேயரின் நாடா

எரியத் தொடங்கிற்று'' என்று மெதுவாகச் சொல்லத் தொடங்கினான் கொஞ்சரோவ். ''கன்வேயர் ஓட்டி பத்தொன்பதே வயதுப் பையன், இப்பொழுதுதான் பள்ளிப் படிப்பை முடித்து விட்டு வந்தவன். அவன் அரண்டுபோய் ஓடிவிட்டான். அவன் செய்ய வேண்டி இருந்தது எல்லாம் எழுந்து நின்று விசைப் பொத்தானை அழுத்துவதும் ஒரு கை தண்ணீரால் நெருப்பை அணைப்பதும் தான்... அவனுக்கு அதில் கொஞ்சங்கூட ஆபத்து கிடையாது. அவன் அப்படிச் செய்திருந்தால் நான்கு சுரங்கத் தொழிலாளர்கள் அன்று தங்கள் குடும்பத்தாரிடம் திரும்பி வந்திருப்பார்கள். அவர்களோ, திரும்பவில்லை. ஏனென்றால் அந்தப் பயல், தான் மட்டும் ஓடிவிட்டான்.''

''இது நடந்திருக்கவே முடியாது'' என்று திகிலுடன் கூவினான் ஸெர்கேய். ''அந்த ஆள் அப்புறம் எப்படி வாழப் போகிறான்?''

''துரோகிகள் எப்படி வாழ்கிறார்கள்?''

''இந்தப் பேச்சை விடுவோம்... இதோ ராஃபிக் அருமையான ஷாம்பெயின் பாட்டில் கொண்டுவந்திருக்கிறான். உன் ஞானப்புதல்வர்களின் வெற்றியைக் கொண்டாடுவோமா? நீ குடிக்கலாம் அல்லவா, ஸெர்கேய்?'' என்றான் கொஞ்சரோவ்.

''இன்னும் கடுமையான மது இருந்தால்...''

''பிராண்டி வேண்டுமா? இதோ ஒரு நொடியில்!...''

''இல்லை, கொஞ்சரோவ், நான் வேடிக்கைக்குச் சொன்னேன். கடுமையான மது அருந்தினால் நான் அழத் தொடங்கிவிடுவேன்...''

''அசட்டுப் பிசட்டென்று பேசாதே, ஸெர்கேய். எல்லாப் பயங்கரங்களும் கழிந்து விட்

டனவே. விரைவில் வீடு திரும்புவாய். உனக்காக நல்ல வீடு ஒழித்து வைத்திருக்கிறோம்!..''

''தம்பிகளா, நான் சுரங்கத்துக்குத் திரும்ப மாட்டேன்.''

''என்ன?.. நீ என்ன, ஸெர்கேய்?.. புரிந்து கொண்டுதான் பேசுகிறாயா?''

''துர்ப்பாக்கிய வசமாக, மிகத் தெளிவாகப் புரிந்துகொண்டே பேசுகிறேன்...''

''இல்லை, ராஃபிக், கேளப்பா இவன் எண்ணம் போகிற போக்கை! நீயாகவே திட்டமிட்டாயா, வேறு யாரேனும் சொல்லிக்கொடுத்தார்களா? விட மாட்டேன்!'' — கொஞ்சரோவ் நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்து, ஸெர்கேயுக்கு முன் கைகளைப் பரப்பிக்கொண்டு வழி மறித்தான்— ஏதோ அவன் அப்போதே, அந்தக் கணமே எங்கோ ஓடப் போவதுபோல. பின்பு உட்கார்ந்து, நிமிட நேரம் மௌனமாகி, வியப்பார்ந்த விழிகளால் ஸெர்கேயை நிலைக்குத்திட்டு நோக்கினான். ''ஸெர்கேய், எனக்கு ஒன்றுமே புரியவில்லை. உனக்கு எங்கள்மேல் கோபமா? நாங்கள் உங்கள் நண்பர்கள், சுரங்கம் உன்னுடையது. புரிந்ததா? உன்னுடையது! அதற்காக, எங்களுக்காக நீ...'' — கொஞ்சரோவ் மறுபடி குதித்தெழுந்து கைகளை ஆட்டி, ''உன் இரத்தத்தைச் சிந்தினாய், இதோ இவற்றை வழங்கினாய்... சுரங்கம் அழியாது பிழைக்கும் பொருட்டு, நாங்கள் பிழைக்கும் பொருட்டு! இல்லை, நீ வேடிக்கைக்குச் சொல்லியிருப்பாய். அப்படித்தானே, ஊம்?''

ஸெர்கேய் பேசாதிருந்தான்.

''ராஃபிக், நீ என்ன சிலையாய் உட்கார்ந்திருக்கிறாய்? இவனுக்கு ஏதாவது சொல்லேன்!''

''கத்த வேண்டாம், கோல்யா. வேடிக்கை

பேசும் நிலையில் இல்லை நான். சுரங்கத்துக்கு நான் திரும்ப மாட்டேன்.''

''ஏன் என்றாவது விளக்குவாயா?'' என்று தணிந்த குரலில் கேட்டான் ராஃபிக்.

''ஒரு வேளை நான் செய்வது சரி அல்ல போலும்... அறியேன்... என்னைக் கண்டனம் செய்யலாம் நீங்கள். ஆனால் சுரங்கச் சங்கு ஊதியதும் நீங்கள் முறை வேலைக்குப் போகையில் நான் எப்படி வாழ்வதாம்? என் இதயத்தை எங்கே ஒளிப்பேன்?''

''நீ கிறுக்கனப்பா, ஸெர்கேய்!'' என்று புன்னகை செய்தான் கொஞ்சரோவ். ''நீ வேலை இல்லாமல் இருந்துவிட மாட்டாய். தேடித்தருவோம், உதவுவோம்...''

''அதுதானே—தேடித் தருவீர்கள், உதவுவீர்கள்... உங்கள் வேலைக்குக் குந்தகம் ஏற்படும் வகையில் எனக்குப் பணிவிடை செய்துகொண்டிருப்பீர்கள். நீங்கள் நெஞ்சு உரம் படைத்தவர்கள். ஆனால் உங்கள் விழிகளில் கூடச் சில வேளைகளில் எனக்கு இரக்கம் தென்படுகிறது... இப்போதுகூட, நான் இவ்வளவெல்லாம் சொன்ன பிறகும் ஒருவனாவது துள்ளி எழுந்து என் கன்னத்தில் விடவில்லை பளாரென்று... கன்னத்தில் அறை வாங்கும் உரிமையை நான் மறுபடி முயன்று பெற வேண்டும்... நானாகவே... என் வாழ்க்கை முழுவதாலும். சம அந்தஸ்துடன்... மனம் விட்டுப் பழகுவதற்கு...''

மமேதொவ் எழுந்து வார்டில் நடை போடலானான்.

''நீ உனக்கே கொடுமை செய்து கொள்கிறாய், ஸெர்கேய்.''

''என் முடிவு பற்றித் தீர்க்கமாகச் சிந்தனை

செய்வதற்கு என்னிடம் நேரம் இருந்தது. சுரங் கத்திடம் நான் பிரிவு பெற்றுவிட்டேன். என்னை நம்புங்கள் — இருதயத்தைப் பிய்த்து எடுப்பது லேசல்ல, ஆனால்... சுரங்கத்துக்கு நான் திரும்ப மாட்டேன்...''

விரைவிலேயே செப்டெம்பர் இலைப் பழுப்புக் களை மருத்துவ மனை முகப்பு வெளியில் சுழற்றி யடிக்கத் தொடங்கிற்று. சோர்வூட்டும் இலையுதிர் கால மழை அடிக்கடி பெய்தது. கருண்ட வானம் மழை மேகங்களோடு கூடவே வலசை போகும் பறவைகளின் கூட்டங்களையும் விரட்டியது. இந்தப் பறவைகள் தெற்குநோக்கிப் பறந்தன. புது வாழ்வை எதிர்கொள்ள விரைந்தன அவை. எனவே, அவற்றின் கத்தல்களில் உளமார்ந்த சோ கமும் ஏமாற்றமும் தொனித்தது ஏன் என்பது விளங்கவில்லை.

இந்தப் பறவைக் கத்தல்கள் ஸெர்கேயைப் பகல் முழுதும் விடாது தொடர்ந்தன, இரவில் உறக்கத்தை அமைதியற்றது ஆக்கின. அவன் துயர் நிறைந்த எண்ணங்களுடன் விழித்துக் கொள்வான். அப்புறம் வெகு நேரம் வரை அவ னுக்குத் தூக்கம் வராது. காயங்கள் வலித்தன. கைகள் துலக்கமாக, எதுவுமே நேராதது போல உணர்வில் பட்டன. ஸெர்கேய் விரல்களையும் முழங்கைகளையும் மணிக்கட்டுக்களையும் வளைப் பான், ஒவ்வொரு வளைவையும் தோலின் ஒவ்வொரு மடிப்பையும் உணர்வான். நீண்ட, பயங்கரக் கனவு முடிந்து விடும், இதோ அவன் கைகளை உயர்த்துவான், அவற்றால் முகத்தைத் தடவு வான், வலியால் தெறிக்கும் கன்னப் பொருத்துக் களை அழுத்திக்கொள்வான், விரல்களால் தலை

மயிரைக் கோதி விடுவான் என்று தோன்றும்... கைகள் தலைப் பக்கம் உயர்ந்து எடையின்றி, கண்ணுக்குத் தெரியாமல் விழும், தோட்களில் நெருப்பு தகிப்பது போன்ற எரிச்சல் ஏற்படும். நாரைக் கூட்டத்தின் ஒலியற்ற நீட்டிய கத்தல் இருண்ட கூதிர்கால இரவின் நிசப்தத்தைக் கிழிக்கும், நெஞ்சுக் கூட்டிலிருந்து வெளியே துள்ளிக் குதிக்க ஆயத்தமாய் இருக்கும் இதயத்தைக் கண்ணுக்குப் புலப்படாத அழுத்து கருவிகளால் நசுக்கும்.

''சுதாரித்துக்கொள்!'' என்று கட்டளைத் தொனியில் கிசுகிசுக்கும் உட்குரல். புகலின்மை அக்கணமே பின்வாங்கிவிடும்.

''அங்கவீனனே!'' என்று பென்ஷன் புத்தக வரிகள் கத்தும். ''கிழவிகள் நீர் மல்கும் கண்களுடன் உன்னைப் பார்ப்பார்களே.''

''தேம்பாதே!'' என்று அதே குரல் ஆணையிடும். ஸெர்கேய் இதைக் கேட்டுத் திடுக்கிட்டு, தன் எண்ணங்களின் போக்கை மாற்றிக் கொள்வான்.

## 17

குஸ்னெத்ஸோவ் வார்டுக்குள் வந்து போலி மகிழ்வு பொங்கும் குரலில் சொன்னார்:

''அவ்வளவுதான், ஸெர்கேய்! நாம் பிரியும் நேரம் வந்துவிட்டது. இன்று மருத்துவர் ஆலோசனைக் குழு கூடியது. உன் வேண்டுகோளைக் கருத்தில் கொண்டு, உன்னை வீடு செல்ல அனுமதிக்கலாம் என்று நாங்கள் முடிவு செய்தோம்.''— மருத்துவர் ஸெர்கேயைப் பார்க்காமலே வார்டின் குறுக்கே நடந்து ஜன்னல் அருகே போய், தமது

நிலையை மாற்றிக்கொள்ளாமலே கணீரென்ற குரலில் சொன்னார்: ''உங்கள் இருவருக்கும் வாழ்க்கையின் எல்லா நலங்களும் வீரமும் காதலும் இன்பமும் கிடைக்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.''—அவர் சட்டென்று ஜன்னலிலிருந்து திரும்பி, விரைவாக ஸெர்கேயின் கிட்டே வந்து, அவன் தோளை அணைத்துக் கொண்டார். ''கஷ்டமாய்த்தான் இருக்கும்—எழுது... எழுது, ஸெர்கேய்...''—பின்பு வேகமாக வார்டுக்கு வெளியே போய்விட்டார்.

சாம்பல் நிற வானிலிருந்து குளிர் மழை தூற்றியது. மஞ்சள் பாரித்துவிட்ட மரங்களில் வீசியடித்தது கூதிர்காலக் காற்று. அது இலைகளைப் பறித்து, பளிச்சிடும் ஈரத் தார் ரோட்டில் விசிறிற்று. மருத்துவமனைக்கு உரிய நீல மேலங்கிகளும் அவசரமாகப் போட்டுக்கொண்ட மேல்கோட்டுகளுமாக ஆட்களின் கூட்டம் மருத்துவ மனை அருகே நின்று, தொலைவில் சென்ற இரு மனித உருவங்களை மௌனப் பார்வையால் வழியனுப்பியது.

ஸெர்கேய் கூனிய முதுகும் குனிந்த தலையுமாக லேசாக நொண்டி நடந்தான். சிறு கூடான மெல்லிய மேனியளான தான்யா அவன் அருகாக நடந்தவாறு அவன் முகத்தையே பார்க்க விடாது முயன்று கொண்டிருந்தாள். சாவிலிருந்து மறு உயிர்ப்பு அடைந்து தன் பக்கத்தில் நடப்பது ஸெர்கேயே தானா என்று உறுதிப்படுத்திக் கொள்ள அவள் விரும்புவதுபோல் இருந்தது. திடீரெனக் குப்பென்று வீசிய காற்று அவனுடைய பழுப்புமேல்கோட்டின் வெறுங் கைகளை வன்மத்துடன் படபடக்கச் செய்தது.

தான்யா திரும்பிப் பார்த்துக் கையாட்டி விடை பெற்றுக்கொண்டாள். ஸெர்கேய் நின்று, தன்னை வழியனுப்பியவர்களை நோக்கினன். அவன் கண்களில் துளித்த நீரைக் கண்ட தான்யா, ஜாக்கிரதையாக அவன் தோளைத் தொட்டாள். இருவரும் மேலே நடந்தார்கள்.

''ஆ-மா-ஆ-ம்...'' என்று வழியனுப்பிய கூட்டத்தினரில் ஒருவன் சிந்தனையுடன் நீட்டிச் சொன்னன்: ''வாழ்க்கையை வாழ்வது விளையாட்டு அல்ல...''

# மூன்றும் பாகம்

1

தொனேத்ஸ்க் ரயில் நிலையப் பிளாட்பாரத்தில் முதன்முறை அடி வைத்தபோது அதில் இந்த மாதிரி — பலவீனனாய், ஏலாதவனாய் — ஒருகாலத்தில் நடக்க நேரிடும் என்று ஸெர்கேய் பெத்ரோவ் நினைக்கவே இல்லை, கற்பனைகூடச் செய்யவில்லை.

நிலையத்திலோ, ஒன்றுமே மாறவில்லை. அதே பரபரப்பும் பல்குரல் ஆரவாரமும், அதே கற்படிகளும் தார் பூசிய தரையில் பிணிப்புண்ட மரங்களும், எஞ்சின்களின் உரத்த ஊதல் ஒலிகளும் அறிவிப்பாளரின் குரலும் — எல்லாமே அன்று, கற்பனைக்கு எட்டாத தொலைவில் இருந்த அந்த நாளில் விளங்கியதுபோலவே முதல் பார்வைக்குத் தென்பட்டன. ஆனால் அந்த நாளும் இருந்ததா? விளக்க முடியாத ஏதோ வேதனையுடன் இலைப் பழுப்புக்களைத் தார் பூசிய குளிர்ந்த தரைமேல் இப்போது உதிர்க்கும் இதே மரங்கள்தாமா அன்று பசிய கிளைகளைத் தாழ்த்தி வணக்கம் தெரிவித்து மகிழ்ச்சியுடன் சரசரத்தன? அப்போது ஸெர்கேய் இளம் தேர்ச்சியாளன். இளங் கம்யூனிஸ்டுகள் சங்க நியமனப் பத்திரம் அவனைப் பொறுமையாய் இருக்க விடாமல் தொளைத்துக் கொண்டிருந்தது. அப்போதும் அறிவிப்பாளரின் குரல், தவிர்க்க முடியாதவாறு எதிர் நிற்கும் அபாயத்தைப் பற்றி எச்சரிப்பதுபோல இப்படித்தான் கலவரத்துடன் பேசியதா? வாழ்க்கை முழுவதையும் தொலைதூர நேற்று, பழக்கமற்ற இன்று

என்ற இரு கூறுகளாகப் பிரிக்கும் இந்த எல்லை இல்லாமலா இருந்தது?

முன்பு எத்தனையோ தடவைகள் தோன்றியது போலவே இப்போதும் தான் தூங்குவதாகவும் கனவு காண்பதாகவும் அவனுக்குத் தோன்றியது. ஆட்கள் அவன் பக்கமாக விரைந்து சென்றார்கள். அவனோ அகலத் திறந்த விழிகளுடன் ரயில் நிலையப் படிகளில் நின்றுகொண்டு, இதோ தான்யா வந்து தன்னை எழுப்புவாள், "வேலைக்கு நேரம் தாழ்த்துவிடுவாய்!" என்று கூறி, காலை ஆகாரம் தயாரிப்பதில் பரபரப்புடன் முனைவாள் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

தான்யா கூட்டத்திலிருந்து வெளிவந்து டிக்கட்டுகளை ஆட்டி ஸெர்கேயுக்குச் சைகை செய்தாள்.

"லுகான்ஸ்க்குக்கா?" என்று கேட்டான் அவன்.

"ஆமாம்" என்று பதில் சொல்லிவிட்டு, ஸெர்கேயின் ஒருமுனைப்பட்ட, எதிர்பார்ப்பு நிறைந்த நோக்கைக் கண்டு திகைப்பும் கலவரமும் அடைந்து முகத்தைத் திருப்பிக்கொண்டாள் தான்யா.

"அங்கே... ஒன்றும் இல்லையா?"

"எல்லாம் நம்மிடமே இருக்கின்றன, ஸெர்கேய்..."

"பெட்டி நம்பர் என்ன?"

"பதினொன்று."

"நம் வார்டின் நம்பர் போலவே..."

"டாக்டர் குஸ்னெத்ஸோவ் தாம் இல்லை. நான் அம்மாவுக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். நம்மை எதிர்கொள்வார்கள் ஆட்கள்."

"வீடு தேடப் போகிறோமா?"

"எல்லாம் போகப் போகப் பார்த்துக் கொள்ளலாம்."

ரயில் பெட்டி அறையில் அவர்கள் இருவரும் எதிரெதிரே உட்கார்ந்தார்கள். ஸெர்கேய் தான் யாவைப் பார்த்தவாறு பேசாதிருந்தான். வண்டி புறப்பட்டதும் அவன் மேஜைமேல் மார்பைச் சாய்த்துக்கொண்டு ஜன்னல் வழியே நோக்க லானான்.

வீடுகளும் மரங்களும் பக்கத்தில் ஓடின. கீழே பாம்புகள் போலப் பின்னிக்கொண்டன தண்ட வாளங்கள். அவை கிறுக்குத்தனமாக ரயிலுக்கு அடியில் விழுந்தன, பின்பு எண்ணத்தை மாற்றிக் கொண்டோ அல்லது பயந்துபோயோ விருப் பின்றிச் சக்கரங்களுக்கு அடியிலிருந்து வெளியே ஊர்ந்து வந்து ஒரு பக்கமாக விலகி ஓடின. மழை ஜன்னலில் சுளீரென அடித்து, கோணல் தாரைக ளால் கண்ணாடியை அறுத்து, ஓடைகளாகக் கீழே பெருகியது. வீடுகள் வரவரக் குறைவாகவே தென்படலாயின. முடிவில் வீடுகளையே காணோம். ரயில் வண்டி நகரிலிருந்து வெளியேறிவிட்டது. மரங்கள் அடர்த்தியற்று, குளிரில் விரைக்கும் வரிசைகளாக மிதந்து சென்றன. அவற்றுக்கு அப்பால் காட்சி தந்தது சாம்பல் நிற தொனேத்ஸ்க் ஸ்தெப்பி வெளி.

ரயில் வண்டி வில்லாய் வளைந்து வலப்புறம் திரும்பியதுமே ஸெர்கேய் சுரங்கக் கற்குவியலைக் கண்டான். புகை உமிழும் பிரமாண்டமான கருங் கூம்பு வடிவில், அற்புத மாவீரர்களின் அதிசயக் கூடாரம்போல ஸ்தெப்பி வெளியின் நடுவே நின்றது அது. அதன் சரிவில் சிறு புள்ளிபோன்று ஊர்ந்தது சிறுவண்டி. அவன் தவறு செய்திருக்கவே முடியாது: அது அவனுடைய சுரங்கந்தான்.

''விடை கொடு...'' என்று வாய்க்குள் முனகி விட்டுத் தலையைக் கீழே போட்டான் ஸெர்கேய்.

தண்டவாள இணைப்புக்களில் ரயில் பெட்டி கட்டுக் கடவென்று இடித்துக் கொண்டது. அறை வானொலிப் பெட்டியிலிருந்து குதூகல அணிநடை இசை கரகரப்பாக ஒலித்தது. தான்யா கணவனின் தலைமயிரை அன்புடன் வருடியவாறு உடைந்த குரலில் மறுபடி மறுபடி சொன்னாள்:

''நெஞ்சைத் தேற்றிக்கொள், ஸெர்கேய், தேற்றிக்கொள்... இனிமேல்தான் நம் வாழ்க்கையே தொடங்கப் போகிறது. நீ உயிரோடு இருக்கிறாயே, அதுதான் முக்கியம்...மற்றது எல்லாம் நம் கையில் இருக்கிறது... இன்பம் கூடத் தான்...''

## 2

மனிதர்கள் இரவுகளில் வகை வகையான கனவுகள் காண்பது உண்டு. ஒருவன் தானே கனவைத் தேர்ந்தெடுப்பது இல்லை. நல்ல கனவுகளும் கெட்ட கனவுகளும் தாமே வருகின்றன.

லுகான்ஸ்க்கில் தன் முதல் இரவிலேயே, சுவர்க் கடிகாரத்தின் குழப்பம் நிறைந்த டிக்-டாக் ஒலிகளுக்கு இடையே வீட்டுக் கட்டிலில் படுத்து உறங்குகையில், தன் விபத்துக்குப் பிறகு முதன் முறையாக ஸெர்கேய் கனவு கண்டான்.

தனது வேலைப் பகுதிக்கு குடை வழியில் அவன் நடந்தான். கனத்த நிலக்கரித் துண்டு ஒன்றைக் கைகளில் ஏந்திச் சென்றான். நிலக்கரி உள்ளங்கைகளை வலி எடுக்கும்படி அறுத்தது. கால்களுக்கு அடியில் பிசுபிசுப்பான சேறு நளுக்கிட்டது. வெட்டிடங்களில் ஆங்காங்கு சிதறிக் கிடந்து சிறு வண்டிகளில் ஸெர்கேய் ஓயாமல் இடறி விழுவதும் எழுவதும் மேலே நடப்பதும் மறுபடி விழுவதுமாக இருந்தான். குடைவழியின் அதிர்ந்து

எதிரொலிக்கும் இருளில் குரல்கள் அவன் காதுக்கு எட்டின:

''சீக்கிரம், ஸெர்கேய், சீக்கிரம்! ஆறு மாதங்களாக உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்! கொண்டுவா இங்கே நிலக்கரி! சுரங்கம் முழுவதன் திட்டத்தையும் நீ முறிக்கிறாயே!''

ஸெர்கேய் ஓடுவதற்காகப் பாய்ந்தவன், இருட்டில் கடுமையான ஏதோ ஒன்றில் மோதி மறுபடி விழுந்தான்.

''அவர்களிடம் போக எத்தனை அடிகள் எடுத்து வைக்க வேண்டும் என்று நான் எண்ணவே இல்லையே. எதிலாவது சாய்ந்துகொள்ள வேண்டும்'' என்று தீர்மானித்து, நனைந்த மருத்துவ மனை மேலங்கியைக் கழற்றி எறிந்தான் ஸெர்கேய்.

எங்கிருந்தோ வந்து சேர்ந்தார் யெகோரவிச். அவர் முகம் கண்ணீரால் நனைந்திருந்தது. அவர் கிசுகிசுத்தார்: ''நானும் நீயும் சந்திக்காமலே இருந்துவிட்டோம், ஸெர்கேய்... நீ என்னிடம் வா, நான் காத்திருக்கிறேன். வேற்றாளுக்காக ஏங்கி இப்படிக் கத்த வேண்டாம்... நீ ஆண்பிள்ளை ஆயிற்றே! எழுபது அடிகள் என்பது பிரமாதத் தொலைவு இல்லையே...''

''இவனைத்தான் அங்கே விகாரமாக்கி விட்டார்களே! இனிமேல் இவனாவது சுரங்கத் தொழிலாளனாவது?'' என்று கெக்கலி கொட்டினான் ஒரு சுரங்கத் தொழிலாளி.

ஸெர்கேய் ஏதோ மிக முக்கியமானதை நினைவு படுத்திக் கொள்ளப் படு சிரமப்பட்டு முயன்றான், ஆனால் அது நினைவுக்கு வரவில்லை.

''நான் மற்றவர்கள் எல்லாரையும் போல இல்லை. என்னிடம் எது குறைவு?'' என்று சிந்தித்தான் ஸெர்கேய்.

குப்புறக் கவிழ்ந்த வண்டியின் பின்னிருந்து வெளி வந்தான் இளங் கம்யூனிஸ்டுகள் சங்க வட்டாரக் கமிட்டிச் செயலாளன் கிராமரேன்கோ.

''இளங் கம்யூனிஸ்ட் என்ற பட்டத்தை உன்னிடமிருந்து பறித்துக்கொள்கிறேன்! குடியிருப்பில் மரங்கள் நடும் திட்டத்தை நீ இடை முறித்தாய். இளங் கம்யூனிஸ்டுகள் வேலைக் குழு அமைக்க வேண்டும் என்று கத்தினாய், ஆனால் அது அமைக்கப் பட்ட போது நீ எங்கிருந்தாய்? மூன்றாவது கிழக்குப் பகுதி ஆட்களை நீ காப்பாற்றினாய் என்பது ஒரு காரணம் ஆகி விடாது! உன் இடத்தில் ஒவ்வொருவனும் அப்படியே செய்திருப்பான்!''

''இவன் நம்மிடமே திரும்பி வருவான். இவனுக்கு வீடேது வாசலேது!'' என்று கத்தினான் கொஞ்சரோவ்.

''இவன் இப்படிப்பட்டவன்தான், ஆனாலும் மனிதன் ஆயிற்றே...'' என்ற குரல் இருட்டிலிருந்து மெல்லக் கேட்டது.

''இளங் கம்யூனிஸ்டுகள் சங்க உறுப்பினர் சீட்டைப் பிடுங்கிவிடவும்!'' என்று உத்தரவிட்டான் செயலாளன்.

''இவன் முகத்தில் அறை!'' என்று கெக்கலித்தான் மமேதொவ்.

''உறுப்பினர் சீட்டு!'' என்று திரும்பச் சொன்னான் கிராமரேன்கோ.

''கிட்டே வராதீர்கள், கொன்றுவிடுவேன்!'' என்று வீரிட்டுக் கத்திய ஸெர்கேய் விழித்துக் கொண்டான்.

இருண்ட கூதிர்கால இரவு அவனை நிசப்தத்தால் மூடிப் போர்த்தது.

''டிக்-டாக்,'' ''டிக்-டாக்'' என்று நிசப்தத்தைக் குலைத்தது சுவர்க் கடிகாரம்.

கிராமச் சிள்வண்டு போலவே "ட்ர்ர்-டர்ர்" என்று ஒலித்தது மின் அளவுமானி.

"நான் எங்கே இருக்கிறேன்?" என்று திட்ட வட்டமாகப் புரிந்து கொள்ள முயன்றான் ஸெர்கேய். தலைக்கு நாளும் அதற்கு முந்திய பல மாத நிகழ்ச்சிகளும் சட்டென்று நினைவுக்கு வரவே அவன் குன்றிக் குறுகினான். "சீக்கிரம் உறங்க வேண்டும்!" என்று தனக்குத் தானே உத்தரவு இட்டுக்கொண்டான் ஸெர்கேய். சற்று முன் கண்ட கனவு அவன் நினைவுக்கு வந்தது. உறங்கும் விருப்பமே போய்விட்டது. தான் ரயில் பெட்டியிலிருந்து அன்று பகலில் கண்ட சுரங்கக் கற்குவியல் அவன் கண்களுக்குமுன் தோற்றம் அளித்தது. அதன்மீது புகை கவிந்தது, பார்த்துக்கொண்டிருக்கும்போதே அது மறைந்துவிட்டது. அதன் இடத்தில் சிகரெட் புகை நிறைந்த அலுவல் அறை ஆரவாரித்துச் சிரித்தது. ஹும்மென்று இரையும் சுரங்க வாயிலை நோக்கிக் காரியரீதியாகப் பேசிக் கொண்டு நடந்தார்கள் சுரங்கத் தொழிலாளர் உடை அணிந்த இளைஞர்கள். சுரங்க வாயிலை அடுத்த திறப்பு வெளி சிரிப்பொலியால் கிணுகிணுத்தது. குடை வழியில் சீழ்க்கை அடித்தது விசுவாகப் பாயும் காற்று. கன்வேயர்களில் நிலக்கரி சரசரத்தது. பின்பு குதூகலமாகப் பளிச்சிட்டவாறு சிறு வண்டிகளில் விழுந்தது...

செப்டெம்பர் இரவு நிலக்கரி மணம் வீசியது. முறைவேலை முடிந்த பின் இழுக்கும் சிகரெட்டுப் புகையின் இனிமை தலையைக் கிறுங்க வைத்தது. சுரங்கக் கூண்டு ஐநூறு மீட்டர் ஆழத்தில் விரைவாக இறங்கியதால் நெஞ்சில் கிச்சுக்கிச்சு மூட்டியது. நேயர்களின் கட்டைக் குரல்கள் இரவில் ஒலித்தன. திடீரென்று எல்லாம் மறைந்து விட்

டன. ''கைகள்...'' என்று துயரத்துடன் தீனமாக டிக்-டாக் ஒலி செய்தது சுவர்க் கடிகாரம். ரயில் பெட்டியின் ஜன்னல் முன்பாக மிதந்து சென்றது சுரங்கக் கற்குவியல். இடையருத வலியால் இருதயம் பிளந்தது.

தன் நினைவிலிருந்து தனக்கு மதிப்புள்ளவையாக விளங்கிய எல்லாவற்றையும் ஏதோ ஒரு சக்தி இரக்கமின்றிப் பிய்த்து அகற்றியதையும், முரட்டுத்தனமான தயா தாட்சிண்ணியம் அற்ற கையால் உயிருள்ள இதயத்தில் கடக்க முடியாத ஒரு சுவர் எழுப்பி, அந்தக் காலத்தில் இருந்தவற்றை எல்லாம் இப்போது இருப்பதிலிருந்து வேலியிட்டுப் பிரித்துவிட்டதையும் ஸெர்கேய் அனேகமாக உடலால் உணர்ந்தான்.

வலியைப் போக்கவோ கொஞ்சமாவது குறைக்கவோ கூடிய வழியை ஸெர்கேய் தேடினுன், ஆனுல் காணவில்லை. அன்பற்ற வேற்று இரவு கலகக் குழப்பம் விளைப்பதுபோல உள்ளத்தில் கவிந்து, ஏற்கனவே கருண்டிருந்த வண்ணங்களை மேலும் ஆழ்ந்த கறுப்பு ஆக்கியது. ''எப்படி வாழ்வது?'' என்ற அதே கேள்வி மீண்டும் எழுந்தது.

அண்டையில், ஸெர்கேயின் தோள்மேல் தலையைச் சாய்த்துப் படுத்திருந்தாள் தான்யா. ''உன் மனத்திலும் துன்பக் கனவுகளே நிறைந்திருக்கின்றன, தான்யாக் கண்ணே'' என்று எண்ணிக் கொண்டான் ஸெர்கேய்.

தான்யாவின் குழந்தைப் பருவம் கழிந்த வீட்டு முகப்பு வெளியில் தாங்கள் இருவரும் அன்று பகலில் நடந்தது அவனுக்கு நினைவு வந்தது. சுற்றிலும் ஆவலுடன் நின்றிருந்தார்கள் அண்டை அயலார். அவர்கள் கண்கள் அகல விரிந்தன. சிலர் அழுதார்கள். ஸெர்கேயும் தான்யாவும் அக்கம்

பக்கமாக நடந்தார்கள். தான் இந்த மனிதர்களுக்கு ஏதோ தீங்கு இழைத்துவிட்டவன்போலத் தாழக் குனிந்த தலையுடன் நடந்தான் ஸெர்கேய். தான்யாவோ பெருமிதம் ததும்ப நிமிர்ந்த முகத்துடன் முறுவலித்தாள்.

''ஆ, இதுதான் நம் வீடு!.. இதோ வந்து விட்டோம்!'' என்று குதூகலமாகத் திரும்பத் திரும்பக் கூறினாள்.

வாயில் வழியிலிருந்து வள்ளெனக் குலைத்தது ஒரு நாய். பின்பு மன்னிப்பு கேட்பது போல, முறையிடும் தோரணையில் நீட்டி முனகியது. யாரோ ஒரு பெண்பிள்ளை தான்யாவிடம் ஓடிவந்து இரண்டு கன்னங்களிலும் ஆவேசத்துடன் முத்தமிட்டாள்.

''ஆண்டவன் உங்களுக்கு இன்பம் அருளட்டும்!''

''யார் இவள்?'' என்று அறைக்குள் புகுந்ததும் கேட்டான் ஸெர்கேய்.

''இவள் மேல் கோபித்துக் கொள்ளாதே, ஸெர்கேய். இவள் செய்தது இரக்கத்தினால் அல்ல, வெறுமே தான். இவள் நல்ல மனுஷி, அவ்வளவு தான்... தேம்பினார்களே, அவர்களையும் பொருட்படுத்தாதே. அவர்கள் தேம்பியது பயத்தினால்... தங்களுக்காக...''

ஸெர்கேய் தான்யாவின் பக்கம் திரும்பி, அவளுடைய மென்மையும் கதகதப்பும் கொண்ட கேசத்தில் உதடுகளை அழுத்தினான். ''என் ஆருயிரே, என் அன்பே! எனக்காக நீ பட நேர்ந்த துன்பங்களுக்கு, என் வேதனையைவிடக் குறையாத வேதனையை நீ அனுபவித்து வருவதற்கு, என்ன கைம்மாறு செய்வேன்? நீ உன் மெல்லிய தோட்களில்

சுமத்திக் கொண்டிருக்கும் பாரத்தைத் தாங்க உனக்கு எவ்விதத்தில் உதவுவேன்? நீ ஆழ்ந்து யோசிக்காமல் என்னைத் தொடர்ந்து வரக் குதி போட்டுக்கொண்டு கிளம்பி இருக்கிறாயே, மனிதத் தன்மையற்ற இந்தக் கடினமான பாதையில் எவ்வகையில் நான் உனக்கு ஆதரவு அளிப்பேன்? உன்னுடைய எல்லையற்ற, தன்னை மறந்த தூய காதல் இல்லாவிட்டால் நான் என்னதான் செய்திருப்பேன், எப்படித்தான் உயிரோடிருப்பேன்?''

அடுத்த நாள், மருத்துவ மனையை விட்ட பின் முதல் நாள் ஸெர்கேயுக்குப் புதியது எதையும் கொண்டு தரவில்லை, இரவின் துயர் நிறைந்த சிந்தனைகளை அகற்றவில்லை. தான்யா வீட்டுக் காரியங்களில் முனைந்தவாறு அவனைக் குதூகலப் படுத்தவும் ஏக்கம் நிறைந்த எண்ணங்களிலிருந்து அவன் கவனத்தைத் திருப்பவும் முயன்றாள். கஷ்ட காலம் எல்லாம் பழங்கதை ஆகிவிட்டது, புது வாழ்வு தொடங்கிவிட்டது, துயரத்துக்கு முடி பணியாமல் புது முறையில் வாழ வேண்டும் என்று தன் தோற்றம் அனைத்தாலும் காட்டிக் கொண்டாள்.

உள்ளத்தின் அடியாழத்தில் ஸெர்கேய் அவளோடு இசைந்தான்: ''ஆம், அப்படித்தான் வாழ வேண்டும்! தன் விதியை எண்ணி இடைவிடாமல் மறுகுவதில் பயன் என்ன?'' ஆயினும் அதே பிரச்சினைகள் ஓயாமல் அவனை உலப்பின: என்ன செய்வது? எப்படி வாழ்வது? இப்படியே வேலை வெட்டி இல்லாமல் நாளைக்கும் பின்பும் எப்போதும் இருக்க வேண்டுமா என்ன?.. இந்த எண்ணங்கள் அவனை நிம்மதியாய் இருக்க விடவில்லை. அறையில் இருந்த சாமான்கள்மீது கண்ணோட்டினான்.

அவை பாங்கற்றவையாகவும் அவனது அன்றாடப் பயன்பாட்டுக்கு எவ்வித மதிப்பும் அற்றவையாக வும் தோன்றின.

அலமாரியில் புத்தகங்கள் இருந்தன. கசங்கிய, பழைய நூல்கள், தான்யாவின் பாடப்புத்தகங் கள். அவற்றின் நிறம் மங்கிய அடிப்பகுதிகள்மீது விரைவாகப் பார்வை செலுத்தினான் ஸெர்கேய். முதல் தட்டில் ''பௌதிகம்,'' ''இயற்கணிதம்'' ''சுகாதாரக் குழுக்களின் தயாரிப்புக்கான பாடப் புத்தகம்''... இரண்டாம் தட்டில் ஒரு புத்தகத்தின் கருஞ்சிவப்பு அட்டை அவனுக்குப் பழக்கமான தாகத் தோன்றியது. மிகமிகச் சமீபத்தில் எங்கோ அதை அவன் கண்டிருந்தான். ஆனால் எங்கே? ஸெர்கேயுக்கு நினைவு வரவில்லை.

அலமாரிக்கு முன் நின்று, ''இதை எப்படி எடுப் பது?'' என்று சிந்தித்தான். ''வாயால்!'' என்ற எண்ணம் உதித்தது. முழந்தாள் படியிட்டு உதடு களைப் புத்தகத்தின் பக்கம் நீட்டினான். தூரத்தைச் சரியாகக் கணக்கிடாமல் சட்டென்று முன்னே குனிந்தவன் நிலை தவறி அலமாரியில் விண்ணென்று நெற்றியை இடித்துக் கொண்டான். எழுந்து நிற்க முயன்றான், ஆனால் நிர்க்கதியாகத் தரையில் விழுந்தான். எங்கிருந்தோ தோன்றிய முரட்டுத் தனமான வன்மம் தன்னை ஆட்டி அலைப்பதை உணர்ந்து, ''அமைதியாயிரு, அமைதியாயிரு!'' என்று தன்னையே தேற்றிக்கொண்டான். நெஞ்சில் குமுறிப் பொங்கிய ஆத்திரத்திற்குப் போக்கு விடுவதற்காகவாவது உலகமெல்லாம் கேட்கும் படி வெறிக் கூச்சல் போட வேண்டும்போல் இருந் தது. அடிபட்ட நெற்றியைப் பலகைகளோடு சேர்த்து அழுத்தியவாறு, ''அமைதியாயிரு! இப் படி ஆத்திரப்பட்டால் காரியம் ஈடேறாது!''

என்று தனக்குத் தானே கிசுகிசுத்துக் கொண்டான் ஸெர்கேய்.

மெதுவாகத் தரையிலிருந்து எழுந்து அவன் அறையில் சற்று நேரம் நடந்தான். ''எப்படியும் எடுக்க முடியத்தான் செய்யும்'' என்று கருஞ் சிவப்பு அட்டையைப் பிடிவாதத்துடன் நோக்கினான்.

தொடங்கிய வேலையை எரிச்சலுடனும் அவசரத்துடனும் மறுபடி செய்ய முற்பட்டான் ஸெர்கேய். புத்தகமோ, ஏதோ மந்திரம் போட்டது போல அவன் வாயில் அகப்படாமல் நழுவிச் சென்று ஆழத்தில் மறைந்துகொண்டது.

''மேலிருந்து, பற்களால்!'' என்று தீர்மானித்து அலமாரியில் மூக்கை வைத்து அழுத்திக் கொண்டான் ஸெர்கேய். ''சனியன்! எல்லாமே எனக்கு எதிராக இருக்கின்றன, என் சொந்த மூக்குகூட!''

''அட அசட்டுக் கண்ணே!'' என்று பின்னிருந்து தான்யாவின் குரல் கேட்டது. ''என்னைக் கூப்பிடுவது உனக்குக் கஷ்டமா என்ன? இனி இந்த மாதிரிச் செய்யாதே, ஸெர்கேய், நான் கோபித்துக்கொள்வேன்!''

ஸெர்கேய் குழப்பமடைந்தான். ''நானே எடுக்கலாம் என்று பார்த்தேன். எப்படியாவது பழகிக் கொள்ள வேண்டும் அல்லவா?..''

தான்யா ஸெர்கேயை உற்றுப் பார்த்தாள். கலக்கமும் ஏக்கமும் ததும்பிய அவன் முகத்தைக் கண்டதும் அவள் புன்னகை செய்து இசைவு தெரிவிக்கும் வகையில் தலையை ஆட்டினாள்.

புத்தகத்தை மேஜை மேல் வைத்து, ''இது யெகோரவிச்சின் பரிசு'' என்றாள்.

கருஞ்சிவப்பு அட்டையைத் திறந்தாள். முகப்புப் பக்கத்தில் ஸெர்கேய் படித்தான்:

**"இ. யெ. லாரினுக்கு. சகோதரர்போன்ற நண்பருக்கு.**
**பிறந்த நாள் அன்று.**
**நொரீல்ஸ்க் பிரதேசம். 1949, ஜனவரி 17."**

அதன் கீழ் அழியாத பென்சிலால் பின்வருமாறு எழுதியிருந்தது:

**"அன்புள்ள தான்யாவுக்கும் ஸெர்கேயுக்கும்.**
**நீண்ட நல் நினைவாக.**
**1960, செப்டெம்பர் 14."**

அதன் கீழ் கொட்டை எழுத்துக்களில் அச்சடித் திருந்தது:

**ஸ்பர்த்தாக்**

ஸெர்கேய் எதையோ நினைவுபடுத்திக்கொள்ள முயன்றவாறு, "பொறு, பொறு! பதினாலாம் தேதி... எந்த நாள் இது?" என்றான்.

"ஆமாம், ஸெர்கேய், பதினைந்தாம் தேதி அவர் காலமாகிவிட்டார்... குஸ்னெத்ஸோவ் தாம் இதைக் கொடுத்தார்..."

"அவருடைய நோய் என்ன என்பது உனக்கு அப்போதே தெரியுமா?"

"தெரியும். குஸ்னெத்ஸோவும் நானும் உன்னைச் சஞ்சலப்படுத்த வேண்டாம் என்று நினைத்தோம். எங்களுக்குப் பயம்—நீ மறுபடியும்... எங்கேயாவது முன்பு செய்தது போல... மருந்து சாப்பிட மாட்டேன் என்றுவிடுவாயோ என்று. உன்னைத் தன் வார்டுக்கு வர விட வேண்டாம் என்று யெகோரவிச்சே கேட்டுக் கொண்டார். சாவு நெருங்கிவிட்டதை அவர் அறிந்திருந்தார்..."

''இன்னும் எத்தனை காலம் பாக்கி என்று தெரிந்துகொண்டு உயிர் வாழ்வது கஷ்டம்தான்... ஆனால் யார் கண்டது எது அதிகக் கடினம்—திடீரென்று மரிப்பதா அல்லது கொஞ்சங்கொஞ்சமாகவா—என்று...''

''என்ன சொல்கிறாய் நீ?''

''எனக்கே தெரியவில்லை. பைத்தியக்காரத்தனமான எண்ணங்கள் மூளையில் உதிக்கின்றன.''

''நீ அவற்றை அண்டவிடாமல் விரட்டிவிடு. அவற்றுக்கு இடம் கொடுக்காதே.''

''வேலை வேண்டும். அப்போது கண்ட கண்ட சப்புச்சவறுகள் எல்லாம் மூளையில்அடைவது நின்று விடும். வீண் மனச்சோர்வுக்கு ஆளாகக் கூடாது என்பது எனக்கே தெரியாது என்றா நினைக்கிறாய்?.. ஆனால் இது லேசல்ல, தான்யா! காயங்கள் வலித்துக் கொண்டிருந்த போது தாங்குவது இன்னும் லேசாய் இருந்தது. மருந்துப் பொடிகளும் மோர்ஃபியாவும் வலி தெரியாமல் அடித்தன. இப்போதோ? காலையில் வேலைக்கு அழைக்கும் சங்குகள் எப்படி ஊதுகின்றன, கேட்டாயா? அவை என் உள்ளத்தை அறுக்கின்றன. மனிதர்கள் வேலைக்குப் போகிறார்கள், அவசரப்படுகிறார்கள், பரபரக்கிறார்கள், ஆனால் நானோ, சோம்பேறி மாடன் போலக் கிடக்கிறேன்... எவர் கண்ணிலும் விழிக்கவே வெட்கமாய் இருக்கிறது...''

''வீண் கற்பனை செய்துகொள்ளாதே, தயவு செய்து! கடைத்தெருவிலா கைகளை இழந்தாய்?..''

''இதனால் இப்போதைய நிலைமை லேசாகி விடவில்லையே. இருபத்தைந்தே வயதில் எல்லாம் ஓய்ந்துவிட்டது... எதற்கும் உதவாதவன் ஆகிவிட்டேன். உண்மையிலேயே எதற்கும் உதவ மாட்டேனா? ஊம், தான்யா? உறங்குவதும் உண்பதும்,

அது கூட உன் உதவியால், இவ்வளவுதானு என் வாழ்க்கை?''

''ஏதாவது வழி கண்டுபிடிப்போம், ஸெர்கேய். நீயே பார்ப்பாய்!''

தான்யா அவனேடு ஒண்டிக்கொண்டாள். ஏதேனும் மிக முக்கியமானதைச் சொல்ல அவளுக்கு ஆசை உண்டாயிற்று. கலக்கமெல்லாம் ஒரு நொடியில் தெளிந்துவிடும்படி ஏதேனும் வழி காண விரும்பினுள். ஆனுல் என்ன செய்வது என்பது அவளுக்கும்தானே தெரியவில்லை. அவள் நம்ப மட்டுமே செய்தாள், கொஞ்சமும் தயக்கமின்றி நம்பினுள்.

ஸெர்கேயின் புது வாழ்வு இந்த விதமாகத் தொடங்கியது. காலம் உறைந்துவிட்டதுபோலவும் இயங்குவதை நிறுத்திவிட்டது போலவும் சில வேளைகளில் அவனுக்குத் தோன்றும். காலத்தின் இந்த இயக்கமின்மைத் தோற்றம் உண்மையானதே போலச் சில சமயங்களில் ஸெர்கேயைச் சஞ்சலப்படுத்தவும் வதைக்கவுங்கூடத் தொடங்கிவிடும். தான் மரணக் காயம் அடைந்திருப்பதாக அப்போது அவன் எண்ணிக்கொள்வான். வலி அல்ல அவனைத் துன்புறுத்தியது. தனக்குக் காலம் நின்றுவிட்டது, விழுந்த தன்னை மறந்துவிட்டுத் தோழர்கள் முன்னே செல்கிருர்கள், அடுத்துவரும் போராட்டத்துக்குத் தான் கவைக்குதவாதவன் என்பதை இதன்மூலம் அவர்கள் உறுதிப்படுத்துகிருர்கள் என்ற உணர்வே அவனை வாட்டி எடுத்தது.

இரண்டாவது உலகப் போரில் கலந்துகொண்ட படைவீரன் ஒருவன் சொன்ன கதை அவனுக்கு ஒரு சமயம் நினைவுக்கு வந்தது. ஒரு சண்டையின்

போது இந்தப் படைவீரன் கொடியைத் தூக்கிப் பிடித்தவாறு முன்னே சென்ருளும். அப்போது பகைவரின் குண்டு தாக்கவே படுகாயம் அடைந்தாளும். கொடியை வேறு ஒருவன் அவனிடமிருந்து எடுத்துக் கொண்டாளும். சில நிமிடங்களுக்கெல்லாம் அந்தக் கொடி, இராணுவ பாஷையில் சொன்ஞல், ''ஆதிக்க உச்சத்தில்'' எங்கும் நன்ருய்த் தெரியும் இடத்தில் வீசிப் பறந்ததாம். அங்கே படை வீரர்கள் ''ஹுர்ரா!'' என்று ஆர்ப்பரித்து வெற்றி முழங்கிஞர்களாம். தானியங்கித் துப்பாக்கிகளை வெடித்து இராணுவ மரியாதை செய்தார்களாம். அவஞே, பாவம், படைவீரனின் விதியை எண்ணி வருத்தம் பொங்க, இரத்தக் கண்ணீரை விழுங்கியவாறு பனித்துளி படிந்த புல்லிலே கிடந்தாளும்.

ஸெர்கேய் யுத்தத்தைப் பார்க்கவில்லை. ஆயினும் அந்தப் படைவீரனின் உணர்ச்சிகளை உயிர், உடல், உள்ளத்தால் முழுமையாகப் புரிந்து கொண்டான்.

அக்டோபர் மாத நடுவில், நகரின் மையத்தின் அருகாமையில் ஒரு சிறு அறையை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு ஸெர்கேயும் தான்யாவும் அதில் குடி புகுந்தார்கள். இங்கே ஸெர்கேயுக்கு விட்டாற்றியாக இருந்தது. தான் யாருக்கோ இடமுடை ஏற்படுத்துவதாகவும், இடைஞ்சல் செய்வதாகவும் நெடுங்காலமாக நடப்பிலிருந்த ஒழுங்கு முறைகளையும் பழக்கங்களையும் முறிப்பதாகவும் அவனுக்குத் தோன்றிக்கொண்டிருந்த சங்கட உணர்வு அகன்றுவிட்டது. புது வீட்டில் தான்யாவும் மாறிவிட்டாள். அவளுக்கும் அதிக விட்டாற்றியாக இருந்தது. புது இடத்தில் அதிக

விட்டாற்றியாக இருப்பது ஏன் என்பதைப் போகும்போது தாயாருக்குக் கூட விளக்க அவளால் முடியவில்லை. பல விஷயங்களைத் தாயாருக்குக் கூட விளக்குவது கடினம் அல்லவா!

ஆரம்ப நாட்களிலிருந்தே அறையில் புத்தகங்கள் ஒன்றன் பின் ஒன்ருகத் தென்படலாயின. தான்யா அவற்றை ஸெர்கேயுக்குத் தெரியாமல் கொண்டுவந்து, ஜன்னல் குறட்டின்மேலும் மேஜை மீதும் அவன் வாயிஞல் கவ்வி எடுக்க வாக்காக வைத்தாள். புத்தகங்கள் படிக்கும்படி அவள் அவனிடம் சொல்லவில்லை. வேண்டுதலும் நினைவு படுத்தலும் இல்லாமலே ஸெர்கேய் தாஞகவே புத்தகங்களைப் படிப்பான் என்று அவள் நம்பிஞள்.

''நம் வீட்டில் இத்தனை புத்தகங்கள் எங்கிருந்து வந்தன?'' என்று ஒரு முறை ஸெர்கேய் அவளிடம் கேட்டான்.

''எங்கிருந்தாவது?'' என்று ஆச்சரியப்படுபவள் போல நடித்தாள் தான்யா. ''நூலகத்திலும் கடையிலுமிருந்துதான்... உனக்கு இவை பிடிக்கவில்லையோ?''

''எனக்குப் புத்தகங்கள்மேல் ஒரே மோகம். ஒரு காலத்தில் அவை இல்லாமல் ஒரு நாள் கூட என்ஞல் இருக்க முடியாதிருந்தது.''

''இவற்றையும் படித்தாயா?''

''இல்லை, எல்லாவற்றையும் இல்லை.''

இந்த உரையாடலுக்கு மறு நாள் ஸெர்கேய் மேஜை அருகே வசதியாக அமர்ந்து, மோவாயால் புத்தகத்தைத் தன் பக்கம் நகர்த்தி, உதடுகளால் திறந்து படிக்கத் தொடங்கிஞன். தான்யா அறையிலிருந்து வெளியே போய், மூச்சுக்கூடக் காட்டாமல், ஓசைப்படுத்தாமல் இருக்க முயன்றவாறு அடுப்புக் காரியங்களில் முனைந்தாள்.

முதல் புத்தகம் படித்து முடித்ததும் படிப்பில் ஸெர்கேயுக்கு முன்பு இருந்த ஆர்வம் திரும்பத் தொடங்கியது. தான் அறியாமலே அவன் காலை முதல் மாலைவரை விடாது படிப்பான், நாள் முடிவில் நேரம் விரைவாகக் கழிவதை எண்ணி வியப்பான். தனக்கு நேர்ந்த விபத்தையும் தான் எதற்கும் ஏலாத அங்கவீனன் என்பதையும் பற்றிய எண்ணங்கள் அரிதாகவே அவனுக்குத் தோன்றலாயின. இப்போது அவன் உணர்வுபூர்வமாக அவற்றை மனத்திலிருந்து விரட்டினுன், புத்தகத்தால் அவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொண்டான். அவற்றுக்கு உள்ளத்தில் இடமோ, அவற்றைப் பகுத்தாய்வதற்கு நேரமோ தராமல் எச்சரிப்பாய் இருந்தான்.

தன் உரிமையை நிலைநாட்டும் முயற்சியின் முதற்படியாக விளங்கியது இது. குறிக்கோளாகத் திகழ்ந்தது இது. குறிக்கோள் சிறியதுதான், மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்னும் தேவையை நிறைவேற்றக் கூடியது அல்லதான், என்றுலும் வாழ்க்கையின் கடினமான பகுதியைக் கடப்பதற்கு, ஆன்மிக நெருக்கடியைத் தீர்த்து முன்னேறுவதற்கு, நரம்புச் சக்தியையும் ஆற்றலையும் தன்மீதே பரிதாபப்படுவதில் வெட்டியாகச் செலவிடாமல் இருப்பதற்கு இது உதவியது.

ஸெர்கேயுக்கு இப்போதெல்லாம் நேரமே போதுவதில்லை. அடிக்கடி அவன், தன் கருத்தைக் கவர்ந்த புத்தகத்தை விட்டுப் பிரிய மனமில்லாமல் இரவு வெகு நேரம் வரை உட்கார்ந்து படிப்பான்.

தான்யா நடு இரவில் விழித்துக் கொண்டு, ''படுத்துத் தூங்கு, ஸெர்கேய்'' என்பாள்.

''இதோ, இதோ, தான்யாக் கண்ணே! துளி

தான் பாக்கி இருக்கிறது!'' என்று படிப்பை நிறுத்தாமலே சட்டென்று பதில் சொல்வான் ஸெர்கேய்.

கடைசிப் பக்கத்தைப் படித்து முடித்ததும் அன்றைக்கு மேற்கொண்ட திட்டம் நிறைவேறிற்று என்று அறிவிப்பவன் போல அவன் திருப்தியுடன் படுத்துக்கொள்வான். படித்ததைப்பற்றிச் சிந்தனை செய்தவாறே உறங்கிப் போவான்.

புத்தகங்களைத் தொடர்ந்து தினத்தாள்கள், சஞ்சிகைகளின் புதிய இதழ்களும் ஸெர்கேயின் பார்வையில் படலாயின. ஏராளமான புகைப்படங்களும் உரத்த செய்தித் தலைப்புக்களும் அமைதி நிறைந்த அந்த அறையை வாழ்க்கையின் நிம்மதியற்ற ஆரவாரத்தால் நிரப்பின. சஞ்சிகைகளிலும் செய்தித்தாள்களிலும் எழுதியிருந்தவை தனக்கு அனேகமாக அறிமுகமற்ற தொலைதூர கிரகத்திலிருந்து வந்தவை போல விளங்காவியப்புடன் படிப்பான் ஸெர்கேய்.

உலகிலும் நாட்டிலும் நிகழ்ந்தவை எல்லாம், மனிதக் கரங்களின் செய்கைகள் அனைத்தும், அவனுக்குத் தெரிந்தவையாகவும் உவப்பானவையாகவும் இருந்தன. அவை அவனுக்குக் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் ஊட்டின. ஆனாலும் மறு புறம், கடக்க முடியாத சுவற்றால் அவனிடமிருந்து வேறு பிரிக்கப்பட்டிருந்தன அவை. இப்போது செய்யப்படுபவை, இனிமேல் செய்யப்படப்போகிறவை எல்லாவற்றிலும் அவன் நேரில் பங்கு கொள்பவன் அல்ல, ஒன்றுக்கும் ஏலாத, யாருக்கும் தேவையற்ற பார்வையாளன் மட்டுமே என்ற உறுத்தும் உணர்வு அவன் உள்ளத்துக்கு எரிச்சல் ஊட்டியது. இந்த உணர்வால் அவன் நெஞ்சு விழுந்து போயிற்று.

உழைப்பில் தான் கழித்த நாட்களை அவன் நினைவுகூர்ந்தான். அவற்றில் மிகக் கடினமானவை, களைத்துச் சோர வைத்தவை, வியர்வையால் உப்புக் கரித்தவை, உள்ளங்கைகளில் இரத்தம் கசியும் காய்ப்புக்கள் ஏற்படுத்தியவைகூட சொர்க்க போகம் போன்று காட்சி அளித்தன. இப்போது அவற்றை எட்டுவது சூரியனைப் பிடிப்பதுபோலவே, கனவில்கூட முடியாத காரியமாய்த் தோன்றியது. நினைவாற்றல் ஒன்றுதான் ஸெர்கேயின் கூட்டாளியாக முன்வந்து அந்தக் காலத்துக் காட்சிகளை மீண்டும் கண்முன்னே காட்டியது. அவனும், பழைய நினைவுகளிலேயே முழுமையாக ஆழ்ந்து, அவற்றில் எதிர்பாரா விதமாக ஆறுதல் பெற்றான். இந்த ஆறுதலில் இன்றையக் கைப்பு மணம் வீசத்தான் செய்தது என்றாலும் கடந்து போய்விட்ட, இப்பொழுதுதான் முழுமையாகப் புரிந்துகொள்ளப்பட்ட இன்பத்தின் வெப்பத்தால் இதயத்துக்கு அது கதகதப்பு ஊட்டியது.

சுரங்கத்தில் தான் வேலை செய்த முதல் நாள் ஸெர்கேயுக்குக் கண்ணெதிரே நடப்பது போல நினைவுக்கு வந்தது. தரைக்கு அடியில் முதன் முதலாகச் செய்த, நரகவாதனை போன்று கடினமான வேலையைச் செய்யும் வாய்ப்பையும் உரிமையையும் பெற அவன் எதையும் வழங்கியிருப்பான்.

ஸெர்கேய் பெத்ரோவ் அப்போது கல்லூரியில் முதல் ஆண்டு மாணவன். உற்பத்திச் செயல்முறைப் பயிற்சிக்காகச் சுரங்கத்துக்கு வந்திருந்தான். ''வெட்டு முகப்பில், நிலக்கரி வெட்டி எடுக்கும் இடத்தில் வேலை செய்ய விரும்புகிறேன்'' என்றான்.

அனுபவமுள்ள சுரங்கத் தொழிலாளர்கள் கேலிச் சிரிப்புடன் தலை அசைத்தார்கள். வெட்டு

முகப்பு விரிவுரைக் கூடம் அல்ல. அங்கே முக்கிய மானது ''நிறைய அள்ளு, தொலேவில் எறி...'' என்பதாகும்.

''கூட்டிப்போங்கள், சளேக்க மாட்டேன்'' என்று கெஞ்சினுன் மாணவன்.

தான் விரும்பியதை அவன் சாதித்துக்கொண்டான். அவன் விரும்பியதோ சுரங்கத் தொழிலாளனின் பிழைப்பு எப்படிப்பட்டது என்று உடனே அறிந்துகொள்வது. கடினமானதாம், சொல்லுகிருர்கள். அதனுல் என்ன? அவனுந்தான் எளிய வழிகளேத் தேடவில்லேயே! அவன் சக்திக்கு உட்பட்டதாக மட்டும் இருந்தால் போதும். மாணவர் விடுதிச் சாப்பாட்டால் இளேத்துப்போன உடல் கைவிட்டுவிடாமலிருந்தால் மட்டும் போதும்.

''அன்றைய தினம் இதெல்லாம் எப்படி இருந்தது?''—ஸெர்கேய் அறை நடுவில் சற்று நின்ருன்.

இரண்டு கிராதிச் சட்டங்கள். அவற்றுக்கு எதிரே வெட்டு இயந்திரத்தால் வெட்டித் தள்ளப்பட்டுப் பொறி சிதறிக்கொண்டிருந்த, ஒரு மூன்று மீட்டர் நீளமுள்ள நிலக்கரிப் படிவு. கொந்தாலியால் அதை உடைத்து சட்டங்களுக்கு அப்பால் அள்ளிப் போட வேண்டும். ஓயாப்பசி கொண்ட சுரண்டு கருவி அந்தச் சட்டங்கள் வழியே சென்றது. நிலக்கரி எடுக்கப்பட்டதால் ஏற்படும் வெற்று இடத்தில் மரத் தாங்கு தூண்களே முட்டுக்கொடுத்து வலுப்படுத்த வேண்டும்.

இந்த எல்லாக் காரியங்களும் விரைவாக, கண்டிப்பான வரிசைக் கிரமத்தில், அதுவும் ஒருக்களித்துப் படுத்தவாறு செய்தாக வேண்டும். நிலக்கரிப் பாளத்தை உடைப்பதிலேயே ஈடுபட்டு அவ்வப்போது அள்ளிப் போட மறந்தால் அப்புறம் இரட்டிப்புச் சிரமம். காலி இடம் குறைவு,

கரி வாரும் கருவி தோண்டி இயந்திரத்தின் அள்ளு கரண்டி போன்று அவ்வளவு பெரியது. அள்ளிப் போடுவதிலேயே முனைந்து முட்டுக் கொடுக்க மறந்துவிட்டாலோ வந்தது விபத்து. தாங்கு தூண் இல்லாத விட்டம் கொடிய வேடிக்கை செய்யக்கூடும்—சில டன்கள் கொண்ட படிவுடன் அது ''இருந்து'' விடும். தொழிலாளனின் ஆயுள் கெட்டியாக இருந்து இந்த ராட்சதப் பாளம் அவன் மேல் விழாவிட்டால் அவன் சந்தோஷப்பட வேண்டும். உடனே அரை மணங்குக் கட்டிகளை அள்ளிக் கிராதிச் சட்டங்களுக்கு அப்பால், முடிந்த வரை தூரத்தில் வீச வேண்டும். விட்டத்துக்கு இரட்டிப்பு வலுவுள்ள முட்டுக் கொடுக்க இப்போதும் மறந்துவிடக் கூடாது.

இந்த எல்லா விஷயங்களையும் நன்றாக நினைவு வைத்துக்கொண்டு மாணவன் ஸெர்கேய் வேலை செய்யப் புறப்பட்டான். வெட்டு முகப்பில் நினைத்துக்கூடப் பார்க்கமுடியாத அளவு பேரிரைச்சல் அதிர்ந்து முழங்கியது. அடிவழியே கரித் துகள் படலங்களை வீசியவாறு வேலை மும்முரத்தில் அலறிற்று வெட்டு இயந்திரம். சுரண்டு கன்வேயர் இரும்புப் பறண்டிகளை ஒன்றோடொன்று உராய்ந்து நெறுநெறுத்தது. கீழே வெகு தூரத்தில் இழு வண்டிகள் இணைப்புத் தாங்கிகளை இடித்து எறி குண்டுகள் வெடிப்பது போன்று மடாரொலி செய்தன.

ஸெர்கேய் மண்டியிட்டு அமர்ந்து கொந்தாலியால் நிலக்கரிப் பாளத்தை ஆவேசத்துடன் அடித்தான். காட்டுத்தனமான பல்வகை இரைச்சல்கள் அவன் காதில் படவில்லை. களைப்பை அவன் உணரவில்லை. மற்றவர்களுக்குப் பின்தங்கிவிடக் கூடாது, சுரங்கத் தொழிலாளர்களுக்கு முன் அவ

மானப்படக் கூடாது என்ற ஒரே எண்ணம் அவன் மனத்தில் நிறைந்திருந்தது. நிலக்கரியோ, வேண்டு மென்றேபோல, பெரிய பெரிய துண்டுகளாகப் பிளவுபட விரும்பாமல் சிறு துணுக்குகளாகச் சிதறி முகத்தையும் கைகளையும் அறுத்தது.

வேலை தொடங்கி மூன்றுவது மணி ஆன பொழுது மாணவன் ஸெர்கேய் முழங்கால்களிலும் கைகளிலும் முதுகிலும் வலி வர வரக் கடுமை யாவதை உணர்ந்தான். கொந்தாலி சொன்னபடி கேட்க மறுத்தது, வாரும் கருவியில் நிலக்கரி சரி யாக வர மாட்டேன் என்றது.

''இடைவேளை ஓய்வு கிடையாதா என்ன?'' என்று எண்ணினான் ஸெர்கேய். தன் முழங்கால் களும் கைகளும் லேசாக நடுங்குவதையும் விண் விண்ணென்று தெறிக்கும் வலி கொஞ்சங் கொஞ் சமாக உடம்பு முழுவதிலும் பரவுவதையும் அவன் உணர்ந்தான்.

''இந்தா, அந்த முட்டுக் கட்டையை இப்படிப் போடு, உன்னைத்தானே, பையா...'' என்று காதுக்கு மேல் குரல் கேட்டது.

''ஸெர்கேய் என் பெயர்'' என்று விருப்பின்றி முட்டுக் கம்பத்தை எடுத்தவாறு வெடுக்கென்று சொன்னான் பெத்ரோவ்.

''களைத்துப் போனாயா?'' என்று கட்டைக் குர லில் முழங்கினான் தொழிலாளன். ''முதல் தடவை எப்போதுமே அப்படித்தான்! எங்கள் வெட்டு முகப்பு பூப்போலே. ஒன்பதாம் வேலை இடத் திலே போய்ப் பாரு, தெரியும்! ஒரே தண்ணீரும் சேறும். கோரம்...''

''இடை ஓய்வு உங்களுக்கு உண்டா?''

''வண்டிகளில் கரி ஏற்றுவோம். அப்புறம் வெற்று வண்டிகள் வருகிற வரை களையாறிக்

கொள்ளலாம். அதாவது, சுமை ரொம்பக் குவிந்துவிடாவிட்டால்...''

''குவிந்தால் நாம் தான் நிரவ வேண்டுமோ?'' என்று கத்தினன் ஸெர்கேய்.

''வேண்டாம், சித்தப்பா வருவார், நமக்குப் பதில் வேலே செய்ய'' என்று கெக்கலித்தான் தொழிலாளன்.

வேலே நேரத்தின் நடுவில் கன்வேயர் மூன்று முறை நடுங்கிவிட்டு நின்றுவிட்டது. ஸெர்கேய் அந்தக் கணமே வாரும் கருவியைப் போட்டு விட்டு வெட்டு முகப்பு ஓரமாக ஆனந்தமாய் நீட்டிப் படுத்து விட்டான். ஆனல் ஓய்வு கொள்ள அவனுக்கு வாய்க்கவில்லே. அடுத்து வந்த நிசப் தத்தில் வெட்டு முகப்போரமாகத் தவழ்ந்த மனி தனின் சரசரப்பு கேட்டது இரக்கமற்ற இடிக் குரல் முழங்கியது:

''எவன் இங்கே இப்படி முட்டுக் கொடுத்த வன்?''

ஸெர்கேய் திடுக்கிட்டான். சுரங்க மேஸ்திரி யின் மதிப்பீடு அவனுடைய உழைப்பின் விளே வைப் பற்றியதுதான், சந்தேகம் இல்லே.

''உடனே மறு முட்டுக் கொடு!'' என்று கோபத்துடன் இரைந்தான் மேற்பார்வையாளன். ''இப்போதே! எல்லாரும் புதைபடுவதற்குமுன்!''

வேலே நேரம் முடியும் வரை ஸெர்கேய் தாக்கு பிடித்தான். கன்வேயரில் கடைசி நிலக்கரித் துண்டுகளே அள்ளிப் போட்டான், கடைசி முட்டுக் கம்பத்தை நிறுத்தி வலுப்படுத்தினன், பின்பு கல் தரையில் முகங் குப்புற விழுந்து படுத்துவிட்டான். இரத்தம் கசிய வழன்றிருந்த உள்ளங்கைகள் நெருப்பாய்க் காந்தின. முதுகந்தண்டு கணுக் கணுவாய்த் தெறித்தது. ஆனுலும் உள்ளம் களி

துள்ளியது: அவன் தாங்கிக்கொண்டுவிட்டான், கைசோரவில்லை, பின்தங்கிவிடவில்லை.

சற்று நேரம் இளைப்பாறிய பின் ஸெர்கேய் முழங்கைகளை ஊன்றி மல்லாந்து படுத்து, பாதங்களால் உதைத்து நகர்ந்து குடை வழியின் பக்கம் தொழிலாளர்கள் பின் ஊர்ந்து சென்றான். அங்கே வெகு நேரம்வரை அவனால் உடலை நேராக நிமிர்த்த முடியவில்லை. கடைசியில் நிமிர்ந்து நிற்க முடிந்ததும் அவன் தள்ளாடியவாறு சுரங்க வாயிலுக்கு நடந்தான். கூடிய சீக்கிரம் சுரங்கத்திலிருந்து வெளியேறி விடுதியை அடைந்து கட்டிலில் விழ வேண்டும் என்பதே அவன் கொண்டிருந்த ஒரே ஆசை.

உடை மாற்றாமலே கட்டிலில் படுத்து, தலையணையில் முகத்தைப் புதைத்தவாறு எஞ்சிய பகலும் இரவும் மறு நாள் காலையும் அடித்துப் போட்டாற்போல உறங்கினான் ஸெர்கேய். புதிய வேலை நேரம் தொடங்க இரண்டு மணி இருக்கையில் கடும் பசி தூண்டவே கண் விழித்தான். ''அழகு தான்!'' என்று தனக்குத் தானே வியப்புடன் சொல்லிக்கொண்டான். தலைக்கு நாள் வேலைக்குப் பிறகு பகல் உணவு கொள்ளவில்லை, இரவுச் சாப்பாட்டு நேரத்திலும் உறங்கிக் கொண்டிருந்து விட்டான் என்பது அவனுக்கு அப்போதுதான் நினைவுக்கு வந்தது.

சுரங்கத் தொழிலாளர் உணவு விடுதியில் பசியாற்றிக்கொண்டதும் தனக்குள் புதிய சக்தி ஊற்றெடுப்பதை அவன் உணர்ந்தான். உள்ளங்கைகள்தாம் நேற்றுப் போலவே வலித்தன, முழங்கால்களில் சிறு சிறு ஊசிகள் குத்துவது போல இருந்தது.

அலுவல் அறையில் அவனைச் சந்தித்தான் குழுத்

தலைவன். ''என்ன சேதி, சுரங்கத் தொழிலாளி! ஒருவேளை கொஞ்சம் களையாறுகிறுயா? அதிகச் சுளுவான வேலை இருக்கிறது!''

''நேற்றைக்கு எதனாலோ எனக்குக் களைப்படையவே நேரமில்லை!'' என்று கூசாமல் புளுகினுன் ஸெர்கேய்.

''ஓகோ, அப்படியா? எங்கே, முழங்கால்களைக் காட்டு'' என்றான் குழுத் தலைவன்.

''எதற்காக?''

''காட்டு என்கிறேன்!''

ஸெர்கேய் காற்சட்டையைத் தூக்கி முழங்கால்களைக் காட்டினுன்.

''அடே-டே-டே, மகனே! இப்படி இருந்தால் கட்டாது... முழங்கால் காப்புகள் இல்லாமலேயா வேலை செய்தாய்? இந்தா, இயந்திரத் தொழிற்கூடத்துக்கு ஓடு. அங்கே பழைய மோட்டார் டயர்கள் இருக்கும். இரண்டு துண்டுகள் வெட்டி எடுத்துக்கொண்டு வா. அருமையான முழங்கால் காப்புகள் செய்து தருகிறேன்.''

முழங்கால் காப்புகள் அணிந்து கொண்டுங்கூட இரண்டாம் நாள் வேலை முதல் நாள் போலவே கடினமாய் இருந்தது, உடம்பெல்லாம் நொந்தது.

''ஒருவேளை சுரங்க வேலைக்கு நான் ஏற்றவன் அல்லவோ?'' என்ற சந்தேகம் ஸெர்கேயுக்கு உண்டாயிற்று. அக்கணமே வேறு ஒரு கேள்வி எழுந்தது: ''ஆனால் என்ன செய்வது? ஓடிவிடுவதா? போர்க்களத்திலிருந்து ஓடும் பேடி போல? கூடாது! எல்லோரும் இப்படித்தான் தொடங்கினார்கள். நான் மற்றவர்களுக்கு எந்த விதத்தில் சளைத்தவன்?''

இரண்டாவதற்குப் பிறகு வந்தன மூன்றுவது, நான்காவது நாட்கள்... ஸெர்கேய் வழன்ற உள்ளங்கைகளைப் பட்டித்துணியால் சுற்றிக் கட்டிக்

கொண்டு, பற்களை நெறு நெறுத்து உடைய விரும்பாத நிலக்கரிப் பாளத்தைக் கொந்தாலியால் விடாப்பிடியாகத் தாக்கி, தன் ஆத்திரத்தையும் சந்தேகங்களையும் அதன் மேல் கொட்டினான். கெட்டியாக இறுகிய, உணர்வற்ற, தொன்மை போலவே குளிர்ந்த நிலக்கரிப் பாளம் முடிவில் மாணவனுக்குப் பணிந்துவிட்டது.

நாளுக்கு நாள் அது மென்மை ஆகிக்கொண்டு போயிற்று, எளிதில் பிளந்தது. ஒரு மாதப் பயிற்சிக் காலம் முடிவதற்குள்ளோ, அது முற்றிலும் வசத்துக்கு வந்துவிட்டது. கைக் காய்ப்புக்கள் ஆறிக் கரடு தட்டிவிட்டன. கொந்தாலி இஷ்டம் போல் இயங்கும் விளையாட்டுக் கருவி ஆகிவிட்டது. பருத்த நிலக்கரிப் பாளங்கள் வெளிப்படையான பிரயாசையே தேவை இன்றித் தாமாகவே கிராதிச் சட்டத்தில் தடாரென்று விழுந்தனபோல் தோன்றின.

முறை வேலை நேரம் முடிய இன்னும் எத்தனை மணிகள் அல்லது நிமிடங்கள் பாக்கி என்று ஸெர்கேய் இப்போதெல்லாம் கணக்கிடுவதில்லை. நிலக்கரிப் படிவின் கனத்த பரிமாணத்தை அச்சம் ததும்பும் விழிகளால் அளப்பதில்லை. ஆர்வமும் உற்சாகமும் பொங்க, உடம்பின் ஒவ்வொரு உயிரணுவும் களி ததும்ப வேலை செய்தான். கடினமான காலம் கடந்துவிட்டது, தன் வாழ்க்கையில் முதலாவதான மிக முக்கியப் பரீட்சையில் வெற்றி கிடைத்துவிட்டது என்ற உணர்வால் அவன் பூரித்தான்.

வெளித் தோற்றத்திலும் ஸெர்கேய் அடையாளம் காணமுடியாதபடி மாறிவிட்டான். முதல் தடவை சுரங்கத்தில் இறங்கிய கலக்கமும் மிரட்சியும் கொண்ட சிறுவனின் சுவட்டையே இப்

போது காணேம். இப்பொழுதோ, அவன் தன் திறத்தில் நம்பிக்கை உள்ள வாலிபன், தன் உழைப்பின் மதிப்பை அறிந்தவன், தான் செய்யும் செயல் மக்களுக்கு மிகத் தேவையானது என்று உணர்ந்தவன்.

பயிற்சிக் காலம் முடிந்ததும் ஸெர்கேய் கல்லூரி விடுமுறை, ஓய்வு முதலியவை பற்றிய கவர்ச்சி யான எண்ணங்களை ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, சுரங் கத்திலேயே வேலை செய்யத் தங்கிவிட்டான். சுரங் கம் அவனைக் காந்தம்போலத் தன்னிடம் ஈர்த்துக் கொண்டது. அப்புறம் சுரங்கத்தைப் பிரிந்து பாடப்புத்தகங்களில் நாட்டம் செலுத்த நேர்ந் ததும் விரிவுரைக் கூடத்தின் நிசப்தம் அவனுக்குச் சலிப்பூட்டியது. ஐந்தாவது கிழக்கு வேலைப் பகுதி யின் அருமையான தொழிலாளி நண்பர்களுக்காக வும் வெட்டு முகப்பின் இடி முழக்கத்துக்காகவும் தான் மக்களுக்குத் தேவையானவன் என்ற ஆழ்ந்த உணர்வுக்காகவும், மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையை முடிவுவரை நிறைவேற்றியதால் ஏற்படும் களி நிறைந்த உணர்ச்சிக்காகவும் அவன் வெகு காலம் ஏங்கினன்.

''ஒரு காலத்தில் நான் இருந்ததே போன்ற, மீசை அரும்பாத சிறுவர்கள் இப்போதும் சுரங் கத்தில் இறங்குகிறர்கள், போராடுகிறர்கள், வெல்கிறர்கள், ஒருவேளை தரைக்கீழ் உழைப்பின் கவர்ச்சி தங்களுக்கு ஏற்றது அல்ல என்று தெரிந்து கொண்டு பின் வாங்குகிறர்கள்... இவ்வாறே நேற்று நடந்தது, இன்று நடக்கிறது, நாளை நடக் கும்... ஆனல் எனக்கு எஞ்சி இருப்பது என்ன? இந்தக் கேள்விக்கு யார் விடை அளிப்பார்கள்? மனிதனை உயிர் வாழவிட்டுவிட்டு இன்பத்தைப் பறித்துக் கொள்வதா? இப்போது என் உயிர் என்

கைகளில் இருக்கிறது. கைகளில்... அதனுடன் கடைசியாகக் கணக்கு தீர்த்துக்கொள்வதற்குக் கரங்கள் வேண்டும்... ரயில், மோட்டார், தற்செயல் விபத்து—இவை எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன உயிரை மாய்த்துக் கொள்வதற்கு. உயிரோடு இருப்பவர்கள் சூட்டும் 'தற்கொலையாளி' என்ற அவப்பெயராவது ஒட்டிக்கொள்ளாமல் இருக்கும்... ஆனால் நான் வாழ்வதற்கு எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்துவிட்டேனா? உயிரை விடுவது எல்லாவற்றிலும் எளிது. பயங்கூட அதில் இல்லை. மூழ்குபவர்கள் பிடித்துக்கொள்ளும் அந்தத் துரும்பு எங்கே? அது இல்லை. ஆகவே என்ன செய்வது, ஸெர்கேய்? சோர்ந்து துவள்வதா, போராடுவதா? மனம் விட்டுச் சொல்லு. ஏதாவது செய்ய மட்டும் எனக்குத் திறன் இருக்குமானல். கற்க வேண்டும், எனது வாய்ப்புக்களுக்கு ஏற்ற தொழில் துறையில் தேர்ச்சி பெற வேண்டும். அந்த மாதிரித் தொழில் துறை இருக்கிறதா? கற்பதுதான் எப்படி? எழுத வேண்டியிருக்குமே, எதனல் எழுதுவது? கால்களாலா?''

ஸெர்கேய் சட்டென்று செருப்புக்களை உதறி எறிந்து விட்டு, வியப்பினல் வாயை ஆவெனத் திறந்து கால் விரல்களைப் பார்வையிட்டான்.

''கால்களால்'' என்று வாய்விட்டுச் சொல்லி, எதிர்பாராமல் தோன்றிய இந்தக் கருத்தால் அசையாது நின்றுவிட்டான். ''அருமையான கருத்து அல்லவா இது! கா-ல்க-ளா-ல்...''

அக்கணமே பென்சிலையும் காகிதத்தையும் தேடி எடுத்து, தன் எண்ணத்தைச் செயலில் சோதித்துப் பார்க்க அவனுக்கு ஆசை உண்டாயிற்று. மன இறுக்கத்தால் உடம்பெல்லாம் வியர்க்க, தனக்குத் தேவையான சாதனங்களைத் தேடி எடுக்க

வீணே முயன்றவாறு அவன் அறையில் அர்த்த மின்றி இங்குமங்கும் நடந்தான். ஜன்னல் குறட்டில் ஒரு பென்சில் கிடந்தது. மகிழ்ச்சி அடைந்த ஸெர்கேய் அதன் பக்கம் பாய்ந்தவன், எரிச்சலுடன் திட்டினன். பென்சில் முனை முறிந்திருந்தது.

காலினுல் எழுதப் பயில்வதால் தனக்கு என்ன லாபம் என்பதை ஸெர்கேய் இன்னும் புரிந்து கொள்ளவில்லை. கண்களுக்கு அது சௌகரியப் படாதே, வீட்டுக்கு வெளியே, காலணிகள் இருப்பதால் எழுத முடியாதே, என்பன போன்ற, பகுத்தறிவுக்கு இசைந்த தடைகளை அவன் சட்டை செய்யவே இல்லை. மூழ்குபவன் பற்றிக் கொள்ளும் எந்தத் துரும்பைப் பற்றி அவன் சற்று முன்பு எண்ணினுனே அந்தத் துரும்பு கிடைத்து விட்டது என்று அவனுக்குத் தோன்றியது, அதை மட்டுமே அவன் கண்டான். அதைக் கெட்டியாகப் பற்றிக் கொண்ட பின், அறிவு கிளப்பிய மறுப்புக்களைக் கணக்கில் எடுத்துக்கொள்ள அவன் விரும்பவில்லை. முன்னே தொலைவில் ஒளிர்ந்தது உழைப்புச் சூரியன். ஸெர்கேய் செயலின்மைத் தளைகளை மானசீகமாக அறுத்துவிட்டான்.

முதன் முதலில் அவன் தான்யாவின் பெயரையும் எவையேனும் அன்புச் சொற்களையும் எழுதுவான். ஆ, அவள் எப்படி ஆச்சரியப்படுவாள்! "உன்னுல் எப்படி முடிந்தது, ஸெர்கேய்?" என்பாள். அவன் புன்னகை செய்து, "நாம் இன்னும் போராடுவோம், தான்யாக் கண்ணே!" என்று சொல்லுவான். ஆனுல் அவளுக்குத் தெரியாமல் செய்ய வேண்டும். எதிர்பாராப் பரிசாக அளிக்க வேண்டும்!

திட்டம் ஒரு நொடியில் தயாராகி விட்டது: தான்யா கடைவீதியிலிருந்து திரும்பியதும், ஒரு

புத்தகத்திலிருந்து ஏதேனும் மேற்கோள் எழுதித் தரும்படி அவன் அவளைக் கேட்பான். அதற்கு நோட்டும் பென்சிலும் தேவைப்படும். எல்லாம் ஒழுங்கான முறையில்! மேற்கோள் பெயர்த்து எழுதிய பின் நோட்டும் பென்சிலும் மேஜை மேலேயே இருக்கும். தான்யா உறங்கியபின் அவன் அவற்றைப் பயன்படுத்துவான்.

தான்யா சாமான்கள் வாங்கிக்கொண்டு திரும்பியதும் எதையும் சந்தேகிக்காமல் ஸெர்கேய் கேட்டபடிச் செய்தாள். எழுதி முடித்ததும், அவன் நினைத்தது போலவே பென்சிலையும் நோட்டையும் மேஜைமேல் வைத்துவிட்டுப் போனாள். பகல் நீண்டுகொண்டு போயிற்று. ஸெர்கேய் படிக்க முயன்றான். ஆனால் புத்தகத்தில் கண்ணோட்டு கையில் கால் விரல்களில் இடுக்கப்பட்ட பென்சில் வெள்ளைக் காகிதத்தில் மெதுவாக ஊர்வதையே கண்டான். இரவுவரை காத்திருக்கும் சள்ளை பொறுக்க முடியாமல், தான்யாவிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவோம் என்று அனேக முறை திடீர்த் தீர்மானம் செய்தான் ஸெர்கேய். ஆனால் அவளுக்கு எதிர்பாராத விதத்தில் களிப்பூட்ட வேண்டும் என்ற ஆசை மேலோங்கி இருந்தபடியால் ஒவ்வொரு தடவையும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான். கடிகார முட்களோ அவனை நையாண்டி செய்பவை போல எண் வட்டத்தில் மிக மிக மெதுவாக ஊர்ந்தன.

''ஸெர்கேய், நீ இன்றைக்கு என்னவோ போல இருக்கிறாயே. உடம்பு சரியாய் இல்லையா என்ன?'' என்று அவனுடைய கிளர்ச்சியைக் கவனித்த தான்யா கேட்டாள்.

''இல்லை, இல்லை, தான்யா! எனக்கு உடம்பெல்

லாம் சரியாய்த்தான் இருக்கிறது!'' என்று புன்னகை செய்தான் ஸெர்கேய்.

நெடு நேரமாக எதிர்பார்த்த இரவு கடைசியில் வந்தது. ''நிரம்ப நேரம் உட்கார்ந்திராதே!'' என்ற வழக்கமான சொற்களைக் கூறிவிட்டுத் தான்யா கட்டிலில் படுத்து உறங்கிவிட்டாள்.

பொறுமையின்றித் துடித்துக் கொண்டிருந்த ஸெர்கேய் நோட்டைத் தரையில் தள்ளி, காலால் அதைத் தன் அருகே நகர்த்தித் திறக்க முயன்றான். நோட்டோ, தேர்ச்சியற்ற கால் அசைவுகளுக்கு வசப்படாமல், மந்திரம் போட்டது போலக் கால்களில் சுழன்றது, தரையில் வழுகிச் சென்றது. கடைசியில் அவன் அதை எப்படியோ பாடுபட்டுத் திறந்து தான் விரும்பிய விதத்தில் கிடக்க வைத்துவிட்டான்.

அடுத்த காரியம்—தரையிலிருந்து பென்சிலை எடுத்து, கால் விரல்களில் அதை எழுத வாக்காக இடுக்கிக் கொள்வது—இன்னும் அதிகக் கடினமாய் இருந்தது. அந்தப் பாழும் பென்சிலை எடுக்க ஒரு மணி நேரத்துக்கு மேல் வீண் முயற்சி செய்து களைத்துப்போன ஸெர்கேய் சீற்றத்துடன் அதை உதைத்துவிட்டு மேஜைமேல் தலையைக் கிடத்திக் கொண்டான். வியர்வை அவன் முகத்தில் அருவியாய்ப் பெருகிற்று. நனைந்த முதுகில் சட்டை ஒட்டிக்கொண்டது. அதே சமயம், நெஞ்சில் பொங்கிப் பொங்கி வந்த எரிச்சலையும் பொருட்படுத்தாமல் மூளையில் ஒரு கருத்து மறுபடி மறுபடி இடித்தது: ''எடு! எடு! எடு!...'' இந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து ஸெர்கேய் பென்சிலை மேஜை அருகே உருட்டி மீண்டும் செயலில் முனைந்தான். ''சொல்வதைக் கேள், கேள், கேளேன், பாழும் பென்சிலே!'' என்று அவன் கெஞ்சினான், அதட்டினான்.

காலில் வலிப்பு வரத் தொடங்குவதை உணர்ந் தான். இனிமேல் முடியாது என்ற புகலற்ற சோர்வு ஏற்பட்ட சமயத்தில் ஒரு புதிய எண்ணம் சட் டென உதித்தது: பென்சிலை வாயால் சுவரோர மாக வைத்தாலோ?... ஸெர்கேய் மண்டியிட்டு அமர்ந்து, பிடிவாதக்காரப் பென்சிலை உதடுகளால் கவ்வி, நாற்காலிக் கால் மீது சார்த்தி வைத்தான். ஆனால் அப்புறம் வலது கால் விரல்களால் அதைப் பற்றியதும் பற்றாததுமாக அதை நழுவ விட்டு விட்டான்.

பழுதடைந்த பாதம் ஆவேசக் கட்டளை களுக்குக் கீழ்ப்படிய மறுத்தது.

பென்சில் டக்கென்று விழுந்து தரையில் உருண் டது. கீழே உருளும் பென்சிலை மங்கும் கண் களால் பார்த்தபோது ஸெர்கேயுக்கு அப்படியே முகங் குப்புற விழுந்து வாய்விட்டு அழ வேண்டும் போல் இருந்தது.

பகலில் உழைத்துக் களைத்த நகரம் அடங்கிவிட் டது. டிராம்களின் மணியோசை ஓய்ந்துவிட்டது. வீதிகள் வெறுமை ஆயின. கடைகளின் காட்சி ஜன்னல் விளக்குகள் அணைந்தன. நேரங் கடந்து வந்த வழிப்போக்கர்கள் தார் ரோடில் ஜோடு களைத் தேய்த்தவாறு அவசரமாக வீடுகளுக்கு ஓய்வு கொள்ள விரைந்தார்கள்—மறுநாள் புதிய சக்தியுடன் எழுந்து தொழிற்சாலைகளிலும் சுரங் கங்களிலும் அலுவலகங்களிலும் பணி ஆற்றும் பொருட்டு.

உழைப்பாளி நகரம் உறங்கியது. நகரம் கனவு கள் கண்டது. பெரிய கனவுகள், நூறு சூரியன் கள் போன்ற ஒளி வீசும் கனவுகள், தாயின் கரங் கள் போன்று அன்பைச் சொரியும் கனவுகள்.

ஒரு வீட்டில் மட்டும் காலைவரை விளக்கு எரிந்து

கொண்டிருந்தது. ஒரு மனிதன் வாழ விரும்பினான். வேதனை உண்டாகும் அளவுக்கு புகலற்ற சோர்வு ஏற்படும் அளவுக்கு ஆர்வத்துடன் விரும்பினான். செயலற்ற பார்வையாளனாக அல்ல, வாழ்வில் பங்காற்றுபவனாக, அதைப் படைப்பவனாக, அதன் எஜமானனாக வாழ விரும்பினான். தன்னுடன், தன் அங்கவீனத்துடன் கடினமான போர் நிகழ்த்திக் கொண்டிருந்தான் அவன். கொடூரமான, ஈவிரக்கமற்ற போர்...

காலையில் கண் விழித்த தான்யா கட்டிலில் ஸெர்கேயைக் காணாமல், ''ஸெர்கேய்'' என்று மெள்ள அழைத்தவள் அவனைப் பார்த்துவிட்டாள்.

ஸெர்கேய் மேஜைமேல் தலையை அசௌகரியமாகச் சாய்த்து, நாற்காலியில் முடங்கி, குழந்தை போலக் கால்களைப் பிட்டத்துக்கு அடியில் மடக்கிக்கொண்டு தூங்கிக்கொண்டிருந்தான். தரையில் கிடந்தது திறந்த நோட்டு. அதன் ஒரு காகிதத்தில் கோணல் மாணலான கோடுகள் கிறுக்கப்பட்டிருந்தன. பெரியவர்களின் சௌகரியமற்ற, விருப்பத்துக்கு இணங்காத எழுது கருவியை முதன் முதலாகக் கையில் எடுத்த குழந்தை வரைந்த படத்தை ஒத்திருந்தன அந்தக் கிறுக்கல்கள்.

தான்யா விஷயத்தைப் புரிந்துகொண்டாள். ''பாவம், வாய்க்கவில்லை... என்னிடம் கூட இவன் சொல்லவில்லையே. என்னை உதவிக்கு அழைக்கவில்லையே.''

''ஸெர்கேய்! கட்டிலில் போய்ப் படுத்துக் கொள். இங்கே அசௌகரியம்'' என்றாள்.

ஸெர்கேய் தலையை நிமிர்த்தி, குற்றம் செய்த பாவனையில் சொன்னான்:

''என் முயற்சி எதுவும் பலிக்கவில்லை, தான்யா. ஒன்-று-மே... உனக்கு மகிழ்ச்சி அளிக்க நினைத்தேன், பயன் இதுதான்... நம்பிக்கை கூட இல்லை இனி.''

''முதல் அடிகள் எடுத்து வைப்பது எப்போதுமே சிரமந்தான். எல்லாம் சுளுவாக முடியும் என்று நீ மட்டும் எதிர்பார்த்தாயா என்ன? அப்படி ஒரு போதும் நடப்பதில்லை. உன் சிரமங்களை நீயே அதிகம் ஆக்கிக்கொள்கிறாய். வீட்டுக்குள்ளேயே அடைபட்டுக் கிடக்கிறாய், பேசுவதையும் நிறுத்திவிட்டாய்... வெளியே போகவும் சினிமா பார்க்கவும் நண்பர்களைச் சந்திக்கவும் உனக்கு ஏன் ஆசையாய் இல்லை? அல்லது அறையே கதியாக இருக்கப்போகிறாயோ? உன் எண்ணங்களும் நீயுமாக, தன்னந்தனியாக?''

இந்தக் கேள்வியை ஸெர்கேய் வெகு நாட்களாகவே எதிர்பார்த்தான். எதிர்பார்த்தான், அஞ்சினான். அம்மணக் கோலத்தையும் விகார உனவத்தையும் போலவே உடற்குறையினால் தனக்கு வெட்கமாய் இருப்பதாகத் தனக்குத் தானே கூட ஒப்புக்கொள்ள அவன் அஞ்சினான்.

''நான் பயப்படுகிறேன்'' என்று கம்மிய குரலில் சொன்னான்.

''எதனிடம்?''

''ஜனங்களிடம்... அவர்களுடைய ஆவலுக்ும் இரக்கத்துக்கும் பயப்படுகிறேன். 'இவன் எதற்காகக் குறுக்கே வருகிறான்?' என்று சிலர் நினைப்பார்கள். அந்த மாதிரி ஆட்கள் இருக்கிறார்கள், என் காதுகளால் கேட்டேன்... மேற்கொண்டு பெருமை வேறு அடித்துக் கொள்வார்கள்: 'அட இவன் இடத்தில் நான் மட்டும் இருந்தால்!... நான் எதையும்

லட்சியம் செய்ய மாட்டேன், தெரியும் அல்லவா?...'''

''ஐயோ ஸெர்கேய், நீதான் எவ்வளவு பெரிய அசடு! எல்லாரையும் இப்படி ஒரே மட்டமாக எண்ணுவது முறையாகுமா?.. எவனே மடையன் சொன்னதைக் கேட்டுவிட்டு நீயே அசட்டுத்தன மான முடிவுகள் செய்துகொள்கிருயே. வாழ்க்கை யிலும் புத்தகங்களிலும் எத்தனையோ உதாரணங் கள் பார்க்கிருேமே, அவற்றிலிருந்து என்ன தெரி கிறது? எந்த வித இடையூறுகளையும், மிகப் பயங்கரமானதைக் கூட மதியாமல் தொடர்ந்து போராடுபவர்களே உரம் உள்ளவர்கள் என்பது தானே!''

''வேண்டாம், தான்யா. மெரேஸ்யெவையும் கர்ச்சாகினையும் எடுத்துக்காட்டாதே... நான் வீரன் அல்ல. பலவீனன். என்னையே நான் சரிப் படுத்திக் கொள்ள முடியாவிட்டால் என்ன செய் வேன்?''

''யெகோரவிச்சோ? அவரை மறந்து விட் டாயா? ஸெர்கேய், இப்படி இருப்பது சரி ஆகாது. ஜனங்கள் விலங்குகள் அல்ல. அவர்கள் எல்லாவற் றையும் புரிந்துகொள்வார்கள்.''

''அவர்கள் புரிந்து கொள்ளாமலும் இரக்கப் படாமலும் இருந்தாலே மேல். அடைபட்டுக் கிடப் பது சரியல்ல என்பது எனக்கே தெரிகிறது. ஆனுல் என்ன செய்வது, என்ன செய்வது?''

## 3

''அம்மா, மாமாவுடைய கோட்டுக்கைகள் காலியாய் இருக்கின்றனவே, ஏன்?''

''மெள்ளப் பேசு, மகளே. இப்படி இரைந்து கத்தாதே. மாமாவுக்குக் கைகள் இல்லே.''

''ஏன் இல்லே, அம்மா? எல்லாருக்கும் இருக்கிறதே, அவருக்கு மட்டும் இல்லேயே, ஏன்?''

''பெண்களா, பாருங்கள் அந்த இளேஞனே, இரண்டு கைகளும் இல்லே அவனுக்கு! அடாடா, எவ்வளவு இளவட்டம்!... பயங்கரம்!...''

''என்ன வேடிக்கை பார்க்கிறீர்கள், காட்டு ஜென்மங்களா! மனிதனுக்குத் துன்பம் நேர்ந்து நீங்கள் பார்த்தது இல்லேயோ? கண்களேப் பிதுக்குகிறீர்களே!... ஐயோ, என்ன ஜனங்கள்!''

அவனே, தலேயைத் தோட்களுக்குள் இழுத்துக் கொண்டு, நோயுற்ற காலேப் பாங்கின்றி வைத்தவாறு விரைவாக நடந்தான். வீதிகளின் ஆரவாரம் நிறைந்த ஜனப்பெருக்கிலிருந்து, ஆட்களின் பார்வைகளிலும் சொற்களிலுமிருந்து தப்பி ஓட விரும்பினன் அவன். ஜனங்களின் பார்வைகளும் சொற்களும் கற்கள்போல அவன் நெஞ்சைத் தாக்கின.

''இவர்களேக் கவனிக்கவே செய்யாதே, ஸெர்கேய்... இப்படி இருந்தால் நடக்குமா? தவிர ஒருவருமே நம்மைப் பார்க்கவில்லே. பழக்கம் இல்லாததால்தான் நமக்கு அப்படித் தோன்றுகிறது...''

''நான் உணர்ந்தேன், அறிந்திருந்தேன்...'' என்று மனேவியை ஆள் நடமாட்டம் இல்லாத ஒரு சந்துக்கு இட்டுச் சென்றவாறு தொடர்பின்றி மறுபடி மறுபடி சொன்னன் ஸெர்கேய்.

''அப்புறம் என்ன, ஆட்களிடமிருந்து இப்படியே விலகி விலகி ஓடப்போகிறேமா?'' என்று குனிந்த தலேயுடன் சொன்னள் தான்யா. அப்போது அவர்கள் வேற்றூர் வீட்டுப் புகு வாயிலுக்குள் சரண்புகுந்திருந்தார்கள்.

''என்னால் முடியாது, தான்யா. எனக்கு மனமே சரியாய் இல்லை. தரை பிளந்து விழுங்கி விடாதா என்று இருக்கிறது. இப்படி இருக்கக் கூடாது தான், எனக்குப் புரிகிறது. ஆனால் என்னை ஒன்றுமே செய்துகொள்ள முடியவில்லை. வீதி பூராவும் நின்று என்னையே பார்ப்பதுபோல் இருக்கிறது... ஜனங்களின் விழிகளில் இரக்கமும் அச்சமும். இவர்கள் என்மேல் இரக்கப்படுவதையும் பயப்படுவதையும் நான் விரும்பவில்லை. எனக்கு இது பிடிக்கவே இல்லை!''

''அட ஒருவருமே அப்படி நினைக்கவில்லை. நீயாகவே இப்படி எல்லாம் கற்பனை செய்து கொண்டிருக்கிறாய்.''

''அட அவர்கள் கண்களைப் பாரேன் நீ... சொற்களைவிடத் தெளிவாயிருக்கின்றன...''

''எல்லாருமே உன்னை அப்படிப் பார்க்கவில்லையே. அங்காந்த வாயர்கள் எங்குந்தான் எப்போதும் இருப்பார்கள்!''

''வீட்டுக்கும் போவோம் வா, தான்யா. என்னை யாரோ காரணமில்லாமல் அடித்து நொறுக்கி விட்டதுபோல் இருக்கிறது எனக்கு. குடிக்க விருப்பம் உண்டாகிறது... நினைவை இழக்கும் வரை ... எல்லாவற்றையும் மறந்துவிட... வோத்கா வாங்கு.''

தான்யா மலைத்துப்போய் நின்றாள். அவர்களுடைய மண வாழ்க்கையில் முதன்முதலாக இப்போதுதான் ஸெர்கேய் குடிப்பது பற்றிப் பேசினான். ஸெர்கேய் குடிக்கத் தொடங்குவான், தன் துயரத்தை வோத்கா வெறியில் மறக்க முயல்வான் என்று மருத்துவமனையில் பலர் அவளை எச்சரித்திருந்தார்கள். தான்யா அதை நம்பவில்லை. வெறியூட்டும் பானங்களை ஸெர்கேய் எப்போது

மே அருவருத்தான், அவன் அப்படிப்பட்டவன் அல்ல என்று அவள் அறிந்திருந்தாள். இப் போதோ... புதிய விபத்து தவிர்க்க முடியாதபடி அவர்களைச் சூழ்ந்துவிட்டது என்று தோன்றியது. அவனுடைய வேண்டுகோளை மறுக்க அவளால் முடியவில்லை. அதே சமயம், எல்லாக் கெட்ட காரியங்களிலும் போலவே குடிப்பதிலும் முதல் அடி வைப்புதான் கடினமானது, முதல் அடி எடுத்து வைத்தபின் எல்லாம் தானாகவே நடக் கும் என்றும் அவளுக்குப் புரிந்தது.

''குடிக்காதே, ஸெர்கேய். எது வேண்டுமோ செய், குடிக்க மட்டும் செய்யாதே. உனக்கே தெரியும்—இது உன்னை அழித்துவிடும்'' என்று அறிவுறுத்த முயன்றாள்.

''இந்த வாழ்க்கையில் நான் உயர்வாக மதிப் பதற்கு என்ன இருக்கிறது? இதில் எனக்கு எஞ்சி இருப்பது எது? சொல்லு, எது?'' என்று வன்மத் துடன் இரைந்தான் ஸெர்கேய்.

கடையில் வாங்கிய கால் லிட்டர் வோத்கா பாட்டில் தான்யாவுக்குப் பல மணங்கு எடை உள் ளதுபோலக் கனத்தது. தெருவில் நடக்கையில் வழிச் செல்பவர்களை ஏறிட்டுப் பார்க்கவும் அவள் கூசினாள். ''துன்பத்தை நானே வீட்டுக்கு எடுத்துப் போகிறேன்'' என்ற எண்ணம் அவள் மனத்தி லிருந்து அகல மறுத்துவிட்டது. ''பொறு, பொறு, பெண்ணே, அப்புறம் தெரிந்துகொள்வாய்!'' என்று மருத்துவத் தாதி கெக்கலி கொட்டியது அவளுக்கு நினைவு வந்தது. ''அட கடவுளே! இது தான் விதியா? என் ஸெர்கேயால்கூட இந்தப்பாழும் குடி இல்லாமல் இருக்க முடியாதா என்ன?''

வோத்காவைக் குவளையில் ஊற்றி நடுங்கும் கைகளால் அதை ஸெர்கேயின் வாய் அருகே

கொண்டுபோனாள் தான்யா. அவளுக்கு மூச்சே நின்றுவிட்டதுபோல் இருந்தது. ஸெர்கேய் தலையைப் பின்னே சாய்த்து, வேதனையுடன் முகத்தைச் சுளித்தவாறு ஓரிரு மடக்குகள் பருகினான். தொண்டையைக் கமறிக்கொண்டான், பின்பு குவளை விளிம்பில் பல் இடிக்க, அருவருப்புடன் வோத்கா முழுவதையும் குடித்துவிட்டான்.

காட்டமான திரவம் வயிற்றை அழற்றியது, மூளைக்கு வெறி ஏற்றியது. ''இப்போது இதமாய் இருக்கும்!'' என்று எண்ணிக் கண்களை மூடிக்கொண்டான் ஸெர்கேய். அவன் அமர்ந்திருந்த நாற்காலி ஆடியது, அறை முழுவதும் வெறியுடன் சுழலும் குடை ராட்டினம் போலச் சுழன்றது. ''... எல்லாருக்கும் இருக்கிறதே, இவருக்கு மாத்திரம் இல்லையே? ஏன் இல்லை, அம்மா?'' என்ற குழந்தைக் குரல் திடீரெனக் காதில் ஒலமிட்டது. ''மனிதர்களுக்கு நேரும் துன்பம், துன்பம், துன்பம்... '' என்று பறையடித்தது ஆண் குரல். ''வோத்கா உன்னை அழித்துவிடும், ஸெர்கேய்.''

''இல்லை, நான் தான் உன்னைப் பாழாக்குகிறேன்!'' என்று மேஜைமேல் முட்டிக்கொண்டான் ஸெர்கேய். ''உன் வாழ்க்கையை எதற்காக நான் வதைக்கிறேன்? உனக்குத் துன்பங்களே இழைக்கிறேனே, எதற்காக? உன் காதலுக்கும் கற்புக்கும் கைம்மாருகவா? ஆனால் நான் குற்றவாளி அல்லவே. இதில் யாரைக் குற்றம் சொல்வது? நீ என்ன, பேசாதிருக்கிறாய், தான்யா? மின்னோட்டத் தாக்கு என்னை ஏன் ஒரேயடியாகக் கொன்றுவிடவில்லை? இந்த மாதிரி வாழ்க்கை எனக்கு எதற்காக? குடிகாரனாக, கீழ்மகனாக இருக்க நான் விரும்பவில்லை, என்னால் முடியாது... எல்லாமே எனக்கு அருவருப்பு தருகின்றன... என் வாழ்க்கையுந்தான்...

ஆனல் என்னுடைய துன்பங்கள் போதாவென்று உன்னையும் நான் எந்த உரிமையின் பேரில் வாழ விடாமல் அடிக்கிறேன்?''

''உனக்குக் குடி வெறி, அதனால்தான் அசட்டுப் பிசட்டென்று பேசுகிறாய்.''

''இல்லை, எனக்கு வெறி ஏறவில்லை! உனக்கு நான் இழைக்கும் தீங்கைத் தெளிவாகப் புரிந்து கொண்டேன், அவ்வளவுதான். நான் உயிரோடு இருப்பதாலேயே எல்லோருக்கும் குற்றம் செய்தவன் ஆகிறேன். எனக்கு உரிய இடம்... உயிரோடு இருப்பதால் நான் இடைஞ்சலே செய்கிறேன், காலடியில் இடறுகிறேன், அற்பப் பேடி போல...''

''வேண்டாம் ஸெர்கேய், உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்... நிறுத்து...''

''கைகளோடுஇருதயத்தையும் சேர்த்து வெட்டி அகற்றியிருக்க வேண்டும். இதயம் நோகிறதே, அதை என்ன செய்வேன்?... பொறுக்க முடியாதபடி வலிக்கிறதே?! வோத்கா கூட உதவ மாட்டேன் என்கிறது. போதாது... போய் இன்னும் வாங்கிவா. நான் வெறியேறக் குடிக்க விரும்புகிறேன்.''

வீட்டுக்கு மிக அருகாமையில் இருந்த ரயில் தண்டவாளம் சாலை இருப்புப்பாதைக் கடவைதான். அதுவரை போவதற்கு ஐந்து நிமிடங்களுக்கு மேல் தேவைப்படாது என்று ஸெர்கேய் கணக்கிட்டான். பயணிகள் வண்டி, சரக்கு வண்டி, ஷன்டிங் வண்டிகள் என்று பல்வகை ரயில் வண்டிகள் அடிக்கடி போய்க்கொண்டிருக்கும்.

வெகு காலத்துக்குமுன்பு அந்தக் கடவையில் ஒருவன் ரயிலடியில் அகப்பட்டு மாண்டான். இரண்டு

கூறுகளாகத் துண்டாக்கப்பட்டிருந்த உடல் தண்டவாளத்தின் இரு புறங்களிலும் கிடந்தது. சுற்றிலும் வேடிக்கை பார்ப்பவர்கள் குழுமியிருந் தார்கள். மாணவன் ஸெர்கேய் பூங்காவில் நடனத் துக்குப் போய்க்கொண்டிருந்தவன், தானும் கூட் டத்தில் சேர்ந்துகொண்டான். இறந்தவனை ஒவ் வொரு பகுதியாகத் தூக்கு படுக்கையில் ஆட்கள் எடுத்து வைத்தார்கள். அப்போது எவனோ உரக்க வீரிட்டான். ஓர் ஆண்குரல் கொஞ்சங்கூட இரக்க மே இல்லாமல் வீரிட்டவனை அதட்டியது:

''இவனுக்கு இப்போது எல்லாம் ஒன்றுதான்!''

தான்யா கடைக்குப் போனதும் ஸெர்கேய் ஒரு கணம் யோசித்தான்: ''தற்கொலை செய்துகொள் பவனை எல்லாரும் ஏன் இகழ்கிறார்கள்? அவ னுக்கோ எல்லாம் ஒன்றுதான், எல்லாம் ஒன்று தான், எல்லாம் ஒன்றுதான்...''

மேல்கோட்டைப் பற்களால் கவ்வித் தோள் கள்மேல் போட்டுக் கொண்டான். கால்கள் அருவருக்கும் விதத்தில் நடுங்கின, முகத்தில் குளிர்ந்த வியர்வைத் துளிகள் வழிந்தன. ''என்னை மன்னித்துக்கொள், தான்யா. நான் குற்றவாளி அல்ல. வாழ்க்கை அப்படி அமைந்துவிட்டது. உனக்கு இதுவே மேலாயிருக் கும். ஓரிரு ஆண்டுகளில் நீ இதைப் புரிந்து கொள்வாய்.''

தெருக் கதவு சாத்திப் பூட்டியிருந்தது. ''வேண்டுமென்றா, அல்லது வழக்கமாகவே இப் படித்தானா?'' ஸெர்கேய் தோளால் மோதினான், கதவு திறக்கவில்லை. ''இதிலேகூட அதிர்ஷ்டம் இல்லை பார்!'' அறைக்குள் ஓடினான், மூலைக்கு மூலை அலைந்தான். வெறியில் ஜன்னல் சட்டத்தை ஆத்திரத்துடன் உதைத்தான். காரை பெயர்ந்து

சிதறிற்று, கண்ணுடி கண கணத்தது, ஜன்னல் புறக்கடையில் தடாரென்று விழுந்தது.

''நான் உனக்குக் கடிதம் எழுதி எல்லாவற்றை யும் விளக்கியிருப்பேன், உன்னிடம் மன்னிப்பு கோரியிருப்பேன். ஆனுல் என்னுல் இது முடிய வில்லை என்பது உனக்கே தெரியும். தான்யாக் கண் ணே, இனியவளே, என்னை மன்னித்துவிடு. நான் உனக்கு இடைஞ்சலாக இருக்க மாட்டேன். நீ என் செயலைக் கீழ்மையானது என்பாய், ஆனுல் நான் இதைச் செய்தாக வேண்டும். இந்தப் பாழாய்ப்போன வாழ்க்கையில் வேறு வழியே இல்லை.''

பூஷ்கின் வீதி முனையில் காற்று மேல்கோட் டைத் தோளிலிருந்து அகற்றப் பார்த்தது. ஸெர் கேய் மோவாயால் அழுத்தி, கோட்டைப் பறந்து போய்விடாமல் சிரமத்துடன் வைத்துக்கொண் டான். கடவை அடைபட்டிருப்பதைத் தொலை விலேயே அவன் கண்டான். மோட்டார்களின் வரிசைகள் ஹோட்டல் வரை நீண்டிருந்தன.

''எங்கேயோ ரயில் வண்டி வருகிறது. சரக்கு வண்டியா, பயணி வண்டியா? இந்த வழியாகத் தான் தான்யாவும் நானும் பூங்காவுக்குப் போவது வழக்கம். யாரேனும் சொல்லுவான்: 'இவனுக்கு இப்போது எல்லாம் ஒன்றுதான்...' இறந்த வன் அங்கவீனன் என்பதைக் கண்டதும், 'தொல்லை பொறுக்க மாட்டாமல் வந்து விழுந்திருக்கிறுன்' என்பான்... வலிக்காது, எனக்குத் தெரியும். உணர்வதற்கு நேரமே இருக்காதே.''

மார்புப் புறம் விரிந்த மேல்கோட்டுடன், தலை யில் தொப்பி இல்லாமல், ஸெர்கேய் கடவையை நோக்கி வேகமாகச் சென்றுன். காலில் முன்பு இருந்த வலி இப்போது தெரியவில்லை. அது

கட்டை போல் ஆகிவிட்டது, இன்னும் விரைவாக நடக்க இடைஞ்சலாய் இருந்தது. காற்று கோட்டுக்கைகளைப் படபடக்கச் செய்து ஏதோ வெறியுடன் அவற்றால் முதுகில் அடித்தது.

''தான்யா ஜன்னலைப் பார்த்து விஷயத்தைப் புரிந்துகொள்வாள். என் அருமைக் காதலி, உனக்கு நான் எத்தனை துயர்கள் விளைத்தேன்! இதுவே கடைசியானதாக இருக்கட்டும். மன்னித்துக் கொள்... நேர்த்தியான இந்த உலகம் எனக்குக் கடினமானதாக, பொறுக்க முடியாத அளவு சங்கடம் நிறைந்ததாகப் போய்விட்டது.''

நாடக மன்றக் கட்டிடத்துக்கு அப்பாலிருந்து டீஸல் எஞ்சின் கனத்த சீறல் சீறி, கரகரத்த நீண்ட சீழ்க்கை அடித்தது.

''ஒரு இருபது மீட்டர் தூரம் பாக்கி. சீக்கிரம்! சுரங்கத் தொழிலாளர்கள் 'கோழை!' என்பார்கள். நண்பர்களே, நான் கோழை அல்ல, இதை நீங்கள் அறிவீர்கள். உபயோகம் அற்றவனாக இருப்பது என்னால் முடியாது... என்னைப் புரிந்து கொள்ளுங்கள்.''

நகரப் பூங்காவில் விளையாட்டு இசை கீச்சிட்டது. மறு கணமே சக்கரங்களின் கடகடப்பு அதை அமுக்கிவிட்டது. ரயில் வண்டி கடவைக்குப் பாய்ந்து வந்தது. ''சரக்கு வண்டி'' என்று உணர்வு மழுங்கிய அசட்டையுடன் மனதில் குறித்துக்கொண்டான் ஸெர்கேய். பின்பு எதற்காக என்று தானே அறியாமல் தன்னைக் கடந்து சென்ற சக்கரங்களை எண்ணத் தலைப்பட்டான். அவன் முகத்தில் கண்ணீர் வழிந்தது. அவனோ, மளமளவென்று எண்ணினான்:

''ஒன்று, இரண்டு, மூன்று...'' — சக்கரங்கள் சரியாக எண்ணப்பட்டனவா அல்லவா என்பதை

ஏதோ மிக முக்கியமான விஷயம் சார்ந்திருப்பது போல் இருந்தது அவன் எண்ணிய விதம். ரயில் பெட்டிகளின் கனத்தால் தண்டவாளந்தாங்கிக் கட்டைகள் தரையை அழுத்தின. தண்டவாளங் களோ, விருவுள்ள பிரம்புகள் போல நடுங்கி வளைந்தன.

''உடனே துண்டாக்கிவிடும். குனிந்து முன்னே குதிக்க வேண்டும்... வேகமாக மட்டும் பாயக் கூடாது. தலை முன்னே இருக்கும்படி... ஐயோ, வாழ்வே! எதற்காக நீ என்னை இப்படி?...''

''வத்திப் பெட்டி இருக்குமா?''

ஸெர்கேய் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். வயது முதிர்ந்த ஒருவன் பக்கத்தில் நின்று கொண்டு, செவிட்டூமையிடம் பேசுவது போலக் கை ஜாடையால் தீப்பெட்டி வேண்டும் என்று கேட்டான்.

''எனக்கு அது எதற்காக?'' என்று வெளிறிய உதடுகளை அசைத்தான் ஸெர்கேய்.

அந்த ஆள் அவனைப் பின்பக்கம் சுற்றிக் கொண்டு நகர்ந்தவன், மேல்கோட்டுக் கையைத் தொட்டு விட்டு அப்பால் போகத் திரும்பினான். ஒரு பக்கம் சில அடிகள் எடுத்து வைத்தபின் திடீ ரென முழுச் சுற்று திரும்பி, ஸெர்கேய் அருகே ஓடி அவன் தோளை வெடுக்கெனப் பற்றினான்.

''முட்டாள்தனம் பண்ணாதே, தம்பீ! அங்கே எப்போது வேண்டுமானாலும் போய்க்கொள்ளலாம். மூளை புரண்டு விட்டதா? என் காரில் உட்காரு, வா!''

அவனுடைய சித்தத்துக்கு எதிராகச் செல்ல ஸெர்கேயுக்கு வலிமை இல்லை. எல்லாமே அவ னுக்கு ஒரு பொருட்டில்லாதவையாகப் பட்டன. அது வரை அவன் அறியாத உள், மன வெறுமை

அவனை ஆட்கொண்டது. டாக்ஸி டிரைவர் முதுகில் லேசாக அழுத்தித் தள்ள, அவன் காரை நோக்கி நடந்தான். தான் எங்கே இருக்கிறுன், எதற்காக, என்ன செய்யப்போகிறுன், இந்த அறிமுக மற்றவன் தன்னை எங்கே இட்டுச் செல்கிறுன் என்பது எதையுமே அவனுல் புரிந்துகொள்ள முடியவில்லை.

''உன் பெயர் என்ன? வீடு எங்கே இருக்கிறது?'' என்று தூண்டித் துளைத்தான் காரோட்டி. ஸெர்கேயோ, உணர்வற்ற கண்ணுடி விழிகளால் அவனை வெறிதே நோக்கி, பேசாதிருந்தான். தன் மூளையில் பனிக்கட்டி ஊசிகள் சுரீர் சுரீர் என்று பாய்வதையும் அவற்ருல் தனக்குக் குளிரோ, வலியோ, அச்சமோ உண்டாகாததையும் அவன் உணர்ந்தான். டாக்ஸி டிரைவரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லும் விருப்பம் கணப்போது ஏற்பட்டது. ஆனுல் அவற்றுக்கு என்ன பதில், எப்படிக் கூறுவது என்பது ஸெர்கேயுக்குத் தெரியவில்லை.

டிரைவர் காரை முடுக்கினுன். கார் இடத்தை விட்டு நகர்ந்து மறுபுறம் திரும்பி நகரத்துக்குள் பாய்ந்து சென்றது. அவர்கள் எங்கே, எவ்வளவு தூரம் சென்ருர்களோ, ஸெர்கேயுக்கு நினைவில்லை. டாக்ஸி நகரைக் கடந்து வெளியே சென்றதும், ''தான்யா வீடு திரும்பி உடைந்த ஜன்னலைப் பார்த்திருப்பாள்'' என்ற எண்ணம் நன்ருக நினைவில் பதியாத கனவின் துணுக்குப் போல, மூளையில் உதித்தது.

''நாம் எங்கே போகிறேம்?'' என்று சுயநினைவு அடைந்து வினவினுன் ஸெர்கேய்.

''மூளையைக் காற்ருடச் செய்ய!'' என்று கோபத்துடன் பதில் சொன்னுன் காரோட்டி.

ஒருநிமிடம் மீண்டும் மௌனமாகச் சென்றார்கள். டிரைவர் ஒரு சிகரெட்டை எடுத்து, கையால் உருட்டி, உண்டையாக்கி வெளியே எறிந்தான். ஸொர்கேயுக்குக் குளிர் நடுக்கத் தொடங்கிற்று. குளிர் உள்ளே எங்கோ தோன்றி, மெதுவாக நாற்புறமும் ஊர்ந்து உடல் முழுவதிலும் நிறைந்தது.

''என் மகன் கொல்லப்பட்ட போது நானுந்தான்...'' என்று திடீரெனத் தணிந்த குரலில் பேசத் தொடங்கினான் டிரைவர். ''அப்புறந்தான் நினைத்தேன்: நான் என்ன கோழைத்தனம் செய்கிறேன்? வித்தாலிக் உலகத்திலே செய்ய வேண்டியதை முடிக்காமலே போய்விட்டான், நானும் மனம் சோர்ந்து விடுவதா?... எனக்கே சொல்லிக் கொண்டேன்: 'திமொஃபேய், ஸ்மொலேன்ஸ்கிலிருந்து பெர்லின் போகும் வழியில் எத்தனை நண்பர்களை நீ பறிகொடுத்தாய்? நிறையப் பேரை. அவர்களுக்காக பாசிஸ்டுகளைப் பழி வாங்கினாயா இல்லையா? ஆகவே, ஆயுள் பூராவும் படை வீரனாகவே இரு! சண்டையில் பட்ட காயத்தைக் கட்டுவதுபோல நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு முன்னே போ... உயிர் வாழ்ந்து இரண்டு பேர் வேலையைச் செய்... தற்கொலை நிலைமையைச் சமாளிக்கும் வழி அல்ல'. ஆனாலும் மகன் போன பிறகு உயிர் வாழவே முடியாது போல் இருந்தது... அவன் என் ஒரே மகன்... என் இன்பமும் நம்பிக்கையும் எல்லாம் அவன்தான்... பத்தாம் கிளாஸ் படித்து முடித்திருந்தான்... நண்பனோடு மோட்டார் சைக்கிளில் போனான், அவ்வளவு தான்... அந்தப் பையனுக்குக் கால் முறிந்து போயிற்று, என் மகனோ... அப்புறம் மூச்சு விடவே இல்லை...''—டிரைவர் சற்று நேரம் பேசா

திருந்தான். மறுபடி சிகரெட்டை எடுத்தான், பைகளில் தொட்டுத் தடவிப் பார்த்தான், நெருப்புப் பெட்டி இல்லை என்று கண்டதும் சிகரெட்டைக் கசக்கி உருட்டினுன். ''நீ எப்படி இருக்கிருய்? யாரோடு?''

''மனைவியோடு.''

''அவள் என்ன, உன்னை விட்டுப் போய்விட்டாளா?''

''இல்லை, அவள் நல்லவள்.''

''ரொம்ப நாளாகவோ? கைகளைக் கேட்கிறேன்.''

''இந்த வருஷம்.''

''உன் வீட்டுக்காரி உன் கட்டில் பக்கத்திலேயே இருந்தாள், உன்னை விட்டு அகலவில்லை, உனக்குச் சாப்பாடு ஊட்டினுள், தண்ணீர் குடிப்பித்தாள்—அப்படித்தானே?''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''உன் மூஞ்சியில் அறைய வேண்டும், அது கூடப் போதாது! எப்படித் தெரியுமாம்... உனக்கு உன்மேலேயே இரக்கமாக இருந்ததாக்கும்? வீரன் தான்... வீடு எங்கே இருக்கிறது?''

''லெனின்ஸ்க்கிய் வீதியில்.''

வீட்டு வாயிலில் கார் நின்றது.

''நான் எவ்வளவு தர வேண்டும்?''

''பெண்டாட்டி முன்னே நீ மண்டியிட்டு மன்னிப்பு கேட்கவில்லையோ, உன் கழுத்தை முறித்து விடுவேன்!'' என்று கூறிவிட்டுக் கதவைத் திறந்தான் டிரைவர்.

வீட்டுக்குள்ளிருந்து பாய்ந்து ஓடி வந்தாள் தான்யா. அவள் முகம் வெளிறியிருந்தது, கண்கள் அழுகைக் கோலம் காட்டின. ஸெர்கேய் காரிலிருந்து இறங்கி தலையைக் குனிந்தவாறு பக்கத்தில்

நின்ருன். தான்யா தலையைத் திருப்பி அவனைக் கண்டுகொண்டாள்.

''ஸெர்கேய்!'' என்று வீரிட்டு அலறினுள்.

அவள் மெதுவாக அவன் அருகே வந்தாள், நேரந்தாழ்த்த, பொறுக்க முடியாத அளவு சோர்வுள்ள கை அசைப்பால் தலைக்குட்டையைக் கழற்றி அதை வழியில் நழுவ விட்டுவிட்டு ஸெர்கேயின் மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டாள்.

''அட என் தறிகெட்டவனே...''

அவள் தலையை நிமிர்த்திஞள். ஸெர்கேய் அவளுடைய விழிகளைப் பார்த்து முகம் சிவந்தான். வெளியிடப்படாத வேதனையும் அநியாயமான மனப்புண்ணும் அனல்வீசும் கடிந்துரையும் அந்த விழிகளில் சுடர்ந்தன.

''துரோகி!''—தான்யா லாகவமின்றிக் கையை வீசி ஸெர்கேயின் கன்னத்தில் பளாரென்று ஒரு அறை விட்டாள்.

ஓடப் போனவள் உடனே திரும்பி, கணவனுடைய தலையைப் பாய்ந்து தழுவி, அதைத் தன் மார்புற அணைத்துக் கொண்டு, கண்ணீர் தொண்டையை அடைக்கக் கிசுகிசுத்தாள்:

''விரைவு மருத்துவ உதவி நிலையத்திலும் மிலீஷியாவிலும் விசாரித்தேன்... உனக்கு என்மேல் அன்பு இல்லை, ஸெர்கேய்... சொல்லு, எதற்காக நீ இப்படி... நான் உனக்கு ஏதேனும் குற்றம் செய்தேனு?''

## 4

கார்க்கவ் நகரில் உள்ள செயற்கை உறுப்புக்கள் தயாரிக்கும் தொழிற்சாலையிலிருந்து நவம்பர் மாதத் தொடக்கத்தில் ஸெர்கேயுக்கு

அழைப்பு வந்தது. வேண்டிய தஸ்தாவேஜுகள் எல்லாம் தொனேத்ஸ்கிலிருந்தே அங்கே அனுப்பப் பட்டிருந்தன. தனக்குச் செயற்கை உறுப்புக்கள் தயாரிக்கத் தொழிற்சாலை இணங்குமா இல்லையா என்று தெரியாமல் ஸெர்கேய் தவித்துக்கொண் டிருந்தான். ''செயற்கை உறுப்புக்களைப் பொருத்து வதற்கு இடமே இல்லையே! தோளுக்குப் பின்னே யோ, கழுத்திலோ வேண்டுமானால் பொருத் தலாம்... இவ்வளவு உயரத்தில் துணிக்கப்பட்ட கைகளுக்குப் பதில் செயற்கைக் கைகள் தயாரிக் கப்படுவதில்லை'' என்று மருத்துவமனையில் சொல்லி யிருந்தார்கள். இப்போதோ இந்தக் கடிதம்: ''தோட்களுக்குச் செயற்கை உறுப்புக்கள் தயாரிக் கும் விஷயம் சம்பந்தமாக கார்க்கவ் நகருக்கு வரும்படி உங்களை அழைக்கிறோம்.''

புறப்படுவதற்குத் தலைக்கு நாள் இரவு முழு வதும் ஸெர்கேயும் தான்யாவும் கண் மூடவே இல்லை. செயற்கைக் கைகள் எப்படி இருக்கும், அவற்றால் என்ன செய்ய முடியும் என்றெல்லாம் கற்பனை செய்து பார்த்தார்கள். ''நீங்கள் வந்தது வீண், எவ்வகையிலும் உங்களுக்கு உதவ எங் களால் முடியாது'' என்று அங்கே, பழக்கமற்ற நக ரத்திலே சொல்லிவிட்டார்களானால் என்ன செய் வது என்ற பயம் வேறு அவர்களை வாட்டியது.

மறு நாள் பலபலவென்று விடியும் தறுவாயில் கணவனும் மனைவியும் ஆவலை அடக்கிக் கொண்டு ரயிலடிக்குப் புறப்பட்டார்கள்.

கார்க்கவ் நகருக்கு அவர்கள் பிற்பகலில் போய்ச் சேர்ந்தார்கள். தொழிற்சாலை ரயில் நிலை யத்துக்கு எதிரிலேயே, ஒரு ஐநூறு மீட்டர் தொலைவில் இருந்தது.

சாம்பல் நிற இரண்டடுக்குக் கட்டிடம். பழைய குடியிருப்பு வீட்டில் போலச் சிறு ஜன்னல்கள்.

பழுப்பு நிறக் கதவு. அதற்கு முன்னே உலர்ந்த பூச்செடிகள் உள்ள சிறு திடல். காலி பெஞ்சுகள். —எதிர்பார்ப்பும் நம்பிக்கையின்மையும் கலவரமும் நிறைந்த ஒரே பார்வையில் ஸெர்கேய் கண்டவை இவையே.

வாயிலிலிருந்து ஒரு ஐந்து மீட்டர் தூரத்தில் அவன் சற்று நின்ருன். தான்யா அவன் கோட்டுக் கையைப் பிடித்து இழுத்தாள்.

''என்ன நீ, ஸெர்கேய்?''

''பொறு, கொஞ்சம் மூச்சுவிட நேரம் கொடு.''

''பயமாய் இருக்கிறதோ?'' என்று மறைக்காமல் கேட்டாள் தான்யா.

''ஆமாம்'' என்று அவனும் மனத்தில் உள்ளதை வெளியிட்டான்.

''நாம் தான் வேண்டியது பட்டாகிவிட்டதே!'' என்று குதூகலமாகப் புன்னகை செய்தாள் தான்யா.

''இந்தக் கதவின் மறுபுறம் நமக்காக என்ன காத்திருக்கிறது? நம்பிக்கையை மாய்த்துவிடுவார்களா, அல்லது...?'' என்று தணிந்த குரலில் சொன்ஞன் ஸெர்கேய்.

மூக்குக் கண்ணுடி அணிந்த நரைத் தலையரான மருத்துவர், காகிதங்களிலிருந்து பார்வையை அகற்ருமலே வழக்கமான சொற்களில் கூறிஞர்:

''கோட்டையும் சட்டையையும் கழற்றுங்கள். உங்களுக்கு என்ன?''

''இரண்டு கைகளும் தோளின் மேற்பகுதி வரை துணிக்கப்பட்டுவிட்டன. வலது பாதத்தின் மேற்பரப்பில் அகலமான தீச்சூடு. அதஞல் இயக்கம் அளவறுக்கப்பட்டிருக்கிறது'' என்று ஒரே மூச்சில் கடகடவென்று ஒப்பித்தான் ஸெர்கேய்.

''நீங்கள் லுகான்ஸ்கிலிருந்தா?'' — கண்ணுடியைக் கழற்றிவிட்டு மேஜையின் பின்னிருந்து எழுந்தார் மருத்துவர்.

''ஆமாம். ரயிலிலிருந்து இறங்கி நேரே வருகிறோம்'' என்றாள் தான்யா.

யாரிடம் பேசுவது என்று தெரியாமல் மருத்துவர் வாய்க்குள் முணுமுணுத்தார்: ''நல்லது. உங்களுக்கு விபத்து எங்கே நேர்ந்தது?''

''சுரங்கத்தில்'' என்று தொண்டையைக் கமறினான் ஸெர்கேய்.

''உங்கள் வலது தோளுக்குச் செயற்கை உறுப்பு தயாரிப்போம். இடது தோளைப்பற்றிய பேச்சுக்கே இடமில்லை. கை மிக உயரத்தில் துணிக்கப்பட்டிருக்கிறது. முன்னேற்பாடாக உங்களுக்கு அறுவை செய்வது அவசியம். உங்கள் எலும்பு சரியானபடி இல்லை. நரம்பு நுனிகள் தோலின் மேற்புறம் சென்றிருக்கின்றன. இந்த நிலைமையில் செயற்கை உறுப்பைப் பயன்படுத்த உங்களால் முடியாது.''

''அறுவை செய்யாமல் தீராதா?'' என்று கவலையுடன் கேட்டாள் தான்யா.

''தான்யா!'' என்று கண்டிப்புடன் குறுக்கிட்டான் ஸெர்கேய். ''அவசியம் என்றால் அவசியந்தான்.'' பின்பு மருத்துவரிடம் ''நான் இசைகிறேன்'' என்றான்.

அன்று மாலையில் ஸெர்கேய் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டான். தான்யா லுகான்ஸ்க் திரும்பக் கண்டிப்பாக மறுத்துவிட்டாள். மருத்துவமனையின் அருகாமையிலேயே ஓர் அறை வாடகைக்கு எடுத்துக்கொண்டு கார்க்கவ் நகரிலேயே தங்கிவிட்டாள் அவள்.

சலிப்பூட்டும், நீண்ட மருத்துவமனை நாட்கள்

மறுபடி நீடித்தன. செய்யப்படவிருந்த அறுவை ஸெர்கேயுக்கு அச்சம் ஊட்டவில்லே என்று சொல்ல முடியாது. இல்லே, அவன் பயப்படத்தான் செய் தான். முந்திய அறுவைகளே எல்லாம் உள்நடுக்கத் துடன் நினேவுகூர்ந்தான். பிரமாண்டமான பல்பு களின் பிரகாசமான வெளிச்சம், அறுவைக் கூடத்தின் நசுக்கும் நிசப்தம், வலி தெரியாமல் செய்யும் மருந்து நிறைந்த இரத்தத்தின் வெறி யூட்டும் அலே, மேஜையிலிருந்து திமிறிக்கொண்டு அகன்று, ''போதும்! மனிதனுடைய பொறுமைக் கும் ஓர் எல்லே உண்டு அல்லவா?'' என்று கத்த வேண்டும் போலச் செய்யும் தாளமுடியாத வலி —இவை எல்லாம் முந்திய அறுவைகளின் அங்கங் களாக விளங்கின.

செயற்கை உறுப்பு பெறலாம் என்ற ஒளிவீசும் நம்பிக்கைதான் பயத்துடன் போராடி அதை அடக்க உதவிற்று. இந்தக் கடைசி அறுவையின் அவசியத்தையும் முக்கியத்துவத்தையும் முன் ஒரு போதும் இல்லாத அளவு தெளிவாக இப்போது புரிந்துகொண்டான் ஸெர்கேய். ஏதேனும் செயல் புரியும் வாய்ப்பை அது ஒன்றுதான் அளிக்க முடி யும். ஸெர்கேய் சட்டெனக் காரியம் முடிய வேண் டும் என்று அவசரப்பட்டான். உடனேயே அறு வைக் கூடம் சென்று, மேஜைமேல் படுத்து, வலி, திகில் எல்லாவற்றையும் சகித்துக்கொள்ள அவன் தயாராய் இருந்தான். எப்படியாவது சீக்கிரம் செயற்கைக் கரம் கிடைத்துவிட்டால் போதும் என்று இருந்தது அவனுக்கு.

வாரம் இரு முறைதான், அதுவும் கண்டிப்பாக ஒதுக்கப்பட்ட நேரத்தில் மட்டுமே நோயாளிகளே வெளியார் வந்து பார்க்கலாம் என்பது மருத்துவ மனேயில் அனுசரிக்கப்பட்ட விதி. தான்யா மட்

டும் எப்படியோ முயன்று நாள் தோறும் கண வனைப் பார்த்துப்போக அனுமதி பெற்ருள்.

ஸெர்கேய் பகல் முழுதும் ஜன்னல் ஓரமாக நின்று, நடைபாதை வழியே மருத்துவ மனையைக் கடந்து சென்ற ஜனக் கூட்டத்தின் பெருக்கைப் பார்த்துக் கொண்டிருப்பான். அந்த நேரத்தில் அவன் எதைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தாலும் சரியே, அவன் விழிகள் மட்டும் கூட்டத்தின் மீது இயந்திரரீதியாக வழுகிச் சென்று அதில் மனைவி இருக்கிருளா என்று தேடும். மனித வெள்ளச் சுழலில் பச்சைத் தலைக்குட்டை தென்பட்டால் (அதே போன்ற நூறு தலைக்குட்டைகளுக்கு நடுவே கூட அதை அவன் பிசகாமல் எப்போதும் அடையாளம் கண்டுகொள்வான்) அவனுடைய கண்கள் மகிழ்ச்சியால் சுடரும், இருதயம் அதிக விரைவாகத் துடிக்கும். குதூகலமாக மேல் நோக்கி வளைந்த மூக்கு உள்ள அந்த இனியவள் ஒருத்தியைத் தவிர உலகிலுள்ள மற்ற யாவற்றையும் அவன் அப்போது மறந்துவிடுவான்.

தான்யா வெள்ளை மேலங்கி அணிந்து கூச்சப் புன்னகை மிளிர வார்டுக்குள் வருவாள். அவளோடு கூடவே ஒளி வீசும் சூரியன் வந்து, சுவர்களை நான்கு புறமும் அதிகாரத்துடன் நகர்த்தி விசாலமாக்கி, எல்லோர்மீதும் எல்லாப் பொருள்கள்மீதும் அன்பு கசியும் இதமான கதகதப்பையும் ஒளியையும் பொழிவது போல அவனுக்குத் தோன்றும். ஒருவரை ஒருவர் கண்டதுமே களித்துப் பூரிக்கும் அந்த இளந் தம்பதியரைப் பார்க்கும்போது, பிரசண்டமான வாழ்க்கைச் சூறுவளி அவர்கள் மீது வீசி அலைத்தாட்டியது என்று கற்பனை செய்யவே முடியாது. லேசாக நரையோடத் தொடங்கிய முடியினனுன இந்த இளைஞனும் இருபது வயது யுவதியும் மனிதச் சக்திக்கு மீறிய

கொடிய வேதனையையும் துன்பங்களையும் பட்டுக் கடந்த பின், படிகம் போன்ற தூய்மையும் அசாதாரண மென்மையும் மனிதாபிமான மாண்பும் திகழும் உணர்ச்சிகளை ஒருவர்மேல் ஒருவர் நிலையாகக் கொண்டிருக்கிறார்கள் என்று நம்புவதே கடினமாய் இருந்தது.

''நீ அதிர்ஷ்டசாலி அப்பா, ஸெர்கேய்!'' என்று அவனுடைய புதிய நண்பர்கள் பொறாமையுடன் சொல்லுவார்கள்.

''மற்றதெல்லாம் எப்படியோ, ஆனால் அதிர்ஷ்டம்மட்டும் என் பங்குக்கு அபரிமிதமாகக் கிடைத்திருக்கிறது—ஐந்து பேருக்குக் காணும் போல!'' என்று அவர்களுடைய பொறாமைக்கு என்ன காரணம் என்பதை அறியாமல் கிண்டலாகப் பதில் அளிப்பான் ஸெர்கேய்.

''கைகள் என்ன பிரமாதம்... உன்னையும் தான்யாவையும் எங்கள் கண்களால் பார், அப்போது தெரியும். காதல் என்பதும் அதிர்ஷ்டந்தான்.'' —பேசியவன் சிந்தனையில் ஆழ்ந்து சற்று மௌனமாய் இருந்தான். பின்பு சொன்னான்:

''சிலருக்குக் கைகளும் கால்களும் ஒரு குறைவு இல்லாமல் இருக்கின்றன. இருந்தாலும் அவர்களுக்குள் ஒத்த உணர்வு ஏற்படுவதே இல்லை. ஒருவர் வாழ்க்கையை மற்றவர் உருப்படவிடாமல் அடிக்கிறார்கள்... அதிலும் விஷயம் என்னவென்றால்... அவர்கள் இதைக் கவனிப்பதே இல்லை...''

அறுவைக்காகக் குறித்த நாளும் நேரமும் வர வர அருகே நெருங்கிக்கொண்டிருந்தன. அறுவைக்கு முந்திய பகுப்பாய்வுகள் முடிந்துவிட்டன, ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டுவிட்டன. அறுவை

எத்தனை மணிக்கு நடக்கும் என்று தான்யாவுக்குத் தெரிவிக்க ஸெர்கேய் தயங்கினான். ஏற்கனவே நிம்மதியற்ற அவளுடைய வாழ்க்கையில் மேற்கொண்டு கலக்கம் ஏற்படுத்த அவனுக்கு மனம் வரவில்லை. அதே சமயம், சொல்லாவிட்டால் அவள் கோபித்துக் கொள்வாள் என்றும் ஸெர்கேய் உணர்ந்தான். ''என் மேல் கோபித்துக் கொள்ளட்டும், பரவாயில்லை. அறுவைக் கூடக் கதவருகே காதை நீட்டிக் கொண்டு நின்று தொல்லைப்படுவதை விட அவளுக்கு இதுவே மேல்'' என்று கடைசியில் முடிவு செய்தான்.

அறுவை நாளன்று தான்யா வழக்கத்தை விட முன்னதாகவே மருத்துவமனைக்கு வந்தாள். புன்னகையுடன் வார்டுக்குள் ஓடியவள் வாயிலருகே திகைத்து நின்றுவிட்டாள். ஸெர்கேய் அவளுக்குப் பழக்கமான பாங்கில் படுத்திருந்தான். அவன் முகம் வெளிறி இருந்தது. அவன் மார்பு மேலாகச் சிலுவை வடிவத்தில் கட்டு போடப்பட்டிருந்தது.

''இது என்ன, ஸெர்கேய்?'' என்று மெல்லெனக் கிசுகிசுத்தாள்.

''எல்லாம் சரியாய்த்தான் இருக்கிறது! இப்போதுதான் அறுவைக் கூடத்திலிருந்து வந்தேன்'' என்று பலவீனமாகப் புன்னகை செய்தான் ஸெர்கேய்.

''அப்படித்தான் நினைத்தேன். காலை முதலே மருத்துவமனை என்னைக் காந்தம்போலக் கவர்ந்து இழுத்தது. இங்கே ஏதோ சரியாய் இல்லை என்று உணர்ந்தேன்.''

''எது சரியாய் இல்லை? உயிரோடு இருக்கிறேன்... புன்னகை செய்யக்கூட என்னால் முடியும்...''

''அறுவை... எப்படி...?''

''நன்ருக நடந்தது, தான்யா, நன்ருக. கெடுதலாக இருக்க முடியுமா எங்கேனும்?''

''வலித்ததோ?''

''முணுக்கென்றுகூடச் சொல்லாமல் தாங்கிக் கொள்ள முடிகிறதா இல்லையா என்று பார்த்தேன். உதவிமருத்துவனே, சனியன் பிடித்தவன், வலிநீக்க மருந்து செலுத்த ஓயாமல் மறந்து கொண்டிருந்தான்.''

''நீ சொல்வது தானே?''

''சொன்னேன். அவன் சிரித்தான். 'பாருங்கள், டாக்டர், இன்று உங்களுக்கு இரண்டு உதவியாளர்கள்' என்ருன். டாக்டர் சொன்னுர்: 'நண்பரே, இந்த மாதிரி நோயாளிகள் சிகிச்சை விவரங்களை நம் அளவே அறிந்தவர்கள். சொந்த உடம்பில் நடைமுறைப் பயிற்சி பெற்றவர்கள் இவர்கள்.''

மருத்துவ மனையில் பகல் உணவு வேளை. தான்யா ஸெர்கேயின் பக்கத்தில் உட்கார்ந்து அவனுக்கு ஊட்டிக் கொண்டிருந்தாள். சாப்பாட்டுக்காக ஒதுக்கப்பட்ட நேரத்தை அவர்கள் எப்போதுமே இழுத்தடிப்பார்கள்—அதிக நேரம் இருவரும் சேர்ந்து இருக்கலாம், உரையாடலாம், அல்லது ஒன்றும் பேசாமல் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருக்கலாம் என்பதற்காக.

நெடிய, பருத்த மாது ஒருத்தி அறைக்குள் வந்து நோயாளிகளைப் பார்வையிட்டாள்.

''பெத்ரோவ் இங்கே இருக்கிருரா?''

''ஆம், நான்தான்...''—ஸெர்கேய் எதனுலோ மிரண்டு போனுன்.

''உங்களைக் கீழே வரச்சொல்லுகிருர்கள், செயற்கை உறுப்பைப் போட்டுப் பார்ப்பதற்காக.''

''எதை?''

''செயற்கை உறுப்பை.''

''அதற்குள் தயாராகிவிட்டதா?'' என்று தன் காதுகளையே நம்பாமல் கேட்டான் ஸெர்கேய்.

''இப்போதுதான் முதல்தரம் ஆர்டர் கொடுக்கிறுயா?''

''இல்லே, வாழ்நாள் பூராவும் செயற்கை உறுப்புக்களுக்கு ஆர்டர் கொடுப்பதிலேயே ஈடுபட்டிருந்தேன்'' என்று சீறிஞன் ஸெர்கேய்.

இதோ, ஒரு நிமிடத்தில் அவன் கீழே முதல் மாடிக்குப் போவான். அங்கே ஒரு கரத்தைக் காண்பான். உயிரற்ற, செயற்கையான அந்தக் கரம், தசைப் பிடிப்புள்ள, வலுவான இயற்கைக் கரத்தின் இடத்தில் பொருந்திக்கொள்ளும். அதைத் தன் உடம்பின் அங்கமாக அவன் ஏற்றுக் கொள்ள வேண்டும், அதற்குப் பழக வேண்டும். —ஸெர்கேயால் இதை எல்லாம் நம்பவே முடியவில்லே. தான்யாவை மிரண்டு நோக்கி, தழுதழுப்புடன் கேட்டான்:

''என்ன செய்வது, தான்யா?''

செயற்கைக் கரம் முழங்கையில் மடக்கப்பட்டு, கறுப்புக் கையுறை அணிவிக்கப்பட்டு மேஜை மேல் கிடந்தது. அளவுமீறி நீளமாய் இருந்த கட்டைவிரல் ஒரு நுனியால் சுட்டு விரலேப் பாங்கின்றி அழுத்திக்கொண்டிருந்தது. இதனுல் செயற்கைச் சிட்டிக்கை உருவாகியிருந்தது. முழங்கையிலிருந்து நீண்டிருந்த வார்கள் தோள்மட்டத்தில் சிக்கலான உண்டையாகப் பின்னிக்கொண்டிருந்தன. மேலே, முழங்கை மடங்கிடத்தில் நிக்கல் முலாம் பூசிய சுரை பளிச்சிட்டது.

''சுரை கழன்றுவிட்டாலோ?'' என்ற பைத்தியக்காரத் தனமான எண்ணம் தோன்றியது.

கறுப்பு முன்தாங்கி அணிந்த ஆள் நாற்காலியிலிருந்து எழுந்திருந்து செயற்கை உறுப்பைக் கையில் எடுத்தான். அது கிளிக்கிட்டு முழங்கையை நிமிர்த்து நேராயிற்று. அப்போது உள்ளங்கை மேற்புறம் திரும்பிற்று. திடீரென்று உண்டான பகைமை உணர்ச்சியுடன் ஸெர்கேய் சொன்னான்: ''என் விரல்கள் இவற்றைவிடக் குட்டை...''

''இது போட்டுப் பார்ப்பது தான்! ஏதேனும் சரியாய் இல்லை என்றால் கூச்சப்படாமல் சொல்லு. அப்புறம் குறை சொல்லுவதற்கு இடம் வைக்க வேண்டாம். இல்லாவிட்டால் நீங்கள் எப்பேர்ப்பட்ட ஆட்கள்!.. சீக்கிரம் கிடைக்க வேண்டும் என்பதற்காகச் சரி சரி என்பீர்கள், அப்புறமோ, இது நொட்டை அது நொள்ளை, உரசுகிறது, இறுக்குகிறது, நழுவிவிட்டது என்று அடுக்குவீர்கள்.''

''நான் முதல் தடவை...''

''ஒருபோதும் பார்த்தது இல்லையா?''

''அவசியம் ஏற்படவில்லை...''

''அப்படியானால் கவனித்துப் பார். இந்த இழுப்பு விரல் அழுத்தத்தைத் தளர்த்துகிறது. இதோ, இப்படி''—செயற்கை உறுப்பு நிபுணன் தோல் நாடாவைப் பின் இழுத்தான். கட்டை விரல் சுட்டு விரலிலிருந்து அகன்று, பின்பு சிறு கிளிக்கொலியுடன் சிட்டிகை வடிவாக இணைந்து கொண்டது. ''தோளை முன்னே அசைத்தால் செயற்கைக் கரத்தின் முழங்கை மடங்கும். இயந்திர நுட்பம் எல்லாம் இவ்வளவேதான்.''

''புரிகிறது'' என்று ஒன்றுமே விளங்காமல் சொல்லிவிட்டு மூக்கை உறிஞ்சினான் ஸெர்கேய்.

அறுவை நடந்ததற்குப் பிந்திய இரவுகளில் மிக நீண்ட நேரம் தன் மனக் கண் முன் காட்சி அளித்த, விகுவும் எளிதாக இயங்கும் தன்மை

யும் கொண்ட நேர்த்தியான செயற்கைக் கரம் வெறும் கனவே என்று இப்போது ஸெர்கேய் கண்டான். ''ஆனாலும் செயற்கைக் கரம் என்று அழைக்கப்படும் இந்தப் பண்படாத கருவி கொஞ்சமாவது உதவலாம் ஒருவேளை...''

செயற்கைக் கரத்தை மாட்டிக்கொண்டதும், உலோகம், எருதுத் தோல், இவற்றின் உயிரற்ற, விலக்கித் தள்ளுகிற குளிரை உணர்ந்தான். அந்தக் குளிர் மூளையின் தொலைதூர உயிரணுக்கள் வரை புகுந்தது, இதயத்தை உறையச் செய்தது, தன்னிலிருந்து கொடூரமாக விலக்கித் தள்ளியது. பொருத்தம் இன்மையும் துவேஷமும் பகைமையும் நிறைந்த இந்த விளங்காச் சவாலை ஏற்று, ஸெர்கேயினது உடலின் ஒவ்வோர் உயிரணுவும் செயற்கை உறுப்புக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்தது, அவ்வளவே கொடூரமாக அதை விலக்கித் தள்ளியது. உடலின் உயிரணுக்கள் செயற்கை உறுப்பை ஏற்றுக்கொள்ள மறுத்ததோடு நில்லாமல் அதை அருகே அண்ட விடவே மாட்டோம் என்றன. இந்தக் கருவியைக் கழற்றி எறிந்து விட்டுத் தூரத்தில் ஓடிப் போய்விடவேண்டும் என்பதே ஸெர்கேயுக்கு உண்டான முதல் விருப்பம். ''ஆனால் என்ன தான் செய்வது? வேறு எதுவுமோ இல்லை. ஒருவேளை இதற்கு நான் பழகிவிடலாம்...''

''பாந்தமாய் இல்லையோ?'' என்று அனுதாபத்துடன் கேட்டான் கம்மியன். ''அன்புத் தம்பீ, எல்லாருக்குமே ஆரம்பத்தில் இப்படித்தான்இருக்கும். செயற்கை உறுப்புக்குப் பழக வேண்டும்.''

''நீண்ட காலமா?''

''அவரவர் போக்குப்படி. சிலர் சீக்கிரம் பழகிவிடுவார்கள், வேறு சிலருக்கு நாள் செல்லும். இன்னும் சிலரோ பழகவே முடியாமல் விட்டு

விடுவார்கள். அவதிப் படுவார்கள், சள்ளேப்படு வார்கள், மனக் கோளாறு வந்துவிடும்—செயற் கை உறுப்பை அடுப்பில் எறிந்துவிடுவார்கள்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன? எங்களே, செயற்கை உறுப்பு தயாரிப்பவர்களே, குறை சொல்லுவார்கள். நீயே சொல்லேன்: எங்கள்மேல் என்ன குற்றம்? இயற்கை நியதி அப்படி.''

''நான் எறிந்துவிட மாட்டேன். எனக்கு வேலே செய்ய வேண்டும். தவிர, வேண்டாம் என்ருல் இங்கே வந்திருப்பானேன்?''

''நீ சரியாகச் சொன்ஞய், வேலேசெய்ய வேண் டும் என்று. வேலே வெட்டி இல்லாவிட்டால் பைத் தியம் பிடித்துவிடும். இப்படித்தான், ஒரு மூன்று மாதங்களுக்கு முன்ஞல் இங்கே வந்திருந்தான் ஒரு ஓடுகாலி. மணிக்கட்டுகள் வெட்டி அகற்றப் பட்டிருந்தன. அடே அப்-பப்-பா! அவன் படுத் தாத பாடு இல்லே! எப்போது பாரு, குடியும் கூச்சலும் அடிதடியும்தான்! அட சனி, போய்த் தொலே என்று மருத்துவ மனேயிலிருந்து விரட்டி விட்டோம்! அவஞே, செயற்கைக் கைகளே வாங்கிக் கொள்ளக்கூட வரவில்லே. எனக்குத் தோன்று வது இதுதான்: அவை அவனுக்குத் தேவையே இல்லே. வீஞக எங்கள் உயிரை வாங்கிஞன்!''

''எனக்கு மணிக்கட்டுகள் மட்டுந்தான் இல்லே என்ருல்... வெட்டி எறிந்துவிட்டார்கள் பாருங் கள், மேலே போக இடமே இல்லாதபடி'' என்று பெருமூச்செறிந்தான் ஸெர்கேய்.

''நீ மனம் சடையாதே'' என்று உற்சாகமூட்டி ஞன் கம்மியன். ''மனிதன் கைகளோடு தன்னே யும் பறி கொடுத்துவிடக் கூடாது, அதுதான் முக்கியம். அதுதான் முதல் பிரச்சினே! கைக

ளுக்கு என்ன!... காரியம் ஏதாவது எப்போதுமே கிடைக்கும். விருப்பம் மட்டும இருக்க வேண்டும். அதோடு...'' என்று கையை முட்டி பிடித்து ஆட்டிஞன் கம்மியன். ''அதோடு இதுவும்... புரிந்ததா?''

ஸெர்கேய் வீடு திரும்பிஞன். ரயில் பயணத்தின் போதே அவன் செயற்கைக் கரத்துக்கு மான சீகமாகப் பழகிவிட்டான்.

தான்யா அவன் பக்கத்தில் உட்கார்ந்து இன்பம் ததும்பும் கண்களால் பார்த்துக் கொண்டிருந்தாள். தன் உள மகிழ்ச்சியை மறைக்க அவளால் முடியவில்லே. ''அறுவைகள் எல்லாம் பழங்கதை ஆகிவிட்டன. நாம் வீட்டுக்குப் போகிருேம். செயற்கைக் கரம் தயாராகிவிட்டது. எல்லாம் மங்களமாகவே இருக்கும்!''—இவ்வாறு சொல்லியது அவளுடைய ஒளி வீசிய தோற்றம்.

ரயில் வண்டி மாலேயில் லுகான்ஸ்க் சேர்ந்தது. நகர்மீது கவிந்திருந்தன கனத்த கூதிர்கால மேகங்கள். குளிர் மழை தூறிக்கொண்டிருந்தது. புறப்பட்ட நாளில் போலவே இன்றும் கால் நடையாகச் செல்லத் தான்யாவுக்கு ஆசையாய் இருந்தது. ஆஞல் விரைவில் வீடு போய்ச் சேர ஸெர்கேய் விரும்புவதைக் கண்டு தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டு டாக்ஸி பிடித்தாள்.

கூடிய விரைவில் வீடு போய்ச் சேர ஸெர்கேய் உண்மையாகவே ஆவல் கொண்டிருந்தான்.

இல்லாத கைகளில் பொறுக்க முடியாத வலி ஏற்படுவதுபோன்ற பிரமை, செயற்கைக் கரத்துக்குப் பழகுவது லேசல்ல என்று கம்மியன் சொன்னதை உறுதிப்படுத்திற்று. செயற்கை

உறுப்பை முடிந்தவரை விரைவில் கழற்றி எறிந்து விட வேண்டும் என்னும் விருப்பம் நிமிடத்துக்கு நிமிடம் அதிகத் தீவிரமாயிற்று, அதை அடக்கு வது மேலும் மேலும் கடினமாயிற்று. செயற் கைக் கரத்தைக் கழற்றியதுமே, தன் விரல்களி லும் முழங்கைகளிலும் தசைகளிலும் ஏற்பட் டிருந்த காந்தும் வலி அடங்கி அமைதி அடைந்து விடும், இல்லாத மூட்டுக்கள் திருகிக் கழல்வது நின்றுவிடும், உடல் முழுவதையும் பிணித்திருந்த சுமை உணர்வு மறைந்துவிடும் என்று ஸெர்கே யுக்குத் தோன்றியது.

''இது இவ்வளவு குரூரமானதா!'' என்று நினைத்துக்கொண்டான்.

இரவில் வெகு நேரம் வரை அவனுக்கு உறக் கம் பிடிக்கவில்லை. எந்தப் பக்கம் திரும்பிப் படுத் தாலும் சௌகரியமாக இல்லை போலத் தோன் றவே நிம்மதியின்றிப் புரண்டுகொண்டிருந்தான். வலி எப்போது அடங்கும் என்று காத்திருந்தான். அவையோ, அடங்குவதாகக் காணோம். மான சீகமாக முட்டிகளை இறுக்கினான், தளர்த்தினான். தோளின் அருகில் தசைநார்கள் விரைப்படை வதையும் தோலை வலிக்கும்படி இழுப்பதையும் உணர்ந்தான்.

கார்க்கவ் அறுவைக்குப் பின் வலது கையின் கற்பனை நடுவிரல் அவன் விருப்பத்துக்குக் கீழ்ப் படிய வெளிப்படையாக மறுத்தது. அது கட்டை விரலுடன் இணைந்துவிட்டது போல் இருந்தது. அதைப் பிரிப்பதற்கு ஸெர்கேய் செய்த எல்லா முயற்சிகளும் வீணாயின. மோதிர விரலில் நகம் இருக்கும் உணர்வு மறைந்து விட்டது. கடந்த சில நாட்களாக அது கடுமையாக வலித்தது, அதி லிருந்து நகம் மெதுவாகப் பிய்த்து அகற்றப்பட்

டது போல் இருந்தது. இப்போது வலி போய் விட்டது, கூடவே நகம் இருக்கும் உணர்வும் போய்விட்டது. வெட்டி அகற்றப்பட்ட கைகளின் உணர்வு ஒரேயடியாக, ஆயுள் முழுவதற்கும் மறைந்து விடக் கூடும் என்று மருத்துவர்களின் பேச்சிலிருந்து ஸெர்கேய் தெரிந்துகொண்டிருந் தான். தனக்கு அப்படி ஏற்பட்டுவிடுமோ என்று பயந்தான். இதோ ஆறு மாதங்களாக அவனுக்குக் கைகள் இல்லை, ஆனாலும் உணர்வில் அவை உயிர்த் திருந்தன, இரவுகளில் கனவில் வந்தன, குழந்தைப் பருவத்திலும் பிந்தைய ஆண்டுகளிலும் ஏற்பட்ட வலிகள் சிராய்ப்புக்கள் எல்லாம் இப்போதும் அவற்றில் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. இடது கைச் சுட்டு விரலையும் அதில் மடங்கிடத்துக்குக் கீழே இருந்த வெட்டுக் காய வடுவையும் அவன் மிகத் துலக்கமாக உணர்ந்தான்.

எட்டு வயதுப் பையனாய் இருக்கையில் பேனாக் கத்தியை வைத்து விளையாடும் போது அவன் விரலில் காயம் பட்டது. சிறுவன் ஸெர்கேய் மிக வும் திகில் அடைந்து காது செவிடுபடும்படியான அலறலுடன் அம்மாவிடம் ஓடினான்:

''விரலை வெட்டிக் கொண்டுவிட்டேன். இப் போது என்ன ஆகும்?''

ஆனால் எல்லாம் சரியாய்ப் போயிற்று. விரல் காயம் ஆறிவிட்டது. முழைப்பு போன்ற வடு மட்டுந்தான் எஞ்சியிருந்தது.

இப்போது, கைகள் வெட்டி அகற்றப்பட்டு ஆறு மாதங்கள் கழிந்த பிறகு, அவற்றை மறுபடி இழப்பது பயங்கரமாய் இருந்தது. கைகள் இருப்பது போன்ற உணர்வு பற்றித் தான்யா விடம் சொல்ல ஒரு தடவை அவன் ஆரம்பித்தான். ஆனால் அவளோ, எதிர்பாரா விதமாக வாய்விட்டு அழுது, அவன் மார்பில்

முகத்தைப் புதைத்துக் கொண்டு, ''வேண்டாம், ஸெர்கேய், எனக்குப் பயமாயிருக்கிறது'' என்று கெஞ்சினுள்.

இப்போது அவள் அருகே படுத்திருக்கையில் தன் அச்சங்களை அவளிடம் சொல்ல ஸெர்கேய் தயங்கினுன்.

''ஸெர்கேய், நீ ஏன் தூங்கவில்லை?'' என்று கிசுகிசுத்தாள் தான்யா.

''நீயோ?...''

''நான்...''

தான்யா பேசாதிருந்தாள். ஜன்னலில் மழை சரசரத்தது. இரவில் எங்கோ தொலைவில் சீறி, முறையிடுவது போன்று நீண்ட ஊதலொலி செய்தது ரயில் எஞ்சின். யாரையோ அது நம்பிக்கையின்றி உதவிக்கு அழைப்பதுபோல் இருந்தது. திடீரென்று ஸெர்கேய் சொன்னுன்:

''கரடிக்குக் கூட நடனம் கற்பித்து விடலாம் என்று பேச்சு வழக்கில் சொல்வதுண்டே. பார்ப்போம்!''

## பெத்ரோவ் தம்பதியின் குடும்ப நாட்குறிப்பு

*நாட்குறிப்பில் உள்ள முதல் குறிப்புக்கள் தற்செயலானவை. அவற்றில் தேதி குறிக்கப் படவில்லை. பெரும்பாலும் அவை ஸெர்கேய் சொல்ல, தான்யா மையினுல் எழுதியவை.*

* * *

போரைப் பற்றி நிறையப் புத்தகங்கள் படித்தாயிற்று. நல்ல புத்தகங்கள் படிக்கக் கிடைத்தன. ஆனுல் போரை நான் முதன்முதலாகக் கண்ணெதிரே கண்டது க.ஸீமனவ் எழுதிய ''படைவீரர்களாகப் பிறப்பதில்லை'', ''வாழ்வோரும்

இறந்தோரும்'' என்னும் நூல்களில்தான். போர்க் கைதிகளின் துயர் நிறைந்த அணிவரிசைகளும் ''ருஷ்யா முழுவதுமே சிறை பிடிக்கப்பட்டுவிட்டதுபோலத் தோன்றியது'' என்ற சொற்களும் என்றும் மறக்க முடியாதபடி நினைவில் பதிந்து விட்டன.

* * *

'' 'தானே விரும்பிக் கடலில் விழுந்தவன்.' அலேன் பம்பார்டு என்னும் இந்த இளைஞன் துணிச்சல்காரன்! நாமும் அவன் மாதிரிச் சோதனை செய்து பார்த்தால்! ஊம், தான்யா?''

''இராத்திரியில் பயமாக இருக்கும். சுறு மீன்கள்...''

''நினைத்துப் பார், கப்பல் விபத்து, ஜனங்கள் கடலில் விழுந்து விடுகிறார்கள்... அப்படியும் பீதிக்குப் பதிலாக நம்பிக்கை! அவன் அறுபத்தைந்து நாட்கள் மாகடலில் கழித்திருக்கிறானே, நாம் எவ்விதத்தில் சளைத்தவர்கள்? ஆம், நம்பிக்கை மாபெரும் சக்திதான்!''

* * *

குப்ரீன் சிறந்த எழுத்தாளர். அவருடைய நூல்களை எல்லாம் திரும்பப் படித்தேன். ஒன்று தான் புரியவில்லை: அவர் படைத்த பாத்திரங்கள் எல்லாம் ஏன் இப்படிச் செயலற்றவர்களாக இருக்கிறார்கள்? பொறியில் அகப்பட்ட சுண்டெலிகள் போல மூலைக்கு மூலை ஓடிச் சாடுகிறார்களே தவிர என்ன செய்வதென்று அவர்கள் அறியவில்லை.

* * *

நல்ல கவிதைகள்தாம் எத்தனை நிறைய!

''கொடுமை சேர் இளமையே, ஏடி, மினுக்கி!
கொஞ்சு முறுவல்மேல் நரைமுடிச் சுருளா?
முடிநரைப் பூச்சுக்கு விலையும் கொடுப்பது
மோசம், ஈனம், மடமை அன்றோ?''

இன்னும்:

''யார் பிரீதிக்கு இப்பேய் நாகரிகம்?
இக்கோலத்துக்கு யார் பொறுப்பாளி?
கோரமும் துயரமும் அணி ஆகாவே.
கொடுநரைக் கற்றையும் அழகு ஆகாதே.''

எழுதியவள் என் ஊர்க்காரி—ரும்யான்த்ஸெவா. சபாஷ், மாயா ரும்யான்த்ஸெவா!

* * *

சுரங்கக் குடைவுத் தொழிலாளச் சோதரர்கள் அகில சோவியத் யூனியன் ரெக்கார்டு ஏற்படுத்தியிருக்கிறார்கள். குழுத்தலைவன் என் நண்பன். தொழிற்பள்ளிப் படிப்பை இருவரும் ஒன்றாகவே முடித்தோம். ஆகா வீத்யா, வீத்யா!... ஒரு நாளாவது உன்னோடு வெட்டு முகப்பில் வேலை செய்ய முடிந்தால்... வெறி கொண்டவன் போல் உழைக்கவும் சுரங்கக் காற்றைச் சுவாசிக்கவும் முடிந்தால், கடவுளாணை, அப்பாடா என்று இருக்கும்... கனவுகள் என்னைக் கொடுமைப்படுத்துகின்றன, நண்பா, ஒரேயடியாகச் சித்திரவதை செய்கின்றன. நிலக்கரிச் சுரங்கங்களும், சுரங்கக் கற்குவியல்களும் குடைவழிகளும் இரவெல்லாம் கண்முன்னே நிற்கின்றன...

* * *

*ஸெர்கேய்! இந்த வரிகளில்தான் எத்தகைய ஆற்றல்!*

**சூறைப்பனி அதைச் சீறி அசைத்தது,**
**வேரைப் பறித்தது, முடியை உலுக்கிற்று,**
**மரம் நின்றது.**
**வறட்காற்று பொசுக்கிற்று,**
**மரம் நின்றது.**
**கூதல் தேளெனக் கொட்டிற்று,**
**விரைக்கும் குளிர் வயிரம்வரை பாய்ந்தது,**
**மரம் நின்றது.**
**அனல் சாட்டைகள் சொடுக்கிப்**
**பருத்த அடிமரம் புடைத்தன மின்னல்கள்,**
**மரம் நின்றது.**
**அத்தனை கொடுமைக்கும்பின்**
**மரம் வென்றது!**

*எழுதியவர் வ. ஹர்யூஸவ். எழுதத் தெரிந்தவர்...*

* * *

*வாழ்க்கை ஒவ்வொரு மனிதனுக்கும் இனியது. அவன் எப்படிப்பட்டவனாய் இருந்தாலும் சரியே. வாழ்க்கை, மேம்பாடு வரும் என்னும் இடையரூத நம்பிக்கை. மேம்பாடு என்பது பொருள் வளம் என்று சிலர் நினைக்கிறார்கள், உளநெறித் திருப்தி என்று வேறு சிலர் எண்ணுகிறார்கள், பின்னும் சிலரோ—இவர்கள்தாம் பெரும்பான்மையினர்—இந்த இரண்டுமே என்று கருதுகிறார்கள். மனிதர்களை வேறுபடுத்துவது இந்தப் பிரச்சினைதான்: அவர்களுடைய செயல்களில் முதன்மை பெறு*

வது உளநெறித் திருப்தியா அல்லது பொருள் வளமா? இதிலிருந்து பின்வரும் கருத்து கிளைக்கிறது: சிலர் வாழ்வதை விரும்புகிறார்கள், வேறு சிலர் வாழ்க்கையை விரும்புகிறார்கள். சிலர் சொல்கிறார்கள்: ''நான் மூச்சு விடுகிறேன், எனவே நிலவுகிறேன் என்று ஆகிறது''. மற்றவர்களோ, இப்படிச் சொல்கிறார்கள்: ''நான் மக்களுக்குப் பயன்படுகிறேன், எனவே வாழ்கிறேன்''. ஆனால் இரு வகையினரில் எவருமே சாக விரும்புவதில்லை. முதல் வகையினர் சுகமே வாழலாம் என்று நம்புகிறார்கள். இரண்டாம் வகையினரோ, நாம் மக்களுக்குத் தேவைப்படுகிறோம் என்னும் உணர்வால் பெருமைசான்ற மகிழ்வு அடையலாம் என்று நம்புகிறார்கள்.

* * *

நவம்பர், 1. கூதிர்காலத்தின் கடைசி மாதம், ஆனால் வெளியே கதகதப்பு. விரைவில் விழாக்கள் வரும்! அக்டோபர்ப் புரட்சி விழா, புத்தாண்டு... உனக்கு என்ன பரிசு தருவது, தான்யாக் கண்ணே!

''பரந்த ஸ்தெப்பி வெளியின் நடுவில் ஒரு நகரம் பரிசளி!''

''என்னால் மட்டும் முடிந்தால் யாவற்றிலும் ஒளி மிக்க விண்மீனை வானிலிருந்து பறித்து உனக்குத் தருவேன். நீ எனக்கு வாழ்வையே அளித்திருக்கிறாயே! உன் வாழ்வையும் என் வாழ்வையும்.''

''இல்லை, காதலே!''

''பொருள் ஒன்றேதான்.''

* * *

புத்தாண்டுக்குள் புது வீடு தருவதாக நகர சோவியத் உறுதிகூறுகிறது. இந்தக் குடிலில்

அதுவரை எதனுல் வெப்பமூட்டுவது? இரவு வேளைகளில் குளிர்கிறது. மூலையில் ரீங்காரமிடும் சிள்வண்டு குழந்தைப் பருவத்தை நினைவுபடுத்து கிறது. என் தகப்பனுரின் கிராம வீட்டில் இதே போன்ற இசைப்பூச்சி இரவு முழுவதும் இம் மாதிரியே ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கும். இது நடந்து பத்து லட்சம் ஆண்டுகள் கழிந்துவிட் டன. ஏதோ ஓர் அலை எங்களை வேறு உலகு ஒன் றில்—வலியும் கதியற்ற புகலின்மையும் நிறைந்த உலகு ஒன்றில்—எறிந்துவிட்டதுபோலச் சில சம யம் தோன்றுகிறது.

''மிகை வண்ணம் தீட்டாதே, ஸெர்கேய்.''

''தீட்டாமலிருக்க நானுந்தான் விரும்புவேன்... ஆனுல் பகல் ஒளியிலிருந்து, மனிதர்களின் நகைப் பிலிருந்து, எங்கே ஓடி மறைவது? நானும் மனிதன் தானே...

* * *

''கம்ஸமோல்ஸ்க்காயா பிராவ்தா'' ஓர் இளை ஞனின் கடிதத்தை வெளியிட்டிருக்கிறது. அவ னுக்கு வேலை செய்ய விருப்பம் இல்லையாம், உழைப்பவர்களை எல்லாம் அவன் இகழ்கிருனும், அழகாக உடுத்தவும், நடனம் ஆடவும், உணவு விடுதிகளில் விருந்துண்ணவுமே அவனுக்கு ஆசை யாய் இருக்கிறதாம்... நல்லது, நம் நாட்டு வழக் கப்படி அவன் கடிதத்தின் பக்கத்திலேயே அவ னுக்கு விடையும் வெளியாகி இருக்கிறது! அவ னுக்கு அறிவுரை கூறித் திருத்துகிருர்கள், அவன் வெட்கப்பட வேண்டும் என்கிருர்கள் ஆசிரியர்கள். அட சனியனே, உழைப்பும் வாழ்க்கையும் தனிப் பிரிக்க முடியாத கருதுகோள்கள், அறிவும் இதய மும் போலவே மனிதனுக்கு ஒரே மாதிரி இன்றி

யமையாதவை என்பதை ஒருவனுக்கு நிரூபித்துக் காட்டுவது இன்னமுமா தேவைப்படுகிறது! குரங்குகளே இதை அறிந்திருந்தனவே!... இந்த விகிருதியைப் பிடித்துச் செம்மையாக உதைக்க வேண்டும்.

தாய்நாட்டை விட்டுத் தொலைவில் நீண்ட காலம் வசிப்பவன் ஏக்க நோய்க்கு ஆளாவதாகச் சொல்லுகிறார்கள். இது என்ன நோயோ, அறியேன். வேலைக்காக நான் அனுபவிக்கும் கொடிய ஏக்கம் போன்றதாய் இருக்கும் இது. இது எப்பேர்ப்பட்ட சித்திரவதை என்று அந்தச் சொகுசுக்கார இளைஞனுக்குத் தெரிந்தால் நன்றாய் இருக்குமே!

* * *

''தான்யா, என் எண்ணங்களை ஊகிக்க முயலாதே.''

''நான் ஊகிக்கவில்லை, அறிவேன்.''

''அப்படியானால் என்னவாம்?''

''எழுதப் பழகுவதில் ஏற்படும் தவற்றைத் தோல்வி என்று எண்ணாதே. உன் கால் மட்டும் ஊனமில்லாமல் இருந்தால் நீ எழுதப் பயின்றிருப்பாய் என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆனால் என்ன செய்வது?.. நான் என்ன, மோசமான செக்ரெட்டரியா?!''

''அருமையான செக்ரெட்டரி நீ. ஆனால் என்னாலும் ஏதேனும் செய்யமுடியும் என்ற நம்பிக்கையை நான் எங்கிருந்து பெறுவேன்?''

* * *

நேற்று ஒருவர் அவசரமாகப் பஸ்ஸில் ஏற ஓடினார். மூச்சு திணறிற்று, உடம்பெல்லாம் நனைந்தி

ருந்தது, வேலைக்குத் தாமதமாகிவிட்டது. ஓடினார்... அதற்குள் கதவு மூடிக்கொண்டது, பஸ் போய்விட்டது. பாவம், அந்த மனிதர் எப்படித் திட்டி நொறுக்கினார் தெரியுமா! பக்கத்தில் நின்று கொண்டிருந்த எனக்குப் பொறாமையால் அனேகமாக அழுகை வந்துவிட்டது. எனக்குத்தான் இப்போது எதற்குமே அவசரப்பட வேண்டாமே. எனக்காக எங்குமே, யாருமே காத்திருக்கவில்லையே.

5

நகரில் மழைப்புயல்கள் வீசின. காலங் கடந்தவை, வன்மம் நிறைந்தவை... மணல் சந்துகளில் பெருந்தூண்கள் போலக் கிளம்பி, தார் ரோட்டில் தீவுகளாகப் படிந்து, கோணல் மழைக் குதிமுட்களால் குத்துண்டு கனத்து, அசைக்க முடியாதபடி இறுகியது. தான்யா மழைப்புயல்களை அஞ்சினாள். இடி முழக்கம் அவளுக்குப் பெருந் திகில் ஊட்டும். குழந்தைபோல மூலையில் ஒண்டி, தலையை மூடிப் போர்த்து, காதுகளைப் பொத்திக் கொண்டு, ''ஸெர்கேய், ஓய்ந்து விட்டதா?'' என்று நடுங்கும் குரலில் கேட்பாள். அவளுடைய திகில் ஸெர்கேயுக்குப் புரியாது. அது மட்டும் அல்ல, மழைப்புயலின் போது தன்னால் வீட்டுக்குள் உட்கார்ந்திருக்க முடியவில்லை,வெளியே போக அடக்க முடியாத ஆசை உண்டாகிறது என்பதை அவன் திடீரென உணர்ந்தான்., இயற்கையின் இந்தக் காட்டுத்தனமான சீற்றத்தில் தனது உள்ளத்துக்கும் எண்ணங்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் இசைவுள்ள ஏதோ ஒன்றை அவன் கண்டான். ஆனால் அது என்ன? ஸெர்கேயுக்கே விளங்கவில்லை. இந்த மாதிரியே கொந்தளிப்புடன், சுதந்திரமாக

வும் விரிவாகவும் தன் உள்ளத்தை வெளியே கொட்டவும், தனக்குள் ஆழத்தில் புதைந்து, வெளிவர விடாப்பிடியாக முயன்றுகொண்டிருந்த ஏதேனும் மர்மத்தைப் பிரகடனம் செய்யவும் அவனுக்கு ஒருவேளை விருப்பம் உண்டாயிற்றோ?

யெகோரவிச்சுடன் என்றோ நடந்த தன் உரையாடலை ஸெர்கேய் நினைவுபடுத்திக் கொண்டான். ''நாம் அனுபவித்தவை, ஆழ்ந்து உணர்ந்தவை எல்லாவற்றையும் நமக்குள்ளேயே மூடி வைத்துக் கொண்டிருப்பது கடினம்'' என்றார் அந்த முதியவர். ''நமது சிந்தனைகளை மக்களின் விரிவான குழுவுக்குத் தெரிவிக்காதிருப்பது, அவற்றை மக்களுடன் பகிர்ந்துகொள்ளாமல் இருப்பது சகிக்க முடியாதது ஆகிவிடும் கணமும் வரும். அப்போது மனிதன் காகிதத்தின்பால் ஈர்க்கப்படுவான். உன் விஷயத்திலும் இதற்கு வாய்ப்பு உண்டு என்பதை மறந்துவிடாதே, ஸெர்கேய்.''

''யெகோரவிச் நான் பற்றிக்கொள்ள ஒரு துரும்பைப் போடுகிறார். தமது உள்ளார்ந்த நல்லியல்பு காரணமாகத் தவறான எண்ணம் கொண்டிருக்கிறார். என்னிடம் இல்லாத மற்ற எல்லா விஷயங்களோடும் கூடவே, திறமையும் அல்லவா வேண்டும் உள்ளத்தை வெளியே கொட்டுவதற்கு! இந்தத் திறமையைப் பயிற்சியால் பெற முடியாதே, அது பிறவியிலேயே வாய்க்க வேண்டுமே.''

யெகோரவிச்சின் மரணத்துக்குப் பிறகு ஸெர்கேய் அந்த உரையாடலை அனேக முறை மீண்டும் எண்ணிப் பார்த்தான். இந்தத் திட்டம் ஒரு பயனும் அளிக்காது என்று முடிவு செய்ததற்குமேல் அவன் போகவில்லை.

ஒரு நாள் அவனுக்குப் பள்ளிப்பருவ நிகழ்ச்சி ஒன்று நினைவு வந்தது. ஆசிரியை தனக்கு அநியாய மாக (அவன் கருத்துப்படி) மார்க்கைக் குறைத்து விட்டதால் வந்த திடீர்க் கோபத்தில், கண் ணீர் தொண்டையை அடைக்க வகுப்பிலேயே ஒரு செய்யுள் எழுதித் தள்ளிவிட்டான். செய் யுள் நீளமாக, வன்மம் நிறைந்ததாக, சீரற்றதாக இருந்தது. பள்ளி மாணவர் கூட்டம் நடக்கையில் இளங்கம்யூனிஸ்டுகள் குழுச் செயலாளியான குட் டைப் பின்னல்காரப் பெண் ஸெர்கேயின் இந்தச் செய்யுளை எல்லாருக்கும் கேட்கும்படி உரக்க மதிப்பீடு செய்து, அதற்குச் சன்மானமாகக் கவிஞனுக்குக் கடும் கண்டனம் தெரிவிக்கப்பட வேண்டும் என்றும் அவனுடைய தனி விவகாரப் புத்தகத்தில் இந்தக் கண்டனம் பதிவு செய்யப் பட வேண்டும் என்றும் கோரினாள்.

''ருஷ்யக் கவிஞர்களின் வாழ்க்கை எப்போ துமே இடர்கள் நிறைந்ததாகத்தான் இருந்தது'' என்று தன்னைத் தேற்றிக்கொண்டான் ஸெர்கேய்.

''பெரிய கவி அப்பா!'' என்று பக்கத்து வகுப்பு நையாண்டிக்காரர்கள் வெட்கத்தால் சாம்பிக் கொண்டிருந்த கவிஞனைக் கேலி செய்தார்கள்.

இந்தப் புண் மிகவும் உறைத்துவிட்டது மாண வன் ஸெர்கேய் பெத்ரோவுக்கு. தான் காலம் தவறிப் பிறந்துவிட்டதாக முடிவு செய்து, கவிதைச் சிகரத்தில் ஏறும் எண்ணத்தைக் கை விட்டான் அவன்.

பிற்பாடு, இராணுவ சேவைக் காலத்தில் ஸெர் கேய் சிறு கதை எழுத முயன்றான். படைப்பு வேதனையில் ஆழ்ந்திருந்த படைவீரன் இரவு முடிந்து பொழுது புலரத் தொடங்கிவிட்டதைக் கவனிக்கவில்லை. அன்று முறைவேலை அவனுடை

யது. படைப்பிரிவினரை உரிய நேரத்தில் எழுப்பி விட அவன் தவறிவிட்டான். புலரொளியுடன் பாரக்குக்குள் புகுந்த ஸ்ீனியர் ஸார்ஜண்டு படைப்பிரிவினர் குறித்த நேரத்துக்கு இரண்டு நிமிடங்கள் அதிகமாக உறங்கிவிட்டார்கள் என்பதற்காகப் படைவீரன் ஸெர்கேயுக்கு இரண்டு நாள் உபரி வேலைத் தண்டனை விதித்தான்.

இராணுவ சேவை முடிந்தபின் கன்னி நிலங்களையும் தரிசு நிலங்களையும் பண்படுத்தச் சென்ற படைவீரர்கள் பற்றிய சுருக்கமான குறிப்பு ஒன்று ''சோவியத் படைவீரன்'' என்னும் செய்தித் தாளில் விரைவில் பிரசுரமாயிற்று.

குறிப்பின் கீழ் ''ஸெ. பெத்ரோவ், என். பிரிவின் விமான மெக்கானிக்'' என்ற தன் பெயரைப் படித்த போது ஸெர்கேயின் இதயம் கிளர்ச்சிப் பெருக்கால் நின்றே போய்விட்டது.

''நான் முழு நீள விவரம் எழுதி அனுப்பினேனே! அவர்கள் அதை என்ன செய்துவிட்டார்கள்! இங்கே இருப்பது நான் எழுதியதில் ஐந்தில் ஒரு பங்கு தானே!'' என்று சுயநினைவுக்கு வந்ததும் அங்கலாய்த்தான் நிருபன்.

ஆனாலும் இவ்வளவாவது பிரசுரமானதில் உள்ளூற அவனுக்கு மகிழ்ச்சியும் பெருமையும் பொங்கின. படைவீரனின் சாமான் பையில் அந்தச் செய்தித்தாள் இதழை நெடுங்காலம் பத்திரப்படுத்தி வைத்திருந்தான்.

தன் படைப்புக்களைச் செய்தித்தாள்களில் வெளியிடுவதற்கு மேற்கொண்டு ஸெர்கேய் செய்த முயற்சிகள் வெற்றி பெறவில்லை. அவன் அனுப்பிய எல்லாக் கதைகளும் கட்டுரைகளும் ஒரே வாக்கியத்தில் அமைந்த, புண்படுத்தும் பதில்களுடன் ஆசிரியர்களால் திருப்பி அனுப்பப்

பட்டு விட்டன: ''பிரசுரிக்க இயலாது, தற்கால ஆசிரியர்களின் நூல்களை நிறையப் படிக்குமாறும் மொழியைச் செப்பம் செய்து கொள்ளுமாறும் யோசனை கூறுகிறோம்...''

படைவீரன் ஸெர்கேய் படித்தான், மொழியைச் செப்பம் செய்து கொண்டான், ஆனால் கதைகள், கட்டுரைகள் எழுத மறுபடி முயலவே இல்லை. தனக்கு அதற்கு வேண்டிய திறமை இல்லை என்று அவன் தீர்மானமாக முடிவு செய்துவிட்டான்.

இந்தச் சிந்தனைகள், தயக்கமும் சுயநம்பிக்கையின்மையும் கொண்ட மேகத்துண்டுகள் போல, கொஞ்சம் கொஞ்சமாக ஒன்று திரண்டு பெரு முகிலாக உருவாயின. பெரு முகிலால் கட்டுப் பட்டு இருக்க முடியவில்லை. அதற்கு இடம் போதவில்லை. அது அகல்வெளியை நோக்கி, விடுதலையை நோக்கி விரைந்தது. யெகோரவிச்சின் பருவ முன்னறிவிப்பு தவறாகவில்லை. ஸெர்கேய் சிறிது சிறிதாக ஆற்றலைத் திரட்டினான், மழைப்புயலை ஆவலுடன் எதிர்பார்க்கலானான். தான் அனுபவித்ததை எல்லாம் விளக்கி வெளியிடாமல் வாழ்வது அவனுக்குச் சகிக்க முடியாதது ஆகிவிட்டது.

## பெத்ரோவ் தம்பதியின் குடும்ப நாட்குறிப்பிலிருந்து

''... துயரத்தையும் உளத் துன்பத்தையும் துக்கத்தையும் புரிந்துகொள்ளும் திறனில் மிகப் பெரிய உளநெறி ஆற்றல் மறைந்திருக்கிறது. விதியின் கொடிய அடிகளை ஆண்மையுடன் தாங்கிக் கொள்ள இந்த ஆற்றல் மனிதர்களுக்கு உதவுகிறது.''—பொரீஸ் ரூனின்.

* * *

தீர்மானித்துவிட்டேன்! ஆங்கில மொழியைப் பயிலத் தொடங்குவேன். பயன்படும்!

* * *

ஸெர்கேய், இரவுநேரத்தில் படிப்பது கெடுதல். அல்லது பகல் நேரம் உனக்குப் போதவில்லேயோ?

* * *

ஒரு மனிதனின் அக்கறைக்கு உரிய எல்லா விஷயங்களேயும் தெரிந்துகொள்வதற்கு மனித ஆயுள் மிக மிக அற்பமானது. பாலப் பருவத்தில் நாம் நேரத்தைப் பழிபடும் வகையில் வீண் விரயம் செய்தோம். நாம் என்ன படித்தோம்? எதில் அக்கறை எடுத்துக்கொண்டோம்? படித்ததையுந் தான் ஆழ்ந்த கவனத்துடன் படித்தோமா? படித்தவற்றை இப்போது திரும்பப் படிக்கிறேன். ஒவ்வொரு வரியிலும் புதிய பொருள் புலனுகிறது.

* * *

நான் மாறவே இல்லேயாம், கண்களில் மட்டுந் தான் ஏதோ கவலேயும் சோர்வும் தெரிகின்றனவாம், எல்லாரும் சொல்லுகிருர்கள். மெய்தானு, ஸெர்கேய்? நீ இதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லேயே.

* * *

பாட்டு நினேவு இருக்கிறதா?:

> ''உன் விழிகளிலே சோர்வுகூட
> இன்னும் அழகாய் இருக்குதடீ.''

* * *

ஒன்று செய்வோம்: போனவற்றை மறந்துவிடுவோம், இனி ஒருபோதும் அவற்றை நினைவுபடுத்திக்கொள்ள வேண்டாம். கண்டனங்களோ சமாதானங்களோ இல்லாமல்... அப்படி ஒன்றுமே நடந்துவிடவில்லை. வோத்கா குடித்தேன். இனிமேல் குடிக்கவே மாட்டேன். அந்த டாக்ஸிக்காரருக்கு நன்றி.

* * *

கார்க்கவ் செயற்கை உறுப்புத் தொழிற்சாலையிலிருந்து அழைப்பு வந்திருக்கிறது.

காரியம் கைகூடுமா கூடாதா?

* * *

கார்க்கவ். நம் நாட்குறிப்புப் புத்தகத்தை நான் கையோடு எடுத்து வந்திருக்கிறேன். நீ இல்லாமல் தொடர்ந்து குறிப்புக்கள் எழுதுகிறேனே என்று கோபித்துக்கொள்ளாதே. உன்னை மருத்துவமனையில் சேர்த்துக்கொண்டால் நான் தனியாக ஊர் திரும்புவதில்லை என்று லுகான்ஸ்க்கிலேயே முடிவு செய்துவிட்டேன். என்னுல் முடியாது. நீ வீணுக என்னை வற்புறுத்துகிருய்.

* * *

உனக்கு ஒன்று தெரியுமா, ஸெர்கேய். உன் மேல் எனக்கு உள்ள காதலில் ஒரு புதுமையைக் கண்டு அறிந்தேன். இது என்ன என்பது புரியவில்லை. ஒருவேளை இது அன்புக் குழந்தைக்காகத் துன்பப்பட்ட தாயின் உணர்வை ஒத்ததுபோலும். அறியேன். ஒருகால் இது அப்படி இல்லையோ என்னவோ. ஆனுல் உன்மேல் என் காதல் நாளுக்கு நாள் அதிகமாகிறது.

* * *

வியாழக்கிழமை. முந்திய அறுவைகளின் கவலைகளையும் வலியையும் இருவரும் சமமாகப் பகிர்ந்து கொண்டோமே. இப்போது மட்டும் என்ன நேர்ந்துவிட்டது — இந்தக் கடைசி அறுவையை என்னுடன் பகிர்ந்துகொள்ள நீ விரும்பவில்லை? அறுவைக் கூடத்திற்கு வெளியே உனக்கு இனியவள் உன்னோடு சேர்ந்து துன்பப்படுகிறுள், கவலைப் படுகிறுள் என்ற உணர்வு உனக்குச் சக்தி அளிக்காதா என்ன?

நீ கட்டுக்கள் போடப்பட்டுக் கிடந்ததைக் கண்டதும் பயந்துபோனேன். நாம் தொனேத்ஸ்க்கில் இருப்பது போலவும், அறுவைகளின் அனந்த காலம் இனிதான் வரப்போவது போலவும் தோன்றியது.

அதற்குள் உறங்கிவிட்டாயா, ஸெர்கேய்? இப்போது இரவு மணி பதினென்று. நீங்கள் தூங்கப் போகும் நேரம் பத்து மணி. கனவுகளில் என்ன காண்கிறுய்? நண்பர்களையா? சுரங்கத்தையா? சரிதானே? கேள், மரீஞ த்ஸ்வெத்தாயெவாவின் கவிதையைப் படித்துக் காட்டுகிறேன்:

> "காதல் என்பது
> வாளா? நெருப்பா?
> கனிவாய்ச் சொல்லு — ஏனிக் கடுமை?
> வேதனை, விழிக்கு அங்கைபோல்,
> நாவுக்கு
> இனிய தன் மகவின் பெயர்போல் தெரிந்தது."

நல்லிரவு, அன்பே.

* * *

''மறுபடியும் மயிர்க் கற்றையை விரலில் வளையங்களாகச் சுற்றத் தொடங்கிவிட்டாயா?'' என்று நீ என்னிடம் கேட்டாய்.

ஆறு மாதங்கள் சுற்ருமல் இருந்தேன். மறந்து விடுவோம் என்று நினைத்தேன். இல்லை, நினைவு வந்துவிட்டது. எதனுலோ, அறியேன்.

* * *

**செவ்வாய்க் கிழமை.** செயற்கைக் கரம் இவ்வளவு பாங்கற்றதாக இருக்கும் என்று நான் நினைக்கவே இல்லை. உனக்கும் அது பிடிக்கவில்லை. இந்த நூற்ருண்டில், நமது யுகத்தில்... இந்தக் கடை கெட்ட திராபை...

எதனுல் இப்படி? மிக உயர்ந்த தொழில்நுட்பத் தரம், ஸைபர்னெடிக்ஸ், மின்னணு இயல், எல்லாம் எங்கே?

ஆரவாரம் செய்பவர்களும் பெருமை அடித்துக் கொள்பவர்களும் நம் நாட்டில் ஏராளம். ஒரு மின்னணுப் பூச்சி செய்வார்கள்—உடனே தம்பட்டம் அடிப்பார்கள், வானமும் வையமும் அதிரும்படி... அதே பூச்சி செய்தவனுக்குக் கை போய், இந்தக் கற்காலக் கவைக்கோலை அவன் தலையில் கட்டிவிட வேண்டும்... அப்போதுதான் அவன் உணர்வான், மனிதன் என்ற பெயரில் பெருமை தொனிக்கிறது என்று கோர்க்கிய் சொன்னதன் அர்த்தத்தை.

* * *

**லுகான்ஸ்க்.** செயற்கை உறுப்புக்கள் பெருத்த எண்ணிக்கையில் தயாரிக்கப்படுபவை அல்ல. அவற்ருல் வருமானம் கிடையாது. அவற்றைத் தயாரிப்பதற்கு ஆகும் செலவு நிறைய. எனவே அவை யாருக்கு வேண்டும்? அங்கவீனர்கள் கற்காலக் கவைக்கோல்களைக் கொண்டே எப்படியாவது சமாளித்துக்கொள்வார்கள்.

கப்பல் விபத்துக்கு ஆளானவன் காப்புக் கப்பலைக் கண்டான், ஆனால் அது அவனை விட்டு விலகிப் போய்விட்டது.

அந்த நேரத்தில் அவன் உணர்ச்சிகள் எப்படி இருக்கும்?

கடற்பறவை ஆகிவிட மாட்டோமா என்று அவனுக்கு ஆசை உண்டாகுமா?

உலகில் மாயவித்தை ஏன்தான் இல்லை! செயற்கைக் கரம் பயன்படும் என்ற நம்பிக்கைக்கு இடமே இல்லையா?

* * *

''ஸெர்கேய், நான் நம்பவில்லை! உன் உணர்ச்சிகள் எனக்குப் புரிகின்றன. நமக்கு இப்போது கஷ்டந்தான். ஆனால் அந்த அளவுக்கு நாம் பதற்றப்படாமல் இருக்க வேண்டும், அந்த அளவுக்கு நாம் விடாப்பிடியாக முயற்சி செய்ய வேண்டும். தேட வேண்டும். கலவரப்படாமல்.

''கோர்க்கிய் எழுதிய ஒரு கதையில் வருமே, நினைவு இருக்கிறதா? சிலர் படகின் அடித் தளத்தில் விழுந்து, கிலிகொண்டு மடிந்தார்கள். மற்றவர்களோ, எல்லாவற்றையும் எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றார்கள்!''

''நீ சொல்வதே சரி. தலை நிமிர்ந்து நிற்போம், வருவது வரட்டும்! ஜன்னியில் மூச்சு திணறிக் கொண்டிருந்தபோது எனக்கு லேசாய் இல்லை. பிழைத்துவிட்டேனே...''

* * *

''இந்தச் செயற்கைக் கரத்தின் பாழும் வார்கள் உராய்ந்து உன் முதுகுத் தோல் மறுபடி வழன்று இரத்தம் கசிகிறது. செயற்கைக் கரத்தைப் பார்க்

கவே எனக்குப் பயமாய் இருக்கிறது. அது ஒரே இரத்த மயம். இது இன்னும் எவ்வளவு காலம் நீடிக்கும்?''

''நான் எழுதப் பழகும் வரை.''

''உடல் இதைத் தாங்க முடியாவிட்டாலோ?''

* * *

செயற்கைக் கரத்தைப் பயன்படுத்தக் கூடாது என்று மருத்துவர் தடை விதித்துவிட்டார். வழன்ற முதுகுக்கும் தோளுக்கும் சிகிச்சை நடக்கிறது. செயற்கைக் கரத்தை மேற்கொண்டு மாட்டிக்கொள்ளத் தேவையே இல்லை போல் இருக்கிறது. கோட்டுக்கை வெற்றாகத் தொங்காமல் இருப்பதற்காக வேண்டுமானால் மாட்டிக் கொள்ளலாம்.

* * *

இந்தப் பயணமும் மனக்கிளர்ச்சியும் அறுவையும் எதிர்பார்ப்பும் நம்பிக்கையும் யாருக்குத் தான் வேண்டியிருந்தன? ஒருவருக்குமே இல்லை.

## 6

இரவில் வெண்பனி பெய்தது. தொடக்கத்தில் அது மழைக்கு இடையிடையே பெய்தது, ஆனால் விடிவதற்குள் குளிர்காலம் கூதிர் காலத்தை வெற்றி கொண்டுவிட்டது. மயிர் அடர்ந்தவை போன்ற பெரிய வெண்பனிச் சிதல்கள் நடுவே கிழித்த இறகு மெத்தையிலிருந்து தூவிகள் சிதறுவது போலப் படலம் படலமாக விழுந்தன. சில நிமிடங்களுக்குள் அவை நகரம் முழுவதற்கும் வெண்ணுடை அணிவித்துவிட்டன. கடுங்

குளிர் தாக்கிற்று, வாடைக் காற்று வீசிற்று, பனிக் காலம் பனிச் சூறைக் குரலால் ஊளையிடத் தொடங்கிற்று.

பருவம் மாறியதும் தங்கள் வாழ்க்கையிலும் ஏதேனும் மாறுதல்கள் நிகழும் என்று மனிதன் எப்போதுமே எதிர்பார்க்கிறான் — உலகின் போக்கு அப்படி. ஸெர்கேயும் மாறுதல்களை எதிர்பார்த்தான்.

ஆனால்... சலிப்பூட்டும் கருண்ட நாட்கள் சுவையற்ற ஒரு சீரான நீண்ட போக்கில் நத்தை போல் நகர்ந்தன. செயற்கை உறுப்பைக் கையாளுவதில் தேர்ச்சி பெற, சள்ளைபிடித்த செயலின்மைத் தளையை அறுத்துக்கொண்டு வெளியே, ஸெர்கேயின் வீண் முயற்சிகள் காலை முதல் இரவு வரை தொடர்ந்து நடந்தன.

செயற்கைக் கரத்துக்குப் பழகுவது என்ற முதல் காரியத்தைக் கூடியவரை விரைவிலேயே ஸெர்கேய் சாதித்துவிட்டான். வலியையும் அசௌகரியத்தையும் சகித்துக்கொண்டு மூன்று நாட்களாக அவன் அதைத் தோளிலிருந்து கழற்றாமலே இருந்தான். பகலில் வதைபட்ட பின்னர் இரவிலும் செயற்கைக் கரத்துடனேயே நிர்ப்பந்தமாகக் கட்டிலில் படுத்துக்கொள்வான். தூக்கம் சித்திரவதைக்கு ஒப்பாய் இருக்கும். உலோகப் பகுதிகள் விலாவில் அழுத்தும். வார்கள் உடம்பை அறுக்கும், தோள்கள் பொறுக்க முடியாதபடி காந்தும், செயற்கைக் கரம் பயங்கரக் கண்ணியாக மாறிவிடும்.

நான்காவது நாள்தான் ஸெர்கேயுக்கு ஓரளவு லேசாயிருந்தது.

''பழகிவிட்டேன்!'' என்று மனம் வெற்றி முழங்கியது. அக்கணமே சுமை இறங்கியதுபோல அப்

பாடா என்று இருந்தது. ''இப்போது பென்சிலே எடுக்க வேண்டும்! எழுத வேண்டும்! பழகிவிட்டேனுல் கல்லூரியில் சேர ஆயத்தமாவேன்!''

ஆனுல் நாட்கள், வாரங்கள் கழிந்தன, ஸெர்கேயின் முதுகு இரத்தம் கசியும் இரணகாயமாக மாறிவிட்டது, அப்படியும் எழுதுவதில் முன்னேற்றமே இல்லே. எழுதப் பழகுவதற்காக அவன் எவ்வளவுக்கு எவ்வளவு கடும் முயற்சி செய்தானே அவ்வளவுக்கு அவ்வளவு அது பற்றிய நம்பிக்கை குறைந்தது. குறுகிய இடை நிறுத்தங்களின் போது, குளிர்ந்த, உயிரற்ற விரல்களைக் கன்னத்தில் அழுத்திக்கொண்டு, உயிருள்ளவர்களிடம் பேசுவதுபோல அவற்றிடம் கெஞ்சுவான் ஸெர்கேய்: ''ஊம், பிடிவாதம் பண்ணுதீர்கள், தயவு செய்யுங்கள்... எனக்கு உதவ நீங்கள் ஏன் விரும்பவில்லே? இப்போதுதான் நீங்கள் என்னுடையவர்கள் ஆயிற்றே... நான் என்னே உங்களுக்குப் பழக்கிக்கொண்டேனே, அதற்காக எவ்வளவு பாடு பட்டேன்! அதெல்லாம் வீண்தானு?''

பற்களேயும் கால்களேயும் துணையாகக் கொண்டு, வளேயாக் கரு விரல்களில் பென்சிலே இடுக்கியவாறு ஒரு கஜ நீள எழுத்து ஒன்றையாவது எப்படியேனும் எழுதிவிடுவதற்கு ஸெர்கேய் தொடர்ந்து முயன்முன். அது கூட முடியவில்லே. இனிமேல் பயனில்லே என்ற புகலற்ற சோர்வு வந்துவிட்டதும் ஸெர்கேய் செயற்கைக் கரத்தைக் கழற்றித் தரையில் எறிந்து அதை உதைத்தான். கால்கள் சிருய்ப்புக் கண்டு இரத்தம் கசியும்வரை, தான் களேத்துப் போகும் வரை அதை ஆவேசத்துடன் உதைத்துக்கொண்டிருந்தான். வாழ்க்கை முடிந்துவிட்டது என்று மறுபடி அவனுக்குத் தோன்றியது.

## பெத்ரோவ் தம்பதியின் குடும்ப நாட்குறிப்பிலிருந்து

நாட்குறிப்புப் புத்தகத்தில் சில பக்கங்கள் வெற்ருக விடப்பட்டிருக்கின்றன. அப்பாலுள்ள குறிப்புக்கள் வெவ்வேறு புறங்களில் பாங்கின்றி வளைந்து நெளிந்து சென்றிருக்கும் பருத்த அச்செழுத்துக்களில் பென்சிலால் எழுதப் பட்டிருக்கின்றன.

* * *

**மார்ச், 17.** வெற்றி, தான்யா! எழுதுகிறேன்! நானே! நானே! நானே! எழுதுகிறேன்!

* * *

இரவு இரண்டு மணி. காலையில் நீ என் இராயசத்தைச் சரி பார்ப்பாய். தயவு செய்து ஃபெயில் மார்க்கு போட்டு விடாதே. உண்மையான அரிச்சுவடி வகுப்புப் பையன்போல அவ்வளவு பொறுமையுடன் நான் வரைந்த சாய்கோடுகளுக்கும் வளைகோடுகளுக்கும் நீ ஏற்கனவே ஃபெயில் மார்க்குகளை அட்சய பாத்திரத்திலிருந்து போல அள்ளிச் சொரிந்து விட்டாய். இப்போது எனக்கு நூற்றுக்கு நூறு மார்க்கு போடு, என் கண்டிப்பான ஆசிரியையே. எனக்கு அந்த மார்க்கு வாங்க ஆசையாய் இருக்கிறது. ஒரு விஷயத்தை நீ புரிந்துகொள்ள மறுக்கிருய்: மிக மோசமான அரிச்சுவடி வகுப்புப் பையன்கூடச் சாய்கோடுகளைக் கையினல் வரைகிருன், நானே, பற்களால் வரைகிறேன்.

* * *

நான் ஆனந்தக் கண்ணீர் பெருக்குகிறேன். பற்களால் பென்சிலைக் கடித்துக்கொண்டு அரிச்சுவடி வகுப்புப் பாட முறைப்படி நீ வரைந்த சாய்கோடுகளுக்கும் வளைகோடுகளுக்கும் நான் கொடுத்த ஒவ்வொரு ஃபெயில் மார்க்கும் ஐந்து ஐந்து நூறு மார்க்குக்களுக்குச் சமம். உன்னுடைய மாவீர உழைப்பையும் பிடிவாதத்தையும் விடாமுயற்சியையும் வழக்கமான குறியெண்களால் மதிப்பிடுவது எங்கேனும் முடியுமா?

சில சிக்கலான எழுத்துக்களைத் திருத்தமாக எழுதப் பழகு. ஒவ்வோர் எழுத்தையும் இருநூறு தடவை எழுதுக.

* * *

மார்ச், 20. ஓர் இரண்டு மாதங்களில் நன்றாகவே எழுதத் தொடங்கிவிடுவேன். கண்களும் தாடையும் வலிக்காமல் இருக்க வேண்டும், அவ்வளவுதான். எழுத்தின் அமைப்பு எப்படி இருக்குமோ?

நேற்று நகரத்தில் போர்யா குலாக்கோவைச் சந்தித்தேன். இராணுவ சேவைக் காலத்து நண்பன். மணமாகிவிட்டது. ஒரு மகள் இருக்கிறாள். அவன் மட்டும் கொஞ்சங்கூட மாறவில்லை. இராணுவ அனுபவங்களை நினைவுபடுத்திக்கொண்டோம். போர்யா அவ்வளவு இங்கிதம் தெரிந்தவன் என்று நான் நினைக்கவே இல்லை. என் மனம் புண்படுமே என்பதற்காகவோ என்னவோ, எல்லாம் எப்படி நேர்ந்தது என்று அவன் கேட்கவே இல்லை. தன் முகவரியைக் கொடுத்துவிட்டு, ''என் உதவி தேவைப்பட்டால், கூச்சப்படாமல் என்னைக் கூப்பிடு'' என்றான். அவன் இருப்பதோ, கஸான் நகரத்தில். தற்செயலாக ஏதோ வேலை நிமித்தம்

இங்கே வந்தான். ''கூப்பிடு'' என்கிருன்.. இல்லே, போர்யா, நான் கூப்பிட மாட்டேன்.

முன்பு உன் இளங் கம்யூனிஸ்டுகள் சங்க அமைப்பாளனுக இருந்த அந்த ஆள் அல்ல நான் இப்போது. மனிதர்களிடம் கூச்சப்படத் தொடங்கியிருக்கிறேன். எனக்குள் ஏதோ முறிந்து விட்டது.எது என்பதை நானே அறியேன்.

* * *

நாம் ஒருவருக்கும் தேவை இல்லே என்ற உணர்வே யாவற்றிலும் கடினமானது. கைகளே இழந்ததும் அறுவைகளின் எல்லாத் துன்பங்களே யும் அனுபவித்ததும் எல்லாவற்றையும் விடப் பயங்கரமானது அல்ல. ஆற்றல்கள் மலர்ச்சி அடைந்திருக்கும்இளமைப் பருவத்தில் வாழ்க்கைக் கப்பலிலிருந்து வெளியே விழுந்து விடுவது, சமூ கத்துக்கு நாம் தேவை இல்லே என்பதை உணர் வது—ஒரு மனிதனுக்கு ஏற்படக்கூடிய மிகக் கொடிய சோதனே இதுவே.

* * *

நண்பர்களின் கடிதத்திலிருந்து. ''...இன்ெனுரு தகவலும் உனக்குத் தெரிவிக்கிருேம்—எங்கள் கம்யூனிஸ முறை உழைப்புக் குழு ஒவ்வொரு முறை நேரத்திலும் திட்டத்திற்கு மேல் ஒரு அளவுமானம் வேலே அதிகப்படியாகச் செய்கிறது. நாங்கள் ஒன்பது பேர், ஆனுல் எங்கள் இதயங் களில் நீ பத்தாமவன். ஆகவே உன் சுரங்கத் தொ ழில் விளக்கு அணேயவில்லே! நீ சுரங்கக் குடியிருப் பில் வசிக்க ஒருப்படாதது பற்றி இங்கே எங்கள் எல்லோருக்கும் நிரம்ப வருத்தம். குடியிருப்பு அடையாளம் காண முடியாதபடி மாறியிருக் கிறது. கோடையில் பசுமை நகரை மூழ்கடித்து

விடுகிறது. செடிகள் நாட்டும்படி நீ சொன்ன யோசனே மிகவும் பயன்பட்டது. அந்தப் பள்ளத்திலிருந்து ஆறுயிரம் கன்றுகள் நட்டிருக்கிரும். இன்னெரு தரம் நினைவுபடுத்துகிருேம்: நீ ஆகட்டும் என்று சொல்லு. மறு கணமே உங்களை இங்கே குடியேற்றி விடுகிருேம். எந்த மாதிரி வீடு வேண்டும் என்பாயோ அந்த மாதிரிக் கிடைக்கும்.''

* * *

ஒருவேளை அது தவருே? ஒருவேளை, 'கொஞ்சரோவும் ராஃபிக்கும் சொன்னது சரிதானே? இல்லை, இல்லை, இல்லை... காயமடைந்தவன் போரிடச் செல்பவர்களுக்கு எப்போதும் மனச் சோர்வு தான் ஏற்படுத்துவான்.

* * *

மார்ச், 27. மின்மட்ட மாற்றி விசையை அணைக்க ஓடும்படி என்னைத் தூண்டியது எது? அது அபாயம் என்பதுதான் எனக்குத் தெரிந்திருந்ததே.

எதுவோ, சைத்தானே அறிவான் .. அணைக்க ஓடியபோது நான் எதைப் பற்றியும் நினைக்கவில்லை. அங்கே, வெட்டு முகப்பில் இருந்த நண்பர்களின் முகங்கள் கண்முன் பளிச்சிட்டன, அவ்வளவு தான்...

* * *

வாழ்க்கையின் உட்பொருள் என்ன? இந்தக் கேள்விப் பாறைமேல் பட்டு எத்தனையோ ஈட்டிகள் முறிந்துவிட்டன! அந்த விவாதங்களை இப்போது நினைத்துப்பார்க்கையில் சிரிப்புதான் வருகிறது. உழைப்புக்கு முதன்மை கொடுக்காவிட்டால் உட்பொருள் என்ற பேச்சுக்கே இடமேது?

வழக்கமான, அன்றாட, நேர்மையான உழைப்பு. உழைக்கும் வாய்ப்பை மனிதனிடமிருந்து பிடுங்கி விட்டால் வாழ்க்கையின் நலங்கள் எல்லாம் பொருள் அற்றுப் போய்விடும்.

* * *

**மார்ச், 30.** ''புத்தக உலகில்'' என்னும் மாஸ்கோச் சஞ்சிகை, தனி ஆட்களின் புத்தகசாலைகள் பற்றிக் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ளும்படி வாசகர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறது. எழுதிப் பார்த்தால் என்ன? என் அனுபவம் பெரியதில்லைதான். என்னிடம் புத்தகங்களும் அத்தனை நிறைய இல்லைதான். ஆனால் இவ்வளவுகூட இல்லாத மனிதர்களும் இருக்கிறார்கள் அல்லவா!

* * *

கைகள் இல்லாதவனாக என்னை நான் கனவில் காண்பதே இல்லை. எனக்கு ஏதோ குறைபாடு இருப்பதாக எப்போதுமே கனவில் தோன்றும். ஆனால் அந்தக் குறைபாடு என்ன என்பது புரியாது. இன்று கனவில் வாலிபால் ஆடினேன். நான் அடித்த ''ஷாட்டுக்களை'' எல்லோரும் ஆகாகா என்று வியந்து பாராட்டினார்கள். விழித்துக்கொண்டபோது நெற்றியில் குளிர் வியர்வை துளித்திருந்தது. மனத்தில் அதே கேள்வி: ''வாழ்வே, நீ தான் எப்பேர்ப்பட்ட முள்! எல்லாப் பக்கங்களிலுமிருந்து குத்துகிறாயே...''

* * *

கைகளால் புழங்குவதற்கு ஏற்றபடி சாமான்கள் வியப்பூட்டும் லாகவத்துடனும் சௌகரியமாகவும் எளிமையாகவும் விவேகத்துடனும்

அமைந்திருக்கின்றன. அவை அவ்வளவு எளிமையாகவும் விவேகத்துடனும் அமைந்திருப்பதால் கைகள் இருக்கும்போது இந்த விஷயத்தைப் பற்றிய சிந்தனையே மனத்தில் எழுவதில்லை. ஆனாலும் பல நூற்றாண்டுப் பழக்கங்களைவிட மனிதன் அதிக வலிமை உள்ளவன் அன்றோ!

எழுத்தை எடுத்துக்கொள்வோம். இதற்காக எவ்வளவோ கஷ்டங்கள் பட நேர்ந்தன என்பது உண்மை தான். ஆனாலும், பென்சிலைக் கடித்து இறுக்கிக்கொண்ட பற்கள் கைகளின் இடத்தில் பயன்படத்தானே செய்தன. இதை விட வியப்பு அளிப்பதும் புரியாததும் எழுத்து வடிவின் இயந்திரப் பான்மை. தொழிற்பள்ளியில் நான் கையால் எழுதியவற்றுடன் இதோ, இப்போது பற்களால் எழுதியவற்றை ஒப்பிட்டுப் பார்க்கிறேன்—ஒரு வித்தியாசமும் இல்லை.

* * *

நான் இறந்து போயிருந்தால் என்ன ஆகியிருக்கும்? சூரியன் இதேபோல ஒளி வீசிக்கொண்டிருக்கும், மரங்களின் இலைகள் சலசலத்துக்கொண்டிருக்கும், வானொலியில் இதே பாட்டுக்கள் இசைத்துக்கொண்டிருக்கும், அறை இதே மாதிரி இருக்கும்... ஆனால் தான்யாவோ? பயங்கரமாய் இருக்கிறதா? ஆமாம். ஆனால் எல்லாவற்றிலும் பயங்கரம், உலகில் என் சுவடு இல்லாததுதான்.

* * *

வாழ்க்கைக்கு மரணம் இல்லை. வாழ்க்கை அமரத்தன்மை வாய்ந்தது. மனிதன் தன் வாழ்நாளில் நல்லது எதுவுமே செய்யாதபோது, நற்

செயல் எதுவும் புரியாதபோதுதான் மரிக்கிறுன். அதுவும் மிக உண்மையான, மிகப் பயங்கரமான மரணம் அடைகிறுன்.

தன் உழைப்பால் உலகை அழகுபடுத்ாதவன் என்றென்றும் இறப்பை எய்தி விடுகிறுன், ஏனெனில் பிற்காலச் சந்ததியினரின் செயல்களிலும் நினைவிலும் வாழ்ந்திருக்கக் கூடிய எதுவும் அவனுக்குப் பிறகு எஞ்சியிருப்பதில்லை.

* * *

தான்யாவின் தோழியுடைய பிறந்த நாளைக் கொண்டாடினேம். கொண்டாட்ட விருந்துக்கு வந்தவர்கள் பெரும்பாலும் இளைஞர்கள். குடித்தார்கள், நடனம் ஆடினுர்கள், பாடினுர்கள். பட்டுப்பூச்சிக் கழுத்துக் குட்டை கட்டியிருந்த ஒரு டம்பாச்சாரி வேடிக்கைக் கதைகள் ஆளுக்கு ஒன்ருக, வரிசையாய்ச் சொல்லுவோமே என்ருன். முதல் கதையைத் தானே சொன்னுன்— ஒரு பெண்ணைப் பற்றிய, கீழ்த்தரமான, ஆபாசக் கதை... எல்லோரும் அசிங்கம் பட்டுவிட்டது மாதிரி உட்கார்ந்திருந்தார்கள், ஓரிருவர் ஒப்புக்குச் சிரிக்கக்கூடச் செய்தார்கள். என்னுல் தாங்கமுடியவில்லை. எழுந்திருந்தேன்... அந்தப் பயல் மூஞ்சியில் அறைய வேண்டும்போல் இருந்தது... மன்னிப்பு கேட்கும்படி கோரினேன். அவன் கேலியாகப் பேசி மழுப்பப் பார்த்தான்:

''பெண்பிள்ளைகளுக்குப் பரிந்து கொண்டு வராதே. இவர்கள் எல்லோருமே அப்படித்தான்!'' என்ருன்.

நானும் தான்யாவும் மற்றவர்களிடம் சொல்லிக்கொண்டு வெளியேறிவிட்டோம். அப்போது எனக்கு உண்டான ஆத்திரத்தைச் சொல்லி முடி

யாது. எவனே நேற்றுப் பிறந்த பயல், கீழ்த்தர மான எண்ணங்களை ஆதாரமாகக் கொண்டு தர்க்கம் செய்ய வந்துவிட்டான். ''எல்லோருமாம்...'' அப்படியானுல் உன் தாயாரும் லட்சோபலட்சம் மற்றவர்களின் தாயார்களுமோ?

அந்த அற்பப் பயல் இன்றைக்கு எங்கள் வீட்டுக்கு வந்தான். தான் அன்று பேசிய ''குடிகாரப் பேச்சுக்காக'' அனேகமாக முழந்தாள் படியிட்டு மன்னிப்பு வேண்டினுன். எங்களைப் பற்றித் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று இன்னும் என்னென்னவோ சமாதானம் கூறினுன். அக்கறைக்குரியது என்னவென்ருல் உளப்பூர்வமாகப் பேசினுன் என்பதே. நாங்கள் அவனிடம் உரையாடினேம். அவன் அப்படி ஒன்றும் மோசமானவன் அல்ல. ஏதேதோ சப்புச்சவற்றை எங்கேயோ கேட்டுவிட்டுவந்து, தான் பிரமாதச் சாதுரியவான் என்று காட்டிக்கொள்ள முயன்றிருக்கிருன்.

* * *

ஏப்ரல், 13. வசந்தம்!... எதனுல் இவ்வளவு ஏக்கம்? ஆம், ஆண்டு நிறைவு.

ஆயுள் முழுவதும் கைகள் இல்லாமல் திண்டாட நேரும் என்று தெரிந்திருந்தால் நான் அன்று மின்விசையை அணைக்கப் போயிருப்பேனு?

அப்படியானுல், மின்மட்ட மாற்றி வெடித்த பிறகு வெட்டு முகப்பில் இருந்த தொழிலாளர்களுக்கு என்ன நேரும் என்பதும் எனக்குத் தெரிந்திருக்குமே. ஒன்றும் நேராது என்ருல் போயிருக்க மாட்டேன். நேரும் என்ருல் கட்டாயம் அணைக்கப் போயிருப்பேன்.

* * *

முன்னே வெறுமை, பின்னே, ஆழ் கிடங்கு. பின்வாங்கினல் விழ வேண்டியதுதான். உளப் புண் உடம்புக் காயத்தை விட அதிக வலி தருவது. இதை என்னால் வெற்றி கொள்ளவே முடியாதா?

ஆமாம், ஸெர்கேய், முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டாயானல் உலைந்து போவாய். அப்புறம் எதுவும் உனக்கு உதவாது.

* * *

ஏப்ரல், 17. ''அமைதியாகப் பெருகும் தோன் ஆறு'' என்ற ஷோலகவின் நவீனத்தைத் திரும்பப் படித்தேன். நான் தோன் ஆற்றைப் பார்த்ததே இல்லை, உண்மையான கஸாக்கியர்களையும் கண்டதில்லை. ஆயினும் எல்லாம் இப்படித்தான் இருந்திருக்கும் என்று நம்புகிறேன். ஆனல் கறுப்புச் சூரியன்!

ஆமாம், சூரியன் கண்கள் கூசும்படி ஒளி வீசுவதாக மட்டுமே அல்ல, வேறு விதமாகவும் இருக்க முடியும்!

* * *

அட கடவுளே, நான் அறிந்ததுதான் எவ்வளவு சொற்பம்! அன்றாடத் திட்டத்தை மாற்றி அமைக்க வேண்டும், இன்னும் நிறையக் காரியங்களைப் புகுத்த வேண்டும். ஒரு மனிதன் ஆகக் குறைந்தது எவ்வளவு நேரம் தூங்கினல் போதும் என்று தெரிந்தால் நல்லது!

* * *

ஸெர்கேய், இது சரி அல்ல. நீ எழுதப் பயின்றது முதல் நாட்குறிப்பு எழுதுவதில் நான் பங்கு கொள்வதே இல்லை.

சில எழுத்துக்களை நீ இப்போதும் மிக மோசமாக எழுதுகிறாய். உனக்கு வெட்கமாய் இல்லையா?

* * *

கோல்யா கொஞ்சரோவ் வந்தான். வீட்டுக்குள் வந்ததும் வழக்கம் போலக் கைகுலுக்குவதற்காகக் கரத்தை நீட்டினான். சட்டென்று நினைவுபடுத்திக்கொண்டு கூச்சமடைந்து என்னைக் குழந்தைபோல மார்போடு அணைத்துக்கொண்டான். அட, கோல்யா, கோல்யா... வேறு சுரங்கத்தில் வேலை ஏற்றுக்கொண்டிருக்கிறான். ராஃபிக் உயர் கல்வி பெறக் கல்லூரியில் சேர்ந்திருக்கிறான். இக்னாத்தவ் இராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டிருக்கிறான். சுரங்கத் தலைமை அலுவலர்கள் மாறிவிட்டார்கள். மொத்தத்தில், என் சொந்த வீடுபோன்ற சுரங்கம் அடையாளம் காண முடியாதபடி மாறிவிட்டது. எத்தனை நல்ல செயல்களை நாம் நினைவுபடுத்திக்கொண்டோம், என் நண்பா! ரயில் நிலையத்திலோ, அவசரமாக முத்தமிட்டுவிட்டு வண்டிக்குள்ஓடிப்புகுந்துகொண்டாய். நீ தேம்பி அழுதாயாம், தான்யா சொன்னாள். கோல்யா, நீ என்மேல் இரக்கம் கொண்டாயா என்ன? நான் நம்பவில்லை. இந்த நிலையில் நண்பனைப் பார்த்ததில் உனக்கு வருத்தம் ஏற்பட்டிருக்கும், அவ்வளவுதான்...

* * *

**ஏப்ரல், 22.** ஹுர்ரா! ''புத்தக உலகில்'' என்னும் சஞ்சிகையின் ஆசிரியக் குழுவிடமிருந்து பதில் வந்திருக்கிறது. நூலகம் பற்றிய என் கட்டுரை கடிதப் பார்வையீட்டில் பயன்படுத்தப்

படுமாம். ஆகவே, என்னால் முடியும்! எதனு லாவது மக்களுக்குப் பயன்பட இப்போதும் என்னால் முடியும்!

* * *

ஒருவனைக் கண்டேன். அவன் சொன்னான்:

''உன் இடத்தில் நான் இருந்தால் குடிப்பதும் உறங்குவதுமாகக் காலந்தள்ளுவேன். பணமோ கொடுக்கிறார்கள், வேறு என்ன வேண்டும்?''

ஆபாசம் பிடித்த பேச்சு! அவன்வரையில் துயரத்துக்கு ஒரே மருந்து வோத்காதான்!

* * *

மே, 1. அந்த அறுவை நடந்து ஓர் ஆண்டு ஆகி விட்டது... ஓர் ஆண்டு... இது எவ்வளவு நீண்ட காலம்! இந்த நாளை எவையேனும் வெற்றிகளால் கொண்டாடாவிட்டால் அது உண்மையாகவே இழவு நாள் ஆகிவிடும். அப்புறம் மீளவே வழி இல்லை...

* * *

புதிய கட்டுரை எழுதி முடித்தேன். மிகவும் நீண்டுவிட்டது. இதை யாரேனும் கட்டாயம் படிப்பார்கள் என்று எண்ணும்போதே எனக்கு உதறல் எடுக்கிறது. ஒருவேளை இது யாருக்குமே தேவை அற்றதாக இருக்கலாம். நான் படிப்பவர் களின் நேரத்தைப் பறிப்பேன்...

ஒரு பெரிய விஷயம் உள்ளத்தை அரித்துக் கொண்டிருக்கிறது. அதைச் சீரணிப்பது கொடிய வேதனை. அதைப் பற்றிச் சிந்திக்காமல் இருப் பதோ, இன்னும் கடினம். என்னால் முடியுமா?

முயன்று பார்க்க வேண்டும். அறுவை மேஜை மேல் செய்ததுபோலவே பல்லைக் கடித்துக்கொண்டு முன்னேறு, ஸெர்கேய். இருதயமே, இவ்வளவு படபடக்காதே. எல்லாவற்றையும் நீ அடி முதல் திரும்ப அனுபவிக்க வேண்டி வரும். கடினமாகத் தான் இருக்கும், முதல் தடவையைவிட எளிதாய் இராது. ஆனாலும் இது தேவை, தேவை...

* * *

நானும் தான்யாவும் சேர்ந்து எதிர்கொள்ளும் முதல் வசந்தம் இதுவே. இதைப் பற்றி எத்தனை கனவுகள் கண்டோம்! இராணுவமும், படிப்பும், மருத்துவ மனையும்எங்கள் வழியில் குறுக்கிட்டன... வசந்தம் ஆண்டு தோறும் வந்து போயிற்று, ஆனால் நாங்கள் பிரிந்திருந்தோம்.

வணக்கம், வசந்தமே!

* * *

ஸெர்கேய், நமக்குக் குழந்தை பிறக்கப்போகிறது...

* * *

தான்யா, என் அருமைத் தான்யா, தான்யாக் கண்ணே! எனக்கு இனியவளே! என் காதலி! என் அன்புக் கதிர் விளக்கே!...

* * *

கன்ஸ்தாந்தீன் ஸீமனவ் இயற்றியுள்ள கவிதை இப்போது எனக்குச் சிறப்பாக இனிக்கிறது:

> ''பொறுத்திரு, நான் திரும்பிடுவேன்,
> பொல்லாச் சாவுக்கே சவால் விடுவேன்...''

செய்யுளின் கடைசி வரிகள் எனக்கு எல்லா

வற்றிலும் முக்கியமானவை:

**''எப்படி உயிர் பிழைத்தேன் என்பதை நானும் நீயும் மட்டுமே அறிவோம்...''**

* * *

இந்த நாட்களில் எல்லாம் நான் இன்ப வெறியில் திளைக்கிறேன். எனக்குக் கைகள் இல்லை என்பதை மறந்துவிடுகிறேன். எனக்குச் சிறகுகள் முளைத்துவிட்டன. மலர் கொஞ்சும் இன்ப உலகுக்கு மேலே எங்கோ நான் பறக்கிறேன், பறந்துகொண்டே இருக்கிறேன். சில வேளைகளில் கவலை மேகம் சூழ்கிறது: எல்லாம் நலமே நடந்தேறுமா?

நீ எப்படி இருப்பாய், நான் அறியாத, எனக்கு இனிய குழந்தாய்? இத்தனை துன்பங்கள் பட்டுவிட்ட பின், எளிய, அவ்வளவு விரும்பத்தக்க மனித இன்பம் நம் வீட்டையும் நகையுறுத்தும் என்று நம்பவே முடியவில்லை.

## வாசக நேயர்களுக்கு

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்து வரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் யோசனைகளை வரவேற்கவும் முன்னேற்றப் பதிப்பகம் மகிழ்வுடன் காத்திருக்கிறது.

கடிதங்களைத் தயை செய்து
"Progress Publishers, 21,
Zubovsky Boulevard, Moscow, USSR"
என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

